


கடுமையான பேதி மருந்துகள் வயது வந்தோரின் குடலைக்கூட பலவீனப்படுத்திவிடும்... குழந்தைகளுக்கு அவை எவ்வளவு தீங்குசெய்யும் என்பதை சற்று நினைத்துப்பாருங்கள்! கடுமையான பேதி மருந்துகளை உட்கொண்டால் குழந்தைகளின் குடல்கள் இயற்கையாக இயங்கும் தன்மையை இழக்கின்றன; உங்கள் குழந்தை பேதி மருந்துகளுக்கு அடிமையாக நேரிடும். இதற்கு இடம் தராதீர்! உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியாவைக் கொடுங்கள்

பிலிப்ஸ் மிகவும் இதமானதால் குழந்தைகளுக்கும் சிபார்சு செய்யப்படுகிறது....ஆயினும், வயது வந்தோரும் முதல் தடவை உபயோகத்திலேயே மலச்சிக்கலிலிருந்து பூரண நிவாரணம் பெறும் வகையில் அது பலன் தரத்தக்கது.




**மீண்டும் இந்தியாவில் கிடைக்கிறது.**

பிரசித்தமான பிலிப்ஸ் தூய்மைக்கும், தரத்திற்கும் உத்தரவாதமளிக்கும் புதிய, திருமுடியாத, விசேஷ முடியுள்ள புட்டிகளில் 2 அவுன்ஸ், 4 அவுன்ஸ், 12 அவுன்ஸ் அளவுகளில் கிடைக்கிறது.

பிலிப்ஸ் குணமளிப்பது இவ்வாறே... 1. கடுமையான பேதி மருந்துகளைப் போலன்றி பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியா காய்ந்து போய் அடைத்துக் கிடக்கும் கழிவுப் பொருள்களை சரப்படுத்தி, அவற்றை உங்கள் உடலிலிருந்து வெளிப்படுத்த, வலி அல்லது தளர்ச்சி ஏற்படாமல் தசை நார்களை இதமாக ஊக்குகிறது.

2. பேதிப்பது மட்டுமே செய்யும் பேதி மருந்துகளைப் போலன்றி பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியா உங்கள் வயிற்றைச் சில விநாடிகளிலேயே சமனப்படுத்தி நிவாரணத்தைப் பரிபூரணமாக்குகிறது. ஜீரண உறுப்புகளைச் சரியான சம நிலைக்குக்கொண்டு வருகிறது. வாயு உபாதைகளையும், வயிற்றில் எரிச்சலையும், அதிகரித்த அமிலத்தால் ஏற்படும் அஜீரணத்தையும் நிவர்த்திக்கிறது.




# பி லி ப் ஸ்

உண்மையான மில்க் ஆப் மக்னீஸியா

பூரண விநியோகஸ்தர்கள்:

**டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

கல்கத்தா-பம்பாய்-டெல்லி-சென்னை-பாட்னா-கௌஹாத்தி-கட்டாக்



# கல்கி பொருளடக்கம்

சார்வரி, தை 23 ❊ பிப்ரவரி 5, 1961



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 27

# நல்ல அறிகுறிகள்

ருஷ்யா, இரண்டு அமெரிக்க விமானிகளை விடுதலை செய்து விட்டது என்றும், ருஷ்யாவின் வானவெளிமீது அமெரிக்க வேவு விமானங்கள் பறக்காது என்றும் செய்திகள் பத்திரிகைகளில் வந்துவிட்டன. இதைப் படித்தபோது ருஷ்யா அமெரிக்காவுடன் மீண்டும் நேசப்பான்மை வளர்த்துக் கொள்ள விரும்புகிறது என்பது தெளிவாகி விட்டது.

அதேபோல் புதிதாக வந்துள்ள அமெரிக்க ஜனாதிபதி கென்னடி ருஷ்யாவுடன் சமாதான நடவடிக்கைகள் ஆரம்பித்து விட்டார் என்பதும் தெளிவாகி விட்டது.

புதிய அமெரிக்க ஜனாதிபதி கென்னடி "நடந்து போனவற்றை மறந்து விடுவோம், புதிதாக நேசத்தை வளர்த்துக் கொள்வோம்" என்று சொல்லி ருஷ்ய அமெரிக்க உறவில் புதிய அத்தியாயத்தைத் தொடங்கியிருக்கிறார். இந்தத் துணிச்சலான நல்லெண்ணச் செய்கையை உலகம் வரவேற்கிறது.

ருஷ்யாவும் அமெரிக்காவும் சேர்ந்து, அணுகுண்டு ஜலஜ குண்டுகளை இனி உற்பத்தி செய்வதில்லை, கைவசமிருப்பவைகளை ஒழித்து விடுவோம் என்ற முடிவுக்கு வந்தாலே உலகம் எவ்வளவோ நன்றி செலுத்தும். இந்த இரண்டு நாடுகளும் இந்தக் குண்டுகளைக் கைவசம் வைத்திருப்பதால், பிரிட்டன் அவற்றைச் செய்யத் தொடங்கியது. பிரிட்டன் செய்யத் தொடங்கியதால் பிரான்ஸ் செய்யத் தொடங்கியது! பெரிய வல்லரசுகளான அமெரிக்காவும் ருஷ்யாவும் பிரிட்டனையோ, பிரான்ஸையோ, "செய்யாதே" என்று தடுக்க தார்மீக பலம் அற்றுப்போய் விட்டன. அமெரிக்காவும் ருஷ்யாவும் சோதனை செய்த வெடிகுண்டுகள் பரப்பிய விஷமே வானமண்டலம் தாங்கக் கூடியதாக இல்லை. அவை பின்சந்ததிகளுக்குத் தீங்கு விளைவிக்கும் என்கிறார்கள் விஞ்ஞானிகள். இந்நிலையில் ஒவ்வொரு நாடும் அணுகுண்டுகளைச் செய்யத் தொடங்கினால் உலகின் கதி என்ன ஆவது?

அமெரிக்காவும் பிரிட்டனும் பசிபிக் சமுத்திரத்தில் சோதனைக் குண்டுகளை வெடிக்கச் செய்தன. ருஷ்யா ஸைபீரியாவிலோ, அதன் நாட்டு யூரல் மலைகளிடையேயோ வெடிக்கச் செய்தது. பிரான்சு ஸகாரா பாலைவனத்தில் ஆப்பிரிக்க மக்களின் பெரும் கண்டனத்தையும் பொருட்படுத்தாமல் வெடிக்கச் செய்தது! இப்படிச் சோதனை குண்டுகளின் மூலமாகவே, உலகுக்குப் பெரும் தீங்கு விளைந்துவிடக் கூடிய சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. இதைத் தடுக்க அமெரிக்காவினாலும் ருஷ்யாவினாலும்தான் முடியும்.

இரு வல்லரசுத் தலைவர்களும், தங்கள் கைவசமுள்ள குண்டுகளை ஒழித்து விட்டுத் தார்மீக பலம் பெற்றாலன்றி, மற்ற நாடுகளைக் கட்டுப்படுத்த முடியாது. இந்த நல்ல பணி புரிய ருஷ்யாவும் அமெரிக்காவும் தொடங்கியுள்ள நேச உறவு வலுவடையட்டும்.

ஒரு விஷயம் இப்பொழுது வெட்டவெளிச்சமாகி விட்டது. இந்தப் பிசாசு ஆயுதங்களை, அதாவது ஒரு வெடியில் பெரும் பிரதேசத்தை நிர்மூலமாக்கும் ஆயுதத்தை, தற்காப்புக்கு மட்டும் உபயோகப்படுத்துவோம் என்று சேமித்து வைத்து வருகிறார்கள். அதன் பொருள் என்னவென்றால் எதிர்க்கட்சி திடீரென்று உபயோகித்து விட்டால் தாமும் உடனே எதிரிடையாக உபயோகித்து விடலாம் என்பதுதான். இந்தத் திட்டத்தின் விளைவாக இரு கட்சியிலுமுள்ள இந்த ஆயுதங்கள் உறங்கிக் கிடக்கும். இதற்

காகவே அளவற்ற செலவு இரு கட்சி யிலும் செய்து வருகிறார்கள். இதைவிடப் பைத்தியக்காரத்தனம் வேறுகிடையாது.

மற்றொருவிஷயமும் இப்போது வெளிப் படையாகிவிட்டது. அமெரிக்காவிடம் நேசம் செய்து கொண்டிருக்கிற வேறு நாடுகளின் பாதுகாப்புக்காக ஒருநாளும் அமெரிக்கா தேசம், அணுகுண்டு யுத் தத்தை ஆரம்பிக்காது. அமெரிக்கா வின் மீது அணுகுண்டுப் பிரயோகம் நடந்தாலொழிய அமெரிக்காவானது அணுகுண்டைப் பிரயோகிக்காது. அதேபோல் ருஷ்யாவும் பிறநாடுகளின் நன்மையைக் கருதித் தன்னுடைய அணு குண்டுகளை ஒருநாளும் பிரயோகிக்காது. பிரயோகித்து அணுகுண்டு யுத்தத்தை ஆரம்பித்து வைக்காது.

ஆகையால் இரு கட்சி நேசநாடு களும் அணுகுண்டை நம்பிப் பிழைப்பது மடமையாகும். ஆகவே, உலகம் முழுதும் நாசகர அணுகுண்டுகளை முற்றிலும் பகிஷ்கரிப்பதற்கு ஒரு தடையுமில்லை.

# நமது ஆலயங்களும் நாமும்

நமது ஆலயங்கள் கலைக்கு உறை விடம். பக்திக்கு ஒரு நிலையம். பண்பாட் டுக்கு ஒரு களஞ்சியம்.

சமீப காலத்தில் நமது கோயில் களைப் புனர்நிர்மாணம் செய்யப் புது முயற்சி நடைபெற்று வருவது கண்டு மகிழ்ச்சியும் திருப்தியும் அடை யாதவர்கள் இருக்க முடியாது. சமீபத் தில் சிதம்பரம் கோயில் புதுப்பிக்கப்பட் டுக் கும்பாபிஷேகம் நடந்தது. மதுரைக் கோயில் திருப்பணியும் தொடங்கப்பட் டிருக்கிறது.

இதனிடையில் திருநீர்மலை ஸ்ரீ ரங்க நாத சுவாமி கோயிலின் ஜீர்ணோத்தார ணத்துக்கு முயற்சிகள் நடைபெற்று வரு கின்றன. இக்கோயிலுக்குப் பரம்பரை தர்மகர்த்தாவான ஸ்ரீ வரதப்பன் இந்தப் பணியில் மிகுந்த ஆர்வத்தோடு ஈடுபட் டிருக்கிறார் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

இப்பணியைச் சென்ற வாரம், அற நிலையப் பாதுகாப்பு மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் தொடங்கி வைத்தார்கள்.

திருநீர்மலை சென்னையிலிருந்து பதி னேழு மைல் தொலைவில் இருக்கின்றது. ஒரு சிறு குன்றின்மேல் ஸ்ரீ ரங்கநாதர் பள்ளி கொண்டிருக்கிறார். மிக அழகிய கோயில். இயற்கை வளம் கொழிக்கும் சூழ்நிலையில் அமைந்துள்ளது. இந்தக் கோயிலின் திருப்பணி ஆஸ்திக மக்களின் ஆதரவினால் வெகு விரைவில் பூர்த்தி பெறும் என்று நம்புகிறோம்.

ஆஸ்திக அன்பர்களுக்கும், அறநிலையப் பாதுகாப்பு இலாகாவுக்கும், புதை பொருள் இலாகாவினருக்கும் இங்கு ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறோம். புகழ் எய்திய சிதம்பரம், மதுரை போன்ற பெரிய கோயில்களுக்குப் பணம் திரட்டுவதும் திருப்பணி செய்வதும் சுலபம். ஆனால் திருநீர்மலை போன்ற சிறிய கோயில்களின் ஜீர்ணோத்தாரணத் தில் பொது மக்கள் அவ்வளவு ஈடுபாடு கொண்டிருக்க மாட்டார்கள். எனவே இதை அக்கறையுள்ளோர் கவனிக்க வேண்டியது மிக முக்கியமாகும்.

பாரத நாட்டில் சரித்திரம் எழுதி வைப்பதில்லை. நமது சரித்திரம், சாஸ் திரம், பண்பாடு வாழ்வு எல்லாம் சிறிய கோயில்களில் தான் கல்வெட்டுக்களாக வும் சித்திரங்களாகவும் சிற்பங்களாக வும் அமைந்து காணப்படுகின்றன.

## சுதந்திர நிதி

கல்கியில் ராஜாஜி அவர்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இணங்கிக் கீழ்க்கண்ட அன்பர்கள் சுதந்திர நிதிக்குப் பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

(23ந்-தேதி முதல் 28 – 1 – 61 முடிய)

| | | | |
|---|---|---|---|
| பி. சீனிவாசன் ... | 1 00 | வி. குருமூர்த்தி ... | 10 00 |
| ப. தானம்மாள் ... | 5 00 | எஸ். எம். கணேசபிள்ளை ... | 1 00 |
| கோபால கிருஷ்ணய்யர் ... | 20 00 | சூடாமணி அனந்தர் ... | 1 00 |
| எஸ். வி. ராமநாதன் ... | 5 00 | எஸ். சேஷகிரி அய்யர் ... | 5 00 |
| ஏ. குப்புஸ்வாமி ... | 10 00 | டி. ஆர். கிருஷ்ணன் ... | 1 04 |
| சுந்தரேச முதலியார் ... | 1 00 | ஒரு முஸல்மான் அன்பர் ... | 300 00 |
| என். பாலசுப்பிரமணிய அய்யர் | 1 00 | திருவாலங்காடு சுந்தரேசய்யர் | 51 00 |
| வி. என். சுப்பிரமணியம் ... | 2 00 | 10-1-60முதல் 21-1-61 முடிய | 577 01 |
| ஏ. ஆர். எஸ். ரத்தினம் ... | 5 00 | | |
| ஏ. சேஷாத்திரி ... | 2 00 | மொத்தம் வரவு | 998 05 |






திருநீர்மலை ஸ்ரீ ரங்கநாதசுவாமி கோயிலின் ஜீர்ணோத்தாரணப் பணியைச் சென்ற வாரம் கனம் பக்தவத்ஸலம் அவர்கள் ஆரம்பித்து வைத்தபோது எடுத்த படங்கள்.

சென்னையிலிருந்து விழுப்புரம் போகும் வழியில் பனைமலை என்றொரு சிற்றூர் இருக்கிறது. நேர் சாலையை விட்டுச் சிறிது தள்ளி, வயல்களிடையே மலை மீது ஒரு சிறு சிவன் கோயில் இருக்கிறது. பார்ப்பதற்குப் பாழடைந்த கோயில் என்றுதான் தோன்றும். அந்தக் கோயிலில், அஜந்தா வண்ண ஓவியத்துக்கு இணையாக மதிக்கப்பட வேண்டிய பல்லவர்காலத்து வண்ண ஓவியம் இருக்கிறது. ஆனால் இது கேட்பாரற்றுக் கிடக்கிறது.

சில மாதங்களுக்குமுன் பாராளுமன்ற அங்கத்தினர் திரு வி. ஆர். நரசிம்மன் அவர்களும், சில நண்பர்களும் இக் கோயிலைப் பார்த்துவிட்டு வந்தனர். திரு வி. ஆர். நரசிம்மனும், அவருடன் வந்த புதைபொருள் அறிஞரும், தக்கபடி பரிசீலனை செய்தால் இன்னும் சில அரிய ஓவியங்கள் கிடைக்கலாம் என்கின்றனர். இதனை முன்னிட்டுப் பாராளுமன்றத்தில் திரு வி. ஆர். நரசிம்மன் தனி அங்கத்தினர் தீர்மானம் கொண்டு வந்ததைப் பாராட்டுகிறோம். (தீர்மானம் நிறைவேறாதது வேறு விஷயம்.)

பனைமலையில் இப்படியோர் அரிய சித்திரம் இருப்பது புதை பொருள் இலாகாவுக்குத் தெரிந்திருந்தும், ஒருவித நடவடிக்கையும் எடுக்கவில்லை. அந்த ஓவியம் பல நூற்றாண்டுகளாக வெய்யிலிலும் மழைச் சாரலிலும், கொஞ்சம் கொஞ்சமாக அழிந்து கொண்டே வருகிறது. இதனால்தான் யாவரும் பெரிய கோயில்களின் ஜீர்ணோத்தாரணத்தை விடச் சிறிய கோயில்களில் அதிக சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும் என்கிறோம். சென்னை அறநிலைய இலாகாவும் இதைக் கருத்தில் கொள்ளும் என்று எதிர்பார்க்கிறோம்.

# என்ன சேதி?

## குடியரசுத் திருநாள்

குடியரசுத் திருநாள் என்பது தேசியத் திருநாள். பாரத நாட்டிலுள்ள எல்லா மக்களும் பங்கு எடுத்துக் கொண்டு மகிழ்ச்சியும் குதூகலமும் அடைய வேண்டிய திருநாள். காங்கிரஸ்காரர்கள் இந்தக் குடியரசுத் திருநாளை முழு அளவில் காங்கிரஸ் கட்சித் திருநாளாகவும், கட்சிப் பிரசாரத் திருநாளாகவும் மாற்றி விட்டார்கள். சென்னை நகர் முழுதும் எது தேசக் கொடி, எது காங்கிரஸ் கட்சிக் கொடி என்று வித்தியாசமின்றி மூவர்ணக் கொடிகளைக் கட்டித் தொங்க விட்டார்கள். மாட்டுப் பெட்டியை ஊர்வலமாக விட்டுக் கட்சிப் பிரசாரதினமாக்கி விட்டார்கள். குடிசைகளில் வாழ்வோருக்கு இலவசமாகக் கட்சிக் கொடிகள் வழங்கி, "இதுதான் தேசக் கொடி. இன்று இதை ஏற்ற வேண்டும்" என்று சொல்லியிருக்கிறார்கள். புதிதாக ஜனநாயகம் தோன்றியுள்ள நாட்டில் புதிய சம்பிரதாயங்களையும் தேசிய அடிப்படையில் ஏற்படுத்தித் தரவேண்டிய பொறுப்பு ஆளும் கட்சியினருக்கு உண்டு. எல்லாக் கட்சி மக்களையும் இணைத்துத் தேசத் திருவிழா



சென்னை ரானே கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் திரு எல். எல். நாராயண் அவர்களின் புதல்வி சௌ ஹேமாவுக்கும் சிரஞ்சீவி பி. வி. குமாருக்கும் சமீபத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. மணமகன் பம்பாய் திரு பரமேசுவரனின் புதல்வர். வாழ்க மணமக்கள்!

வாகக் கொண்டாடச் செய்ய வேண்டியது அவர்களின் கடமை. அதற்கு மாருகத் தங்கள் கட்சிப் பிரசாரத்துக்கே இந்நாளை உபயோகப்படுத்திக் கொண்டதால் மற்றக் கட்சிகளெல்லாம் கூசிப் பின் தங்கிவிட்டன. குடியரசுத் திருநாளைக் கொண்டாட மற்றக் கட்சி மக்கள் எவ்வளவு ஆர்வத்தோடு முன் வர வேண்டுமோ, அந்த ஆர்வத்தோடு முன்வரவில்லை. எனினும், சுதந்திரக் கட்சியினர் ஆங்காங்கு தேசக்கொடியை ஏற்றி வணக்கம் செலுத்தினர் என்பதனைக் கேட்டு மகிழ்கிறோம். தி. மு. க. வைச் சேர்ந்த சென்னை மேயர் திரு வி. முனுசாமி அவர்கள், சென்னை நகராட்சி மன்றத்தில் தேசக் கொடியை ஏற்றி வைத்து ராஷ்டிரபதியின் குடியரசு தினச் செய்தியையும் வாசித்தார் என்பது மகிழ்ச்சி தரும் செய்தியாகும். திரு முருகேசன் என்ற தி.மு.க.அங்கத்தினர் தமது கட்சியின் சார்பில், முடியாட்சியைக் குடியாட்சியாகமாற்றியவர்களுக்கு வந்தனம் செலுத்துவதாகக் கூறினர் என்பதும் வரவேற்க வேண்டிய செய்தியாகும்.

## மந்திரி வேங்கடராமனின் பதில்

“திட்டங்களுக்காக அந்நிய நாடுகளிலிருந்து வாங்கும் கடன்களைத் திருப்பிக் கொடுக்க என்ன திட்டமிருக்கிறது?” என்று ராஜாஜி கேட்கும் கேள்விக்கு, “கடன் கொடுத்தவர்கள் கவலைப்பட வேண்டியிருக்க, கடன் வாங்கியவர்களா கவலைப்படுவார்கள்?” என்ற பொருளில் பதில் சொல்லியிருக்கிறார் மந்திரி ஆர் வேங்கடராமன். “கடன் கொடுத்த நாட்டவர் முட்டாள்கள் அல்ல. கொடுத்த கடனைத் திருப்பிக் கொடுக்க நமக்குச் சக்தி இல்லையானால் அவர்கள் கடன் கொடுக்கப் போவதில்லை” என்று சட்ட சபையில் கூறியிருக்கிறார். கடனைத் திருப்பிக் கொடுக்கும் சக்தி தனக்கு இருக்கிறதா இல்லையா என்று யோசிக்காமல் வாங்குபவன் முதல்தரமான அயோக்கியன். உலகில் நியாயமும் தர்ம உணர்ச்சியும் பெற்ற ஒவ்வொருவனும் தனக்குக் கடனை அடைக்கச் சக்தியுண்டா என்று ஆலோசித்து அந்தச் சக்திக்கு ஏற்பத்தான் கடன் வாங்குவான். சத்தியத்துக்குப் பெயர்பெற்ற நாட்டுக்கு, மோசம் செய்யும் நாடு என்ற பெயரை வாங்கி வைக்க காந்தி மகானின் வாரிசுகள் தலைதூக்கி யிருக்கிறார்கள் என்பதுதான் மந்திரி வேங்கடராமனின் வார்த்தைகளிலிருந்து புலனுகிறது. ஆனால் ஒன்று: கடன் கொடுத்த நாட்டவர் முட்டாள்கள் அல்ல. கடனைத் திருப்பிக் கொடுக்கவில்லையானால் அதை வசூல் செய்யக் கட்டாயம் வேறு வழிகளைப் பார்ப்பார்கள்! கருமத்தின் பயனை அனுபவிக்காமல் தப்பலாம் என்று எண்ணுவது மடமை.

## பஞ்சாபில் ஸ்ரீராம் சர்மா

பஞ்சாப் பிரமுகர்களில் ஒருவரான பண்டித் ஸ்ரீராம் சர்மா என்பவர் சுதந்திரக் கட்சியிலிருந்து விலகி, காங்கிரஸில் சேர்ந்து விட்டார் என்ற செய்தி வந்துள்ளது. பண்டித் ஸ்ரீராம் சர்மா, பஞ்சாப் சட்ட சபையில் எதிர்க்கட்சித் தலைவராக இருந்து வந்தார். பிறகு அவர் சுதந்திரக் கட்சியில் சேர்ந்தார். பஞ்சாப் சுதந்திரக் கட்சி நாளுக்கு நாள், உத்தம் சிங் நாகோகி தலைமையில் பெரும் பலம் பெற்று வந்தது. பஞ்சாப் ஆளும் கட்சியினர் எதிர்க் கட்சிகளின் பலத்தை உடைக்க எவ்வளவு மட்டமான செயலிலும் இறங்கக்கூடியவர்கள் என்ற 'புகழ்' பெற்றவர்கள். அதன் விளைவு சர்மா இன்று காங்கிரஸில் சேர்ந்து விட்டார். அவர் மந்திரியாக்கப்படுவார் என்ற வதந்தியும் உலவுகிறது. இது தான் ஆளும் கட்சியின் போக்கு! மாற்றுக் கட்சியிலிருப்பவர்களை ஆளும் கட்சியில் இருப்பவர்கள் வலைவீசிப் பிடிக்கப் பார்க்கின்றனர். அந்த வலையில் சிக்கியவுடன், அவர்களை ஆளும் கட்சியினர் தூர எறிந்து விடுவார்கள். ஆந்திர நாட்டில் திரு சென்னு ரெட்டி என்பவருக்கு ஏற்பட்ட நிலையை எச்சரிக்கையாகக் கொள்ள வேண்டும்.

## சேதி தெரியுமா?



காங்கிரசுக்கு இப்படி
யொரு கொடியிருக்கலாம் —
இல்லையானால்...




பணம்
இப்படியும் ஒரு கொடி
வைத்துக் கொள்ளலாம்




காங்கிரஸ் வீடு கட்ட மரம்
அறுக்கிறார்கள்!
மக்கள்
சமுதாயம்
வகுப்பு துவேஷம்
ஜாதி துவேஷம்




1857ல் ஜான்ஸி ராணி
பிரிட்டிஷாரை எதிர்த்து
வீரதீரப் போர் நடத்
தினார்.
ஜான்ஸி ராணி




1961-ல் ஜெய்ப்பூர் மகாராணியின்
சாகசம்
சுதந்திராக்
கட்சி
ஜெய்ப்பூர் ராணி
சுதந்திராக்கட்சி
யில் சேர்ந்து
விட்டார் — செய்தி

# புத்துணர்ச்சி பெற்றது

தஞ்சை ஜில்லாவில் திருக்காட்டுப் பள்ளியை அடுத்துக் கிழக்கே ஐந்து மைல் தூரத்தில், காவிரிக்கரையில் அமைந்துள்ள மருவூர் கிராமம் 23-1-61 திங்கட்கிழமையன்று புனிதமடைந்து விட்டது. ஆம்! காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் தம்முடைய பாதயாத்திரையில் இந்த வட்டாரத்துக்கே மருவூரைத் தேர்ந்தெடுத்து 23ந் தேதி யன்று இங்கு தங்கிக் கிராமவாசிகளுக்கு அனுக்ரஹம் செய்தார்கள்.

1924ம் வருஷம் இயற்கையின் சீற்றத்தால் கொள்ளிடம் உடைப்பெடுத்து வயல்வெளிகளையெல்லாம் மணல் குன்றுகளாகச் செய்துவிட்டுப்போன காலத்திலிருந்து மருவூர் க்ஷீணதிசையை அடைந்து விட்டது. இந்தக் கிராமத்தில் வசிக்கும் ஜனங்களின் எண்ணிக்கையும் மிகக் குறைவு. இங்கு வீடு, வாசல் இருக்கும் சிலரும் பிழைப்புக்காக வெளியூர்களுக்குச் சென்றுவிட்டவர்கள். இருந்தும் ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் மருவூரைத் தேர்ந்தெடுத்து, 20ந் தேதியன்று மருவூர் கிராம முன்சீப் ஸ்ரீ கிருஷ்ணசாமி ஐயர் அவர்களுக்கு ஸ்ரீமுகம் அனுப்பி விட்டார்கள். அந்தக் கணமே மருவூருக்கு க்ஷேமகாலம் பிறந்து விட்டது என்ற எண்ணம் இங்குள்ள எல்லாருக்கும் மனத்திற் பட்டுவிட்டது. பெரியவர்கள் விஜயம் வெகு விமரிசையாக நடந்தது. அவர்களது அனுக்கிரஹத்தாலேயே தான். கருணைக் கடலான ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் ஊரிலுள்ள ஒவ்வொரு வீட்டுக்கும் சென்று இங்குள்ள குடும்பத்தாருக்கு அனுக்ரஹம் செய்து, சரளமாக உரையாடி, ஆசீர்வதித்தார்கள். கடைசியில் நித்யாக்னிஹோத்ரம் செய்துகொண்டு பரம ஆஸ்திகர்களாய் விளங்கும் பிரும்மஸ்ரீ ராகவ தீக்ஷிதர் அவர்களின் வீட்டிலுள்ள அக்னிஹோத்ரசாலைக்கு விஜயம் செய்து, கிராம மக்கள் அனைவருக்கும் அமுத மொழிகளையும், ஆசி வார்த்தைகளையும் அள்ளி வழங்கினார்கள். பிரும்மஸ்ரீ ராகவ தீக்ஷிதர் அவர்களுக்குப் புத்திரபாக்கியம் இல்லை என்பதை அறிந்த பெரியவர்கள், "யக்ஞேசுவரனுக்குத்தான் தினசரி பாலூட்டி வளர்த்து வருகிறாயே, யக்ஞேசுவரனே தான் உனக்குப் புத்திரன்; அந்த யக்ஞேசுவரனையே உலக க்ஷேமார்த்தம் மிகுந்த அக்கறையுடன் கவனித்து வளர்த்துக் கொண்டிரு!" என்று அவர் அக்னிஹோத்ரம் செய்வதைப் பாராட்டினார்கள். மருவூரை அவர் விஜயத்துக்குத் தேர்ந்தெடுத்ததற்கு ஒரு முக்கிய காரணம் அந்த ஊரில் நித்யாக்னிஹோத்ரம் நடந்து வருவதுதான் என்ற உண்மையைக் கிராமத்தார்கள் அப்பொழுது உணர்ந்து கொண்டார்கள்.

ஜகத்குரு காஞ்சி காமகோடி பரமாச்சாரியர்களின் விஜயமும் "மருவூரும், ஊர் ஜனங்களும் க்ஷேமங்களை அடையட்டும்" என்ற அவருடைய ஆசி மொழியும் கிராமத்தார்களைப் புத்துணர்வு அடையச் செய்துவிட்டன.

## ஓர் எடுத்துக்காட்டு

நாற்பதைந்து ஆண்டுகளுக்குமுன் தமக்கு ஓர் அவசரத்தில் நான் ஐந்து ரூபாய் கொடுத்து உதவினேன் என்று சொல்லி திரு. கோபால கிருஷ்ணய்யர் என்பவர் இன்று பம்பாயிலிருந்து தம் ஊர் பாலக்காடு செல்லும் வழியில் என்னைப் பார்த்து அந்தப் பழைய உதவியை 'வட்டி' சேர்த்து இருபது ரூபாயாகத் 'திருப்பி'க் கொடுத்தார். நான் திகைத்தேன். எதிர்பாராததும் போற்றத் தக்கதுமான இந்தச் சம்பவம் மக்களுக்கு ஓர் எடுத்துக் காட்டாகும். சுதந்திர நிதிக்குச் சேர்த்துக் கொள்ளலாமா என்று கேட்டதற்கு இஷ்டப்படி செய்யுங்கள் என்று ஒப்புக் கொண்டார்.

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்ய விரும்புகிறவர்கள் தங்களின் நன்கொடையை என் பெயருக்கு c/o **கல்கி காரியாலயம், நுங்கம்பாக்கம், சென்னை-10** என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறேன். பெயரிட்டோ, பெயர் சொல்லாமலோ அனுதாபிகள் விருப்பத்தின்படி கல்கியில் நன்கொடைகளின் வரவு பிரசுரிக்கப்படும்.

23-1-61

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

பிப்ரவரி 3 முதல்

சென்னை:

காஸினோ • ஸ்ரீ கிருஷ்ணா

உமா மற்றும் தென்னிந்தியெங்கும்.



வைதேகி பிக்சர்ஸ் அளிக்கும், N·A·T யின்

# சீதாராம கல்யாணம்

ELEGANT

# காதற்கண்ணி

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

முசிரி ராமய்யர் அதிர்ஷ்டசாலி. அவருடைய மகன் சுப்பராயன் படிப்பில் அதிகம் சாதிக்கவில்லை. ஆயினும் நல்ல இடத்தில் ஒரு பெண் கிடைத்து விவாகமாகி மகனும் மருமகளும் மாமியாரும் எல்லாரும் சந்தோஷமாக வாழ்க்கை நடத்தினார்கள்.

ராமய்யருக்கு ஒரு கவலையுமில்லை. சம்பந்தி பணக்காரர். காமாட்சிக்கு வேண்டியன எல்லாம் பிறந்தகத்திலிருந்து சரியாக வந்து கொண்டிருந்தன. வழக்கம் போல் சண்டை சச்சரவு ஏதும் இல்லாமல் இரு குடும்பத்தினரும் பரஸ்பர அன்போடு நடந்துகொண்டு வந்தனர்.

* *

இப்படி ஆறு வருடங்கள் நடந்தன. கவி புருஷனுக்கு இது பிடிக்கவில்லை. குப்பண்ணனுக்கு (இதுவே ராமய்யரின் திருக்குமாரனுடைய பெயர்) ஒரு யோசனை உண்டாக்கினான், கவி புருஷன்.

பள்ளியில் அதிகம் படித்துப் பட்டம் பெறவில்லையாயினும், தமிழ்ப் படிப்பு விடாமல் நடத்தி மிக பாண்டித்யம் பெற்றான். பழைய நூல்கள் எல்லாம் படித்துப் பாடமும் செய்து வந்தான். காமாட்சி என்கிற பெயரைத் தமிழாக்கி விட வேண்டும் என்று தீர்மானித்தான்.

இது தன்னுடைய தமிழ்ப் பற்றுக்கு ஒரு கோபுரமாகும் என்று குப்பண்ணன் கருதினான்.

அவனுக்குச் சில தமிழ்ப் பண்டிதர்கள் ரொம்பவும் சிநேகம். அவர்களை விடத் தான் அதிகம் தமிழ்ப் பற்றுள்ளவனைக் காட்டிக்கொள்ள வேண்டும் என்கிற ஓர் ஆசை ஏற்பட்டுவிட்டது.

மனைவியைப் பார்த்துச் சொன்னான்: "இது என்ன காமாட்சி! உன் பெயர் சுத்த வட மொழியாயிருக்கிறதே. இதைத் தமிழாக்கிக் கொண்டு விடுவது நல்லது!" என்றான்.

இது அவளுக்குச் சரியாகப் புரியவில்லை. ஆனாலும், "அப்படியே செய்யலாம்!" என்றாள்.

காமாட்சி ரொம்ப சாது குணம். புருஷன் சொன்ன எதற்கும் ஒப்புக் கொள்ளுவது அவளுடைய பண்பாடு. இது நம்முடைய பெண்களின் பொதுவான இயல்பு. அதுவே நம்முடைய குடும்பங்களின் சுக வாழ்வுக்கு முக்கிய காரணம்.

"இனி உன்னுடைய பெயர் காதற் கண்ணி! என்ன சொல்லுகிறாய்?" என்றான் குப்பண்ணன்.

"காதற்கண்ணிஎன்றால்என்ன?" என்று கேட்டாள் காமாட்சி.

"உனக்கு ஒன்றும் விளங்காது. நீ தமிழ் படிக்கவில்லை. உன் தகப்பனார் உன்னை ஆங்கிலப் பள்ளியில் சேர்த்துக் கெடுத்து விட்டார்" என்றான் குப்பண்ணன்.

"இல்லை, இல்லை. என் தகப்பனார் ஒரு குற்றமும் செய்யவில்லை. என்னுடைய குற்றம்தான். காதல் என்றால் என்ன, கண்ணி என்றால் என்ன?" என்று கேட்டாள்.

குப்பண்ணன் விளக்கினான்.

"சரி. இனிமேல் என்னை அப்படியே கூப்பிடுங்கள்!" என்று அவளும் ஒப்புக் கொண்டாள்.

ராமய்யருக்கு இப்போது நாற்பத்தைந்து வயது. பெரிய வீட்டில் சம்பந்தம் ஆன தம்முடைய மகன் சென்ற வழிக்கு ஒன்றும் தடை சொல்ல மாட்டார். அவர் தம்முடைய ஜவுளிக் கடையில் முழு கவனமும் செலுத்தி வந்தார். ஆனபடியால் பையன் தன்னுடைய மனைவிக்கு வைத்த புதுப் பெயர் அவர் வரையில் எட்டவில்லை. ஆனால் காமாட்சியின் மாமியார், அதாவது குப்பண்ணனின் தாயார் கொஞ்சம் தடுத்தாள்.

"இதுவென்ன விநோதமான பெயர் வைத்துக்கொண்டிருக்கிறாய்? 'காமாட்சி' என்பது எவ்வளவு நல்ல பெயர். அம்பாள் பெயர். ஏன், புதிதாக எங்கும் கேட்காத ஒரு பெயர்?'' என்றாள்.

"இல்லை, அம்மா. அவர் என் உண்மைப் பெயரைச் சொல்லி அழைப்பதற்கு வெட்கப்படுகிறார். ஆனபடியால் இந்தப் புதுப் பெயர் இட்டிருக்கிறார்'' என்றாள் காமாட்சி.

நல்ல காரியத்துக்கு ஒரு சிறு பொய் சொல்லலாம் என்று அவள் சாத்திரம் கேள்விப்பட்டிருந்தபடியால் இவ்வாறு சொல்லி மாமியாரைச் சமாதானப் படுத்தினாள்.

"இந்த ஆறு வருஷம் கூச்சப்படாமல் இப்போது என்ன வெட்கம் திடீரென்று வந்தது?'' என்று மாமியார் மறுபடியும் ஆட்சேபித்தாள்.

"அது ஏனோ எனக்குத் தெரியாது, அம்மா! இப்படித்தான் பெயர் மாற்றி விட வேண்டும் என்று சொல்லுகிறார். நான் எப்படித் தடுப்பது?'' என்றாள் மருமகள்.

"சரி! இது கலிகாலம். எப்படியோ செய்து கொண்டு போங்கள்!'' என்று விட்டு விட்டாள் மாமியார்.

* * *

ஊரில் தன் தாயாருக்கு ஒரு கடுதாசி எழுதினாள் காமாட்சி. வேறு ஒன்றுமில்லை, சாதாரண க்ஷேம சமாசாரம். அதில் கையெழுத்து வழக்கம் போல் 'காமாட்சி' என்று இட்டாள்.

அது ஒரு திறந்த கார்டு. ஆனபடியால் குப்பண்ணன் அதைத் தபாலில் போடப்போகும்போது படித்துப் பார்த்தான். திருப்பிக் கொண்டு வந்து "ஏன் இப்படிப் பழைய பெயரையே வைத்துக் கொண்டு எழுதுகிறாய்? இதை அடித்து விட்டுக் காதற்கன்னி என்று கையெழுத்துப் போடு'' என்று சொல்லிக் கடிதத்தை மனைவியிடம் திருப்பிக் கொடுத்தான்.

"நான் எழுதிய கடிதம் என்று அம்மாவுக்குத் தெரிய வேண்டாமா? யாரோ எழுதியது என்று திகைப்பாள். நீங்கள் சொன்னபடி செய்தால். அதனால்தான் இப்படிக் கையெழுத்திட்டுக் கடிதம் எழுதினேன்'' என்று விவேகமாகவே காமாட்சி வாதித்தாள். குப்பண்ணன் கேட்கவில்லை. பிடிவாதம் செய்தான்.

கலியின் வேகம். காமாட்சியும் பிடிவாதம் செய்தாள். குப்பண்ணன் பிடிவாதம் முன்னை விட அதிகமாயிற்று. இரு பக்கமும் கோபம் மூண்டது. சாப்பாட்டு வேளை. இருவருக்கும் பசியின் காரணம் ராஜஸம் தலையெடுத்திருந்தது.

காமாட்சி கடிதத்தை வாங்கிக் கொண்டு கிழித்துப் போட்டாள். குப்பண்ணன் 'நான் சாப்பிடமாட்டேன்' என்று ஆகாரம் செய்யாமல் கடைக்குப் போய்விட்டான்.

* * *

"என்ன சண்டை, இது? குப்பண்ணன் ஏன் சாப்பிட மாட்டேன் என்று போய்விட்டான்?'' என்றாள் மாமியார்.

"ஏனோ தெரியவில்லை'' என்று சொல்லிக் காமாட்சி அழுது கொண்டு தன் அறையில் படுக்கப் போனாள்.

* * *

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சில நாட்கள் வீட்டில் சந்தோஷமில்லை. சின்ன விஷயங்களுக்கெல்லாம் குப்பண்



ணன் கோபிப்பதும் காமாட்சி பிடிவாதம் செய்வதுமாக இருந்து வந்தது.

"நான் இருப்பது உங்கள் மகனுக்குப் பிடிக்கவில்லை, நான் கருருக்குப் போகிறேன்" என்றுள் காமாட்சி.

"ஊரில் அம்மாவுக்கு உடம்பு சரியாக இல்லை. அவளைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாகவும் இருக்கிறது. நான் கொஞ்சம் நாள் விலகி இருந்தால் உங்கள் குமாரருக்கு என்மேலுள்ள கோபம் நீங்கும்" என்ற யோசனையும் சேர்த்துச் சொன்னுள்.

"உன் இஷ்டப்படி செய்" என்று ராமய்யரும் ஒப்புக் கொண்டார். காமாட்சி கருருக்குச் சென்று விட்டாள்.

• • •

**கா**மாட்சி கருருக்குப் போனபோது கர்ப்பிணியாகச் சென்றுள். சில மாதங்கள் கழித்து ஆண் குழந்தை பிரசவமாகி, குழந்தையும் தாயாரும் சௌக்கியமாயிருப்பதாகக் கடிதம் வந்தது.

"**எ**ஜமானருக்குக் காதற்கண்ணியின் அன்பும் வணக்கமும் கலந்த கடிதம்.

குழந்தைக்கு என்ன பெயர் வைக்கலாம்? கந்தன் என்று வைக்கலாமா? அதுதானே உங்கள் பாட்டனுரின் பெயர்? கந்தசாமி அய்யர் அல்லவா, அவர்கள் திருநாமம். கந்தன் என்பது வடமொழியா தமிழா? எனக்குக் கொஞ்சம் சந்தேகமாக இருக்கிறது. வேலப்பன் என்று வைத்துவிடட்டுமா?

காதற்கண்ணி"

கடிதத்தைப் பார்த்துவிட்டுக் குப்பண்ணன் சிரித்தான். அவனுடைய கோபம் ஆறிவிட்டது. மனைவி தன்னுடைய பேச்சை மதிக்கிறுள் என்று மகிழ்ச்சியடைந்தான். ஆண் குழந்தை பிறந்தது வேறு திருப்தி.

"காதற்கண்ணே!

நீ குறும்புக்காரி. வேலப்பன் என்கிற பெயர் வேண்டாம். கந்தன் என்றே வைத்துவிடு. அது தமிழ் தான். 'ஸ்கந்தன்' என்பது வேறுமென்று வடமொழிப் பண்டிதர்கள் தமிழ்ச் சொல் 'கந்தன்' என்பதை மாற்றி வடமொழி உருவம் தந்து அமைத்துக் கொண்டிருக்கும் தவறுன பெயர். உடம்பைக் கவனித்துக் கொள். நான் அடுத்த மாதம் முதல் தேதி வருவேன்.

குப்பு"

காமாட்சியின் பதில் கடிதமும் வந்தது:

"உங்கள் கடிதம் பார்த்து அளவற்ற ஆனந்தமடைந்தேன். கந்தன் என்றே பெயர் வைத்தாயிற்று. மறுபடியும் அகராதி பார்த்துவிட்டு உண்ணுவிரதம் இருக்காதீர்கள். உங்கள் வரவைக் கந்தன் எதிர்பார்க்கிறுன்.

காதற்கண்ணி."

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 10. இங்கிலாந்தின் குற்றாலம்!

**ப**ளபளப்போடு கூடிய அழகான நெடுஞ் சாலையிலே எங்களுடைய மோட்டார் வண்டி வேகமாகச் சென்றது. இரண்டு பக்கங்களிலும் மலைகள், பள்ளத்தாக்குகள், கண்கள் நிரம்பக்கூடிய பசுமையான பச்சைவயல்கள்! சாலையின் இரு மருங்கிலும் உயரம் உயரமான மரங்கள்! எங்கள் "கோச்" ஆக்ஸ்போர்ட் நோக்கிச் சென்று கொண்டிருந்தது!

மூன்று முடிச்சின்றி, முருகல் திருகல் இன்றி ஒரே நேராக ஓங்கி வளர்ந்த 'மல் உட்' மரங்கள்; நம்முடைய ஆல மரத்தைப் போல் மிகச் சிறிய விதையிலிருந்து முளைத்து மிகப் பெரிய மரமாக வளர்ந்து நின்ற 'ஓக்' மரங்கள்; இவற்றுக்கு மத்தியிலே அங்கங்கே அழகணி மரங்கள்! அதாவது நம்முடைய புராணங்களிலே வருகிற அரக்கிகளைப்போலே தலையை விரித்துப் போட்டு அழுவதுபோன்று நீண்ட சரங்களைத் தொங்கப் போட்டுக் கொண்டு நிற்கிற "வீப்பிங் விலோ" Weeping Willow என்ற சோகத் தருக்கள்! அழுகிறாடே நிற்கும்பயங்கரத்தைப் போலே அவை காட்டி தந்தன!

சாலையின் இரு புறங்களிலும்உள்ள மலைச் சரிவுகளிலே நீர் நிலைகளும், வளைந்து செல்லும் சிற்றோடைகளும் துள்ளிக் கொண்டு வரும் தண்ணீரும் பார்த்தபோது எனக்குத் திருக்குற்றாலத்தின் நினைவே வந்தது! நின்று குளிக்கும் அருவி இல்லை; நம் நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் பொதிகைத் தமிழும் இல்லை. மற்றப்படி அது குற்றாலமேதான்!

வளமான நிலத்தைக் கட்டாந்தரையே இல்லாமல் உழைப்பினால் நன்கு பயன்படுத்தியிருக்கிறார்கள் பிரிட்டிஷ் மக்கள். ஒரே புல்வெளியும் பண்ணைகளுமாகவே எங்கு பார்த்தாலும் பரவி நின்றன. பாற்பண்ணைகள், தாவரப் பண்ணைகள், கோழிப் பண்ணைகள், இவற்றுக்கு மத்தியிலே கூரை வீடுகள் — புல் வேய்ந்த கூரை வீடுகள்! வயல்களுக்குள்ளே எல்லாம் மின்சாரக் கம்பங்களும், தந்தித் தூண்களும்! தந்தியும் தொலைபேசியும் மின்சாரமும் இல்லாத கிராமமே இடையாது!

கோச் வண்டியிலே சென்றதால் வழியிலே உள்ள சிறு சிறு ஊர்களுக்குள்ளே யெல்லாம் புகுந்து சென்றோம். சுற்றிலும் புல்லையே ஒரு பயிராக வளர்த்து வைத்திருக்கிறார்கள்—மேய்ச்சலுக்காக! காபேஜும், காலி ப்ளவரும், உருளைக்கிழங்கும், தக்காளியும் அடர்த்தியாகக் கொழு கொழுவென்று நின்றன! பன்றிகள் எல்லாம் வெள்ளை வெளேரென்று பருத்துத் தடித்துச் செழிப்பாகக் கன்றுக்குட்டிகளைப் போல் துள்ளித் திரிந்து கொண்டிருந்தன.

நாங்கள் சென்றது ஒரு விடுமுறை நாளானதால் வழியிலிருந்த சிற்றூர்களிலெல்லாம் ஒரே கூட்டம். கடைகளிலும் 'உல்வொர்த்' அங்காடிகளிலும் மொய்த்து நின்ற மக்கள் திரளைப் பார்த்தபோது நமது நாட்டுப்புறங்களிலே வாரந்தோறும் கூடுகிற சந்தையே நினைவுக்கு வந்தது!

நதியின் கரைகளிலும், பொழில்களின் ஓரங்களிலும் அங்கங்கே 'காரவான்' (Caravan) என்று அழைக்கப்படுகிற ஓட்டக வீடுகள் நின்றன! பெயர்தான் ஓட்டகமே தவிர இந்த



மாக்டேலின் கல்லூரியின் கோபுரமும், ஓடையும், பொழிலும்

வீடுகளுக்கும் ஓட்டகத்துக்கும் வேறு சம்பந்தம் இல்லை. மோட்டார் வண்டிகளை வீடுகள் போலக் கட்டி, வீட்டுக்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் அவற்றினுள்ளேயே அமைத்து, அந்த வண்டிகளில் ஊர் ஊராக இடம் இடமாகக் குடும்பத்தோடு யாத்திரை செல்வதும், பொழில்களிலே இவற்றை நிறுத்தி விட்டு வாரக்கணக்காக 'முகாம்' போடுவதும் ஆங்கிலேயர்களுடைய பழக்கம். இத்தகைய ''நகரும் வீடு''களுக்குத்தான் 'காரவான்' என்று பெயர்! இவற்றைப் போலவே, நதியின் பரப்பில் மிதந்து சென்று தண்ணீருக்கு மேலேயே அங்கங்கே நங்கூரம் போட்டுத் தங்குகிற படகு வீடுகளையும் பார்த்தேன். அப்போது, ஓய்வையும் விடுமுறை நாட்களையும் எவ்வளவு திட்டத்தோடு இந்த ஆங்கிலேயர்கள் அனுபவிக்கிறார்கள் என்று வியப்படைந்தேன்.

கண்ணுக்கும் மனத்துக்கும் பசுமை தருகிற இந்த அழகழகான காட்சிகளையும், எழில் மிகுந்த சிற்றூர்களையும் பார்த்துக் கொண்டே குற்றால நினைவில் ஆக்ஸ்போர்ட் போய்ச் சேர்ந்தேன்!

அந்தப் பல்கலைப் பட்டணத்தை நெருங்கும் போதே சாலைகள் அகன்று விரிகின்றன! கலைக் கழகத்துக்கு அப்பால் தொழிற்சாலைகள் இருக்கக் கூடிய பெரிய நூதன நகரம் இருக்கிறது. ஆனால் பல்கலைக் கழகமும் கல்லூரிகளும் இருக்கிற வட்டாரமோ தனியான ஒரு குருகுலமேதான்!

ஆம்; நான் கற்பனை செய்திருந்த ஆக்ஸ்போர்ட் வேறு. கண்முன்னால் கண்ட ஆக்ஸ்போர்ட் வேறு. இரண்டும் இரு வேறு உலகங்கள்!

உலகப் புகழ்பெற்ற ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகம் நவீன நகரத்தின் நடுமையத்திலே இந்தக் காலத்துப் பின்னணிகளோடு வீற்றிருக்கும் என்றே நான் எதிர்பார்த்தேன். ஆனால் நான் அங்கே பார்த்ததோ ஒரு வித்தியாவனம், ஒரு தவச்சாலை!

பூஞ்சோலைகள், மான்கள் துள்ளி விளையாடுகிற பூங்கா, வாத்துக்களும் 'ஸ்வான்' என்னும் வெள்ளை அன்னங்களும் மிதந்து செல்கிற செர்வெல் நதி! இந்தச் சாந்த மயமான சூழலிலேதான் ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகம் தன்னுடைய வானுயர்ந்த கோபுரங்களோடு தரிசனம் தருகிறது!

பல்கலைக் கழகத் தோற்றம்



''தூங்குதிரை ஆறு'' என்றும், ''பூங்குலை குலாவு குளிர்சோலை'' என்றும் கம்பர் பாடுகிறார் அல்லவா! இராமனுக்கு அகத்திய முனிவர் பஞ்சவடியை அவ்விதம் வர்ணிக்கிறார். அந்த வர்ணனைதான் என் கண் முன்னே வந்து நின்றது.

கிறிஸ்துவக் கோவிலும் பள்ளிக்கூடமும் ஒன்றாக இணைந்து ஒன்றை ஒன்று அனுசரித்தவாறு திகழுகின்றன! கடவுளையும் கல்வியையும் ஒன்றாக்கி இந்தப் பல்கலைக் கழகத்தை அமைத்திருக்கிறார்கள், நவீன விஞ்ஞான அறிவுமிகுந்த அந்தப் புண்ணிய மக்கள்.

ஏழாயிரம் மாணவர்களுக்கு மேல் இந்த ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்திலே பயிலுகிறார்கள். அவர்களுடைய கல்லூரி உடையான நீண்ட அங்கியும், மேலுறையும், தலையணியும் மிகவும் பழமையான சம்பிரதாயப்படி இருக்கின்றன. அவர்களுடைய கல்லூரியின் ஆசாரங்களையும் சில பழக்க வழக்கங்களையும் பார்த்தால் நம்மில் சிலர் அவற்றை ''மூடநம்பிக்கைகள்'' என்றே சொல்லிவிடுவோம். இது ஒரு 'பத்தாம் பசலிப் பள்ளிக்கூடம்' என்றுகூடப் பட்டம் சூட்டி விடுவோம்! ஆனால் உண்மை என்ன? நவீன அறிவிலாகட்டும், விஞ்ஞான முன்னேற்றத்திலாகட்டும், பட்டங்களின் உயர்விலாகட்டும், இந்தப் பல்கலைக் கழகத்துக்கு அகில உலகத்திலுமே ஒரு தனியான பெருமையும் மரியாதையும் இன்றைக்கும் இருந்து வருகின்றன!

இந்தப் பல்கலைக் கழகத்தின் விசேஷம் இங்குள்ள குருகுல வாசந்தான். நம்முடைய தமிழ்நாட்டு இலக்கண நூல்களிலும் மற்றப் பழம்பெரும் கவிகளிலும் குருவுக்கும் மாணவனுக்கும் இருக்க வேண்டிய நேர்முகமான உறவைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறதோ, அதை இங்கே நடைமுறையில் காண்கிறோம்! இப்படிப்பட்ட குருகுல ஆசிரமங்கள், அதாவது கல்லூரிகள், ஆக்ஸ்போர்டிலே கிட்டத்தட்ட முப்பது உள்ளன. இவற்றில் ஐந்து பெண்களுக்கான கல்லூரிகள்.

கல்லூரிகள் என்றால், நம்முடைய பள்ளிக் கூடங்களில் இருப்பது போல் வகுப்புகள் நடக்கும் அறைகள் என்று எண்ணிவிடக் கூடாது. கல்லூரி என்றால் அது மாணவர்களின் வீடு; மாணவர்களின் இல்லம் — ஹாஸ்டல்களைப் போல! ஒவ்வொன்றிலும் நூற்று ஐம்பதிலிருந்து முந்நூறு வரை மாணவர்கள் உண்டு. ஒவ்வொரு மாணவருக்கும் ஒரு ட்யூடர், அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட ட்யூடர்கள் என்னும் ஆசிரியர்கள்! வாரந்தோறும் ஒவ்வொரு மாணவனும் தன் ட்யூடரிடம் தன் படிப்பு சம்பந்தமான ஒரு கட்டுரையை எழுதிக் காட்ட வேண்டும். இதைப் படித்து விட்டு அந்த ஆசிரியர் திருத்தமும் விளக்கமும் செய்வார்! இவருடைய மேற்பார்வையிலேயே இப்படி மூன்று ஆண்டுகள் குருகுல வாசம் செய்து முடிவில் பல்கலைக் கழகத்தின் பரீட்சைக்குப் போக வேண்டும்.

தினந்தோறும் வகுப்புக்களுக்குச் சென்று 'ஆஜர்' சொல்லுவது ஆக்ஸ்போர்டிலே கிடையாது. அங்கே நடைபெறுகிற சொற்பொழிவுகளுக்கு மாணவர்கள் சென்று கேட்டுப் பயனடையலாம். அந்தச் சொற்பொழிவுகளின் பட்டியலை மட்டும் மாணவர்களிடம் கொடுப்பார்கள். மற்றப்படி பொறுக்குமேல் ஏற்ற மாட்டார்கள்!

இந்தச் சர்வ சுதந்திர விடுதிகளாகிய கல்லூரிகளையும், அவற்றிலேயுள்ள மாணவர்களின் அறைகளையும் பார்த்துக் கொண்டே சென்றேன். அங்கு காணப்பட்ட கலகலப்பும், மனித அபிமானமும் புறக்கட்டுப்பாடு என்பதில்லாமல் மாணவர் தாங்களே தங்களுக்கு ஒரு கட்டுப்பாட்டை உண்டாக்கிக் கொள்கிற சூழ்நிலையும், விசித்திரமாக இருந்தன. அந்த இனிய விசித்திரத்தை அனுபவித்துக் கொண்டே "க்ரைஸ்ட் சர்ச் மெடோ" என்ற புல்வெளியோடு கூடிய பைம்பொழிலுக்கு வந்தேன்.

விசாலமான புல்வெளி. அதில் ஒரு சிற்றோடை. அந்த ஓடையின் மேல் அன்னங்களும், படகுகளும் மிதந்தன. செயற்கையாகச் செய்துவிட்ட ஓடைதான். என்றாலும் தண்ணீர் ஒய்யாரமாகச் செல்லும்படியும், குதி போட்டுக் கொண்டு ஓடும்படியும் சில இடங்களில் ஒலி நடக்கும்படியும் அதற்கு வழி வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள்! ஆஞ்சநேய வரப்பிரசாதம் பெற்று நம்முடைய குற்றாலத்தை மட்டும் ஆக்ஸ்போர்டுக்குக் கொண்டு போய்விட முடிந்தால் இன்னும் என்னென்ன செய்திருப்பார்களோ!

'க்ரைஸ்ட் சர்ச்' பூம்பொழிலில் நுழைந்ததும் ஒரு பெரிய ஆங்கில அறிவிப்பு கொட்டை கொட்டையான எழுத்துக்களிலே தோற்றம் தருகிறது. எல்லா நாட்டுக்குமே பயன்படலாம் என்று கருதி அதன் மொழிபெயர்ப்பைக் கீழே தருகிறேன் :—

"இந்தத் தோட்டத்தைப் பாதுகாக்கிற காவலாளிகளுக்கும் அதிகாரிகளுக்கும் இதனை அறிவிப்பது என்னவென்றால்,

இந்தப் புல்வெளியில் பிச்சைக்காரர்களோ அல்லது கந்தல், அழுக்கு உள்ளவர்களோ வராமல் தடுக்க வேண்டும். தோற்றத்திலும் நடத்தையிலும் சுத்தம் இல்லாதவரையும் ஒழுக்கமற்றவரையும் இதனுள் அனுமதிக்கக் கூடாது. முரட்டுத்தனம், கட்டுப்பாடற்ற போக்கு, ஒழுங்கீனமான செயல் ஆகியவற்றுக்கு இங்கே இடமில்லை. மூட்டைகளைச் சுமந்து கொண்டோ, கைவண்டிகளைத் தள்ளிக் கொண்டோ அல்லது விற்பனைப் பொருள்களை எடுத்துக் கொண்டோ யாரும் இந்தத் தோட்டப் பாதையில் வரக்கூடாது. இங்குள்ள மரங்கள், செடிகொடிகள், பெஞ்ச் ஆகிய இருக்கைகள் எதிலும் சேதம் விளைவிப்பதோ, அல்லது தங்கள் பெயர்களைச் செதுக்குவதோ கூடாது!"

அன்பு என்ற தத்துவமானது, செடி கொடிகளையும் மனிதர்களையும் இப்படியெல்லாம் அரண் செய்து காத்து வருகிறது ஆக்ஸ்போர்ட் நகரத்திலே! அந்த அறிவிப்பில் இத்தனை கண்டிப்பு இருந்தபோதிலும், நான் போனபோது அங்கே காவலாளிகள் யாரையும் காணோம்! ஆனாலும் கட்டளையை யாருமே மீறின அறிகுறியில்லை. ஒரு சிறு மரத்திலே கூட யாருடைய பெயரும் தென்படவில்லை.

எத்தனை முக்கியமான உலகப் புகழ்பெற்ற இடம் அது! அங்குள்ள மரத்திலே மட்டும் பெயரைப் பொறித்து விட்டால் பிறகு அதற்கு அழிவு என்பது உண்டா? ஆகா! எத்தனை மகத்தான மனிதர்கள் அந்தத் திருப்பெயரையும் அதன் கீழேயுள்ள சித்திரபுத்திரத் தேதியையும் பார்ப்பார்கள்! சிரஞ்சீவியாக வாழ்வதற்கு இப்படியெல்லாம் நல்ல வாய்ப்புக்கள் இருந்தும்கூட யாருமே, தங்கள் பெயரை மரத்திலே கொண்டு தாக்கி நிறுத்தாமல் போனது எத்தனை பைத்தியக்காரத்தனம்! நம்முடைய குற்றாலத்திலும் பாபநாசத்திலும் நாம் ஒரு பாறையை விட்டு வைப்போமா? மரம், செடி, கொடி, கோயில் மதிற்சுவர் இவற்றில் தலைமுறை தத்துவங்களையே செதுக்கிவிட வில்லையா? இவர்களுக்குத் தெரிந்தது இவ்வளவுதான் என்று எண்ணி, ஓவர்கோட்டை உதறித் தோளிலே போட்டுக் கொண்டு அங்கிருந்து கிளம்பினோம், நானும் எனது நண்பர்களும்!

"என்ன இது! இத்தனை வேகமாக நடக்கிறீர்களே! இந்தச் சோலையிலே உட்கார்ந்து விட்டால் நேரம் போவதே தெரியாதே! உங்களுக்கு இந்த இடம் பிடிக்கும் என்றல்லவா நினைத்தேன். நீங்களானால் இவ்வளவு அவசரமாகக் கிளம்பிவிட்டீர்களே!" என்று இழுத்தார் நண்பர்களில் ஒருவர்.

"ஆகா! நிச்சயம் பிடிக்கிறது. என்றாலும் முக்கியமான ஓர் இடத்தை மறந்துவிட்டு இங்கே உட்கார்ந்துவிடக் கூடாது. பிறகு நேரம் போவதே தெரியாமல் போய்விடும். அந்த—முக்கியமான இடத்தைப் பார்க்காமல் போய்விடக்கூடாது!!" என்றேன்.

"ஓ! இங்குள்ள இந்தியக் கல்வி நிலையத்தைச் சொல்லுகிறீர்களோ?" என்று கேட்டார் அவர்.

(தொடரும்)

## ஜகத்குருவின் குடந்தை விஜயம்

காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகளும், ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளும் பிப்ரவரி மாதம் 5-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை கும்பகோணத்துக்கு விஜயம் செய்வதைப் பட்டணப் பிரவேசமாகக் கொண்டாடப் பக்தகோடிகள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மக்கள் அன்றையதின வைபவத்தில் திரளாகக் கலந்துகொண்டு ஸ்ரீ சந்திரமௌளீசுவரரின் கிருபையையும், ஸ்ரீ ஆசார்யாள் அவர்களின் அனுக்கிரஹப் பிரசாதத்தையும் பெற்று உய்யக் கோருகிறோம்.

# ஆண்டாளு

லக்ஷ்மி சுப்பிரமணியம்

நான் அவனாசிக்கு மாற்றலாகி வந்த புதிது. வாடகைக்கு வீடு அமர்த்தியானதும் ஊருக்குக் கடிதம் போட்டேன்.

"உங்களுக்கு வேலைக்காரி அமர்த்த வேண்டாமா?" என்று அடுத்த வீட்டுக்காரர் கேட்டார். கூடவே அன்று மாலையில் ஆண்டாளுவையும் அனுப்பி வைத்தார். அதுதான் நான் அவளை முதல் முதலில் பார்க்க நேர்ந்த சந்தர்ப்பம்.

பின் மண்டையில் சிறிய பிரப்பையாய் வளைந்த பரட்டை மயிர். சுருக்கம் விழுந்து இறுகிப்போன முகம். தக்காளி அரிந்தாற் போல் வெற்றிலைக் காவியேறின வாய். என்னைப் பார்த்து அவள் பணிவாய்ச் சிரித்த விதம் என் அநுதாபத்தைத் தூண்டியது.

"அம்மா எப்போ வருவாங்க சாமி!"

"அடுத்த வாரம்."

"கொழந்தை —" என்று என் முகத்தைப் பார்த்தாள். அவளுக்கு என் குடும்ப விவரம் தெரிந்திருக்க நியாயமில்லை.

"குழந்தையும்தான்!"

அவள் முகம் சட்டென்று மலர்ந்தது. நிறைவாய் சிரித்த வாயில் மறைக்கத் தெரியாத மகிழ்ச்சியின் பூரிப்பு. அவள் குரலில் ஆர்வம் கனிந்தது.

"எனக்குச் சொல்லி அனுப்பிடுங்க, சாமி! நான் காலையிலேயே வந்து ஊட்டைக் கழுவிக் கோலம் போட்டு விளக்கேத்தி வச்சிடறேன்."

என் மனைவியை வரவேற்கத் தயாராக இருந்த எனக்கு ஆண்டாளுவும் துணையாக இருந்தாள். குழந்தை ஜயத்தைப் பார்க்க எனக்கு மேல் அவளுக்கு ஆர்வம். திருப்பூர் பஸ் வந்து நிற்கும் முசாபரி பங்களா மரத் தடியில் இருவருமே காத்துக் கொண்டிருந் தோம். பிரயாண அலுப்பாலும் என்னை மறுபடியும் பார்க்கும் சந்தோஷத்தில் பத்மாவின் முகத்தில் ஒரு தனிக் களை. நெற்றி மயிரை விரலால் ஒதுக்கியபடி, கையில் தலையணையைப் போலத் துணிகளுக்கு நடுவே குழந்தையை எடுத்தபடி, பஸ்ஸிலிருந்து இறங்கினாள். தலை மயிரின் கருப்பு மாத்திரம் எட்டிப்பார்த்தது.

"கொஞ்சம் பிடியுங்கள்!"

அது அவளுடைய உதவிக்காகவா, அல்லது அவளுக்கு ஆதரவாகவா, நான் அங்கே வந்து நிற்கிற பெருமையைக் காட்டிக் கொள்ளவா என்று தெரிய வில்லை. ஆனால் அந்த வேண்டுகோளின் அழுத்தமே எனக்கும் பிடிபடாத பெருமையாக இருந்தது.

எனக்கு முன்னே அவள் கையை நீட்டிக் குழந்தையைப் பத்திரமாக வாங்கிக் கொண்டாள்.

"இது யாரு?"

"வேலைக்காரி" என்று சொல்ல வந்தவன் அந்தப் பேச்சை விரைவாய் அடக்கிக்கொண்டு "ஆண்டாளு!" என்றேன்.

அறிமுகம் ஆகிவிட்டது.

குழந்தை, தூங்கும் நேரமும், பத்மா எடுத்து வைத்துக் கொள்ளும் நேரமும் போகப் பாக்கி நேரமெல்லாம் ஆண்டாளுவின் இடுப்பிலேயேதான் இருக்கும். கடைக்குப் போய் வரவேண்டிய வேலையிருந்தால் கூடக் குழந்தை



பத்மா, "சும்மா என்னை வந்து தொண தொணக்காதே. வேலை இல்லையானால் வீட்டுக்குப் போகிறதுதானே!" என்று எரிந்து விழுவாள். அதற்குப் பதிலாக அவனிடமிருந்து வருவது ஓர் அசட்டுச் சிரிப்புத்தான். ஆனால் கொஞ்ச நேரம் பேச்சுத் தொந்தரவு இல்லாமல் இருக்கும்.

கையையும் காலையும் உதைத்துக் கொண்டு ஜயம் பிடாரிக் கத்தலாய் அழுவாள். செவ்வாயில் தளிர் நாக்கு நடுங்கும். இரண்டே தாண்டலில் ஓடிவந்து குழந்தையை எடுத்துக் கொண்டு என் மனைவியிடம், "புள்ளைக்குப் பசிக்குதும்மா!" என்பான்.





கண்ணயர்ந்திருக்கும் வேளையில் போய் வந்து விடுவான் ஆண்டாளு.

பிடியில் சதை அழுந்த, கண் மேல் அடர்ந்த மயிர் வழிய, திராட்சைக் கண்கள் முகம் புரியாமல் தேட, அவள் இடுப்பில் ஜயம் உட்கார்ந்திருப்பதே ஒரு வேடிக்கையாகத்தான் இருக்கும். சமையல் வேலை முடிந்து, என் மனைவி நிலைப்படியில் தலையை வைத்துக் கொண்டு புத்தகமும் கையுமாகப் படுத்துக் கொண்டுவிட்டாள், ஆண்டாளுவும் தலைமாட்டில் வந்து உட்கார்ந்து விடுவான். ஏதாவது ஒரு பேச்சு; வம்பு. இங்கிதம் தெரியாத அசட்டுக் கேள்வி.

"உனக்கு ரொம்பத் தெரியுமோ? வேளை கெட்ட வேளைக்கு ஆகாரம் கொடுக்கக்கூடாது. தெரியுமா?"

குழந்தையை அணைத்தபடி, "என் ராசாத்தி! அழுவாதே" என்று தேற்றுவான் ஆண்டாளு. அழுகை ஓய்ந்து தூங்கிப் போகும் வரையில் கீழே விடமாட்டான். மை தீற்றிய கண்ணிமைகள்

மூடியபடி ஜுரம் தூங்குகிறதைக் கண் கொட்டாமல் பார்த்தபடியே நிற்பான்.

"என்னடி கண்ணை வைத்து விடுகிறாற் போலே பார்வை? அப்பாலே போ!"

நெற்றி ஓரங்களைத் தொட்டுச் சொடுக்கியபடியே ஆண்டாளு கொல்லைப்புறம் போய் விடுவாள். எல்லா வேலைகளும் அவள்தான் செய்வாள். நடுப்பகல் நேரத்துக்கு மீந்து போன பழைய சாதத்தை எடுத்துக் கொண்டு வீட்டுக்குப் போய் விடுவாள்.

தினம் எப்படி மீந்து போகும்? ஆண்டாளுவுக்கென்றே அவள் கொஞ்சம் அதிகமாகப் போட்டு வடிப்பதாகத்தான் எனக்குத் தோன்றும். அவள் கண்டிப்பெல்லாம் மேலுக்குத்தான்.

சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது, "ஆமாம், உங்களுக்குக் கதை தெரியுமா? புருஷன் அவளுக்குக் குழந்தை இல்லேன்னு அவள் தங்கையைக் கல்யாணம் பண்ணிக் கொண்டான். இது செக்குமாடு மாதிரி இரண்டு பேருக்கும் உழைக்கிறது" என்றாள்.

"அவள் தங்கைக்கு—" என்று ஒரு தினுசாய்ப் பார்த்தேன்.

"அவளுக்குக் குழந்தை இருக்கு இப்போது. இவளைத் தொடக்கூட விடுகிறதில்லையாம். இருந்தாலும் இதுக்கு அஞ்ஞானம். தினம் எதையாவது கொண்டுபோய்க் கொடுக்கிறது. பேச்சையும் வாங்கிக் கட்டிக் கொள்ளுகிறது.

"'உனக்கென்னடி படைப்பு?' என்று கேட்டேன். 'அப்படிச் சொல்லாதீங்க. அவுங்க நல்லா சந்தோஷமா இருக்கிறதை நான் பார்த்துக்கிட்டிருக்கேனே, அதுவே ஆத்தா கருணை'ன்னு சொல்லிக்கிறது."

வானம் பொத்துக் கொண்டாற் போல் ஓயாத மழை. தலையில் சாக்கைப் போட்டுக் கொண்டு ஆண்டாளு வேலைக்கு வந்து விடுவாள்.

"ஜடம்! எதற்காக இந்தக் கொட்டுகிற மழையில் வந்தாயாம்?" என்று என்னுடைய மனைவி கேட்பாள்.

"நான் வராட்டி நீயல்லம்மா நனையணும்?"

அந்தக் கேள்வியில் படியும் குழைவில் இவளுக்கு மனம் இளகிப் போகும்.

எவ்வளவு நாட்கள் தாங்க முடியும்? ஆண்டாளுவுக்கு ஜுரம் வந்துவிட்டது. ஓயாத தலைவலி. முனகிக் கொண்டே இருப்பாள். ஆனால் வேலைக்கு வருவது நிற்கவில்லை. பத்மா என்னிடம் ஏதோ காரியமாகப் பேசிக்கொண்டிருந்த சமயம், குழந்தை அழுதது. அவள் ஓடிப்போய் எடுத்துக் கொண்டு விட்டாள்.

"மூதேவி! ஜுரக் கையோடு தொடுறியே? குழந்தைக்கும் பத்திக்கொள்ளட்டும்னு பார்க்கிறியா?" என்று சீறினள் பத்மா.

அவள் பதிலே பேசவில்லை. குழந்தையைக் கையில் கொடுத்துவிட்டு ஒதுங்கிக் கொண்டாள்; அவள் கண்ணில் நீர் ததும்பிக் கொண்டு நின்றது.

குழந்தை ஜுரத்துக்குத் தப்பித்துக் கொண்டது. என் மனைவிதான் படுத்துக் கொண்டு விட்டாள். இரண்டு நாட்கள் கண்ணைக்கூடத் திறக்கவில்லை. ஆண்டாளு வீட்டுக்கே போகவில்லை. எங்களோடு ஒருத்தியாக அவளும் இருந்தாள். அவள் குடும்ப ஞாபகமே அவளுக்கு இல்லை.

தீபாவளி வந்தது.

"ஆண்டாளுவுக்கு ஒரு புடவை வாங்கிக் கொடுக்கிறது தானே?" என்று நான் என் மனைவியிடம் கேட்டேன்.

"ஐந்து ரூபாய் பணம் கொடுத்தால் போதாதா?" என்று என் மனைவிக்குச் சந்தேகம். கடைசியில் புடவையே வாங்கிக் கொடுத்தாள். ஆனால் தீபாவளிக்குப் பிறகும் அவள் உடுத்திக் கொண்டிருந்தது அந்தப் பழைய கந்தல்தான்.

"இதைக் கேட்டீர்களா? புடவையைக் கொண்டு போய் இவள் தங்கையிடம் காட்டியிருக்கிறாள். 'உனக்கு எதற்கு இதெல்லாம்?' என்று அந்த ராங்கிக்காரி பிடுங்கிக் கொண்டு விட்டாளாம். 'அவள்தான் கட்டிக்கொள்ளட்டுமே அம்மா!' என்கிறது இந்த அசடு. ஆண்டாளுவுக்கு ஐந்து ரூபாய் பணமாகவே கொடுத்திருக்கலாம்" என்று ஒரு நாள் பேச்சுவாக்கில் சொன்னாள் பத்மா.

ஐந்து ரூபாய் பணம் கொடுத்திருந்தாலும் அவள் அதை அந்தக் குடும்பத்துக்காகத்தான் செலவிட்டிருப்பாளென்று எனக்குத் தோன்றியது. வாழ்க்கையின் சௌபாக்கியத்தையே அலட்சியமாகக் கொடுத்துவிடத் துணிந்தவளுக்கு ஒரு புதுப் புடவை எம்மாத்திரம்?

அன்று ஆண்டாளு துணிகளை முறுக்கிப் பிழிந்து கொண்டிருந்தாள்.

"ஐயாவுக்கு மாற்றல் உத்தரவு வந்துவிட்டது. அடுத்த வாரம் இராமநாதபுரத்திலிருப்போம்" என்றாள் பத்மா ஆண்டாளுவிடம்.

ஆண்டாளுவின் முகம் சட்டென்று வதங்கியது.

இரண்டு நாட்களுக்கு அவள் வீட்டுக்கே போகவில்லை. சாமானைக் கட்டி வைத்தாள். திடீர் திடீரென்று ஜயத்தைத் தூக்கி வைத்துக் கொள்வாள். அவள் கண் கலங்கி விடும்.

"ஆண்டாளுவுக்கு ஒரு பத்து ரூபாய் கொடேன். வேண்டியதை வாங்கிக் கொள்ளட்டும்" என்றேன். அவள் தயங்கினாள்.

"ஐந்து ரூபாய்ச் சம்பளத்தையும் இந்த மாதம் அட்வான்ஸாக முன்னாடியே வாங்கிக் கொண்டு விட்டாள். பதினைந்து நாட்கள் கூட ஆகவில்லை மாதத்தில். அதுவே இன்னும் பாக்கி நிற்கிறது."

"பரவாயில்லை, கொடு. அப்புறம் வேறு யென்றுங்கூட அவள்தான் உன்னைக் கேட்க முடியுமா? நீதான் கொடுக்கப் போகிறாயா?"

அவளுக்கு என்ன தோன்றிற்றோ, பணத்தைக் கொடுத்து அனுப்பி விட்டாள். நாங்கள் புறப்பட்டோம். திருப்பூரில் ரயில் ஏறவேண்டும். பஸ்ஸில் எங்களோடு ஆண்டாளுவும் வந்தாள். ஜயம் அவள் மடியிலேயே இருந்தாள்.

என்ஜினின் குரல் கிழித்துக் கொண்டு உள்ளே வந்தது. சாமான்களை அவசரம் அவசரமாக ஏற்றினோம். ஆண்டாளு குழந்தையைத் தூக்கி என் கையில் கொடுத்தாள். என் மனைவியைப் பார்த்துச் சிறு குழந்தையைப் போல விக்கி விக்கி அழ ஆரம்பித்துவிட்டாள்.

"எதற்காக இப்படி அழுகிறாய்? மறுபடியும் பார்க்காமல் போய் விடுகிறோமா? எங்கே போய்விட்டோம் அப்படி?" என்றேன்.

குரல் கரகரத்து உடைந்தது. அர்த்தமில்லாத பேச்சு. ஆண்டாளுவை மறுபடியும் பார்க்க வரப் போகிறோமா? ஆறுதலுக்காகச் சொல்லி வைத்தேன். வண்டி விழுங்க விழுங்கத் தண்டவாளம் நீண்டுகொண்டே போயிற்று.

"இதைப் பார்த்தீர்களா? புறப்படுகிற சமயத்தில் ஆண்டாளு கொண்டு வந்து கொடுத்தது. 'எதற்காகவடி?' என்று திருப்பினாலும் வைத்துக் கொள்ள வேண்டுமென்று ஒரே பிடிவாதம்."

பொட்டலத்தைப் பிரித்தேன். ஜயத்துக்கு அளவாக ஒரு பட்டுச் சட்டை. உயர்ந்த கைவேலை. விலை நிறைய இருக்கலாம். கழுத்துப் பட்டையில் தொங்கிய சீட்டைத் திருப்பினேன். பன்னிரண்டரை ரூபாய்!

என் மனைவி கொடுத்த இனாம்; அரைமாதமுன் சம்பளப் பணம்! ஆண்டாளுவுக்கு ஒன்றுமில்லை என்று யார் சொன்னது? அவள் மனத்தில் எப்பேர்ப்பட்ட நிறைவு? தயக்கமில்லாத தாராள மனப்பான்மை?

ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிக் கொண்டேன். அவள் ஏதோ கேட்டாள். பதில் இல்லை. எதிர் ஜன்னல் வழியே தலையை நீட்டி என் முகத்தைப் பார்த்தாள். அவளுக்குத் தெரியும்.

"என்னவாம் உங்களுக்கு?"

"ஒன்றுமில்லை... ஏதோ ஞாபகம்."

அவளுக்குப் புரிந்து விட்டது.

"பைத்தியந்தான்!"

யார்? நானா? ஆண்டாளுவா?

ஆசையையும் பற்றுதலையும் விட்டு விட முடியாமல் பிடித்துக் கொண்டு தவிக்கும் ஒவ்வொருவருமே பைத்தியங்கள்தாம்; ஒவ்வொரு வகையில். இல்லையா?

அட்டைப்பட விளக்கம்

## தென்றலென வருகின்றாள்!

கயல்போலும் விழிபிறழக் கன்னியெழில் ஒளிகிளரக்
கனகமலர்க் கலசமிரு சுடர்விரியப்
புயல்போலும் குழலவிழப் பிறைக்கீற்று நிலவெரிக்கப்
புள்ளியின மான்மறியு முடன்பயில
மயல்போலும் பீர்கொள்ள மங்கையவள் அழகுயரச்
செங்கையொரு புறம்வீசித் தெய்வமகள்
புயல்போலும் வனப்புமிகத் தென்றலென வருகின்றாள்
புதுமின்போல் இடைதளர வருகின்றாள்!



# மின்சாரத் திட்டத்தில் மேலுமொரு கட்டம்

மின்சார உற்பத்தியில் சென்னை ராஜ்யம் மின்சார வேகத்தில் முன்னேறி வருகிறது. நாட்டுக்கே ஜீவ சாரத்தை அளிக்கும் துறை மின்சாரம். இந்த மின்சார சக்திதான் என்னவெல்லாம் செய்து விடுகிறது?

சென்ற ஜனவரி 18ந் தேதியன்று நீலகிரியிலுள்ள குந்தாவில் ஒரு பித்தானைத்தான் வெறுமனே அமுத்தினார், கானடாவின் கீழ்சபை அரசாங்கத் தலைவரும் மந்திரியுமான கார்டன் சர்ச்சில். உடனே இந்த மின்சார சக்தி செய்த ஜாலத்தைப் பாருங்கள்: ஏக காலத்தில் பல காரியங்கள் நடைபெற்றன. மணிகள் முழங்கின; நாதசுரங்கள் இசைத்தன; பாறைகள் பிளந்தன; எல்லாவற்றையும்விட முக்கியமாக, ரோன்னிங் நகர் என்ற அந்த இடத்திலிருந்து பத்து மைல் தொலைவிலுள்ள மின்சார உற்பத்தி நிலையம் ஒன்றும் இயங்க ஆரம்பித்தது.

இந்த விசை நிலையத்தைத் திறந்து வைக்கத்தான் கானடா மந்திரி அவ்வளவு தொலைவிலிருந்து இங்கு வந்ததே. குந்தாவின் இந்த இரண்டாவது விசை நிலையத்தைத் திறந்து வைத்ததோடு குந்தா ஜல-மின் திட்டத்தின் மூன்றாவது கட்டத்தையும் அவர் தொடங்கி வைத்தார்.



எங்கேயோ சென்னை ராஜ்யத்திலுள்ள குந்தாவில் நடைபெறும் ஒரு விழாவுக்குக் கானடா தேசப் பிரமுகர் வந்ததற்குக் காரணம், இந்த ஜல மின் திட்டம் கானடாவின் உதவியுடன் நடைபெறுவதுதான். இது வரையில் இத்திட்டத்தின் கீழ் உருவாகியுள்ள இரு கட்டங்களும், இனி உருப்பெறப் போவதும் கானடாவின் தாராள உதவியைக் கொண்டுதான்.

இதுவரை பூர்த்தியாகியுள்ள இரண்டு கட்டங்களுக்காகவும் செலவான ரூ. 35.44 கோடியில் சுமார் 11 கோடி ரூபாய் கானடாவிலிருந்தே கிடைத்தது. அதோடு இனி நடைபெறவிருக்கும் விஸ்தரிப்புக்குத் தேவைப்படும் 23.5 கோடி ரூபாயில் சுமார் 9 கோடி ரூபாய் உதவ முன் வருகிறது கானடா.

நிதி உதவி ஒரு பக்கம் இருக்கட்டும். அதற்கும் மேலாக, கானடா என்ஜினீயர்கள் நமக்கு அளித்துள்ள பொறியியல் தொழில் நுட்ப அறிவையும், நம் தொழிலாளரோடு தொழிலாளராக அந்தத் தேச என்ஜினீயர்கள் பணி புரிந்ததையும், ஏன் என்பதற்கு முன் எண்ணெயாக அந்நாட்டுத் தொழிற்சாலைகள் இத்திட்டத்துக்கான உபகரணங்களை வினியோகித்ததையும் சொல்லி முடியுமா என்ன? நம் தமிழ் தொழிலாளரோடு உழைத்து, கானடா நிபுணர்கள் நற்பெயரைத் தட்டிக் கொண்டார்கள். அதன் விளைவாக, ஓர் ஊரையே தம் பெயருக்குத் தட்டிக்கொண்டு விட்டார் கானடா ஹை கமிஷனர் செஸ்டர் ஏ. ரோன்னிங். பணமாகவும், பொருளாகவும், போதனையாகவும் கானடா அளித்த உதவியின் ஒரு சின்னமாகவே விளங்குகிறது குந்தாவின் இரண்டாவது மின்சார நிலையம். இதிலிருந்து கிடைக்கும் 70,000 கிலோவாட் விசை எத்தனை எத்தனையோ தொழில்களின் அபிவிருத்திக்கும், கிராமங்களின் அபிவிருத்திக்கும் உதவும். இதோடு, சென்ற ஜூலையில்

பிரதமர் திறந்து வைத்தாரே 40,000 கிலோவாட் திறுவன சக்தியுள்ள முதல் விசை நிலையம் அதிலும். இன்னும் இத்திட்டத்தின் இலக்காகிய 4,20,000 கிலோவாட்டிலுள்ள பீடத்தின் தயாரிப்பிலும் கானடா பங்கு கொண்டு பல வீடுகளில் விளக்கேற்றி வைக்கப் போகிறது.



இதற்காகவெல்லாம் நான் இந்த மின்சார உற்பத்தி நிலையத் திறப்பு விழாவில் வரவேற்புரை நிகழ்த்திய ராஜ்ய மின்சார மந்திரி ஸ்ரீ ராமையாவும், தலைமை வகித்த முதல் மந்திரி ஸ்ரீ கே. காமராஜரும், மத்திய துணை மின்சார மந்திரி ஸ்ரீ ஜெய்ஸுகலால் ஹாதியும் கானடாவுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டதும். அதோடு இத்திட்டம் இவ்வளவு சிறப்பாக நிறைவுபெற்று வருவதற்கு, சிறந்த முறையில் பணியாற்றிவரும் மின்சாரத் துறை பிரதம என்ஜினியர் ஸ்ரீ அப்பாத்துரை அவர்களும் பெரும் பாராட்டுதலுக்கு உரியவராகிறார்.

நம் ராஜ்யத்தில் நடைபெற்று வரும் மின்சார அபிவிருத்திக்கெல்லாம் இவர் தான் காரணபுருஷர் என்றுகூடச் சொல்லலாம். வெளியார் அளிக்கும் உதவியைத் தக்கபடி உபயோகப் படுத்திக் கொள்வதில் இவர் பெற்றிருக்கும் 'நிபுணத்துவம்' தான் அவர்களுக்கும்மேல் மேலும் உதவியைப் பெருக்க மாட்டோமா என்ற ஆர்வத்தைத் தூண்டி வருகிறது. வானிலே, இயற்கை இரண்டுமே சோதிக்கும் சூழலில் மலைகளைக் குடைந்தும், காட்டாறுகளை வசப்படுத்தியும் தொண்டாற்றி வருகிறார்கள் நம் தொழிலாளர்களும், என்ஜினியர்களும். மூன்றரை ஆண்டு களிலேயே உத்தேச மதிப்பீட்டுக்கும் இரண்டரைக் கோடி ரூபாய் குறைவாகவே செலவிட்டுச் செயற்கரிய இப்பணியை அவர்கள் சாதித்து, கானடா மந்திரியிடமும் சபாஷ் பெற்றிருக்கிறார்கள். இதோ நாமும் போடுகிறோம் அவர்களுக்கு ஒரு சபாஷ்!

---

பைப்ஸ் அண்ட் டியூப்ஸ் ஸ்தாபனத்தின் மானேஜிங் டைரக்டர் பொள்ளாச்சி திரு என். மகாலிங்கம், பி. எஸ்ஸி., ஏ. எம். ஐ. ஈ., எம் எல். ஏ. அவர்களும், டைரக்டர் மேட்டுப்பாளையம் திரு என். சந்தப்பா, எம். எஸ்ஸி. அவர்களும் சமீபத்தில் மேற்படி ஸ்தாபனத்தைச் சென்னையில் நிறுவுவது சம்பந்தமாக அதன் தொழில் நுணுக்கங்களை அறிந்துவர இங்கிலாந்துக்கும் ஐரோப்பாவுக்கும் சென்றுவிட்டு டிசம்பர் மாதம் 2ம் தேதி வெற்றிகரமாகப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு சென்னை வந்து சேர்ந்தனர்.

நம்மாழ்வார் பாடிய

# பக்தி வெறி

ராஜாஜி

## 56

உளரும் இல்லை அல்லராய்,
உளராய் இல்லை ஆகியே,
உளர்—எம்ஒருவர்: அவர் வந்துஎன்
உள்ளத்துள்ளே உறைகின்றார்:
வளரும் பிறையும் தேய்பிறையும்
போல, அசைவும் ஆக்கமும்,
வளரும் சுடரும் இருளும்போல்,
தெருளும் மருளும் மாய்த்தோமே.

உளரும் இல்லை அல்லராய்
உளராய் இல்லை ஆகியே.

கீதை இரண்டாம் அத்தியாயம்

नासतो विद्यते भावो
नाभावो विद्यते सत: ।

ந அஸதோ வித்யதே பாவ:
ந அபாவோ வித்யதே ஸத:

என்று பகவான் சொன்னதை ஆழ்வார் இந்த அடியில் சுத்தத் தமிழில் சொல்லுகிறார்:

ஆன்மாவுக்குப் பிறப்பாவது இறப்பாவது இல்லை.

என்றும் உளனாகிய புருஷோத்தமன் என் உள்ளத்தில் உறைகிறான்.

உளர் எம்ஒருவர்; அவர்வந்து
என் உள்ளத்துள்ளே உறைகின்றார்

எம்ஒருவர் - எமக்கு ஆண்டவனான ஒப்பற்ற சர்வேசுவரன்.

சர்வேசுவரன் ஒருவனே மெய்ப் பொருள். அவன் என் உள்ளத்தில் உளன் என்று முதலாழ்வார் சொன்னதை இந்த அடியில் நம்மாழ்வார் சொல்லுகிறார்.

"உளன் கண்டாய் நன்னெஞ்சே
உத்தமன் என்றும்
உளன் கண்டாய் உள்ளுவார்உள்ளத்து
உளன் கண்டாய்."

வளரும் பிறையும் தேய் பிறையும்
போல அசைவும் ஆக்கமும்
வளரும் சுடரும் இருளும் போல்
தெருளும் மருளும் மாய்த் தோமே;

அசைவு—முடிவு.

கீதை எட்டாவது அத்தியாயம் 17 முதல் 20 வரையிலுள்ள சுலோகங்களை இந்த இடத்தில் படித்து ஒப்பு நோக்குதல் தகும்.

சிருஷ்டியும் பிரளயமும் பகலும் இரவும் போலவே யாகும். அறியாத பொருள் தோன்றியும் மறைந்தும், சிருஷ்டிப் பிரளயமாகக் காட்டிக் கொள்கிறது. நம்மைப் பொறுத்த அளவில் இரவில் அனைத்தும் ஒடுங்குகின்றன. பகல் ஆனதும் அனைத்தும் நமக்கு உண்டாகின்றன. இவ்வாறு திரும்பத் திரும்ப மறைவும் தோற்றமும் நடைபெற்றாலும் இவற்றுக்கு அப்பாற்பட்ட மெய்ப் பழம்பொருள் ஒன்று நிலையாக உண்டு. இது கீதாசாரியர் வாக்கு. அதையே இந்தப் பாசுரத்தில் ஆழ்வார் சொல்லுகிறார்.

பகலும் இருளும்போல் ஞானமும் அஞ்ஞானமும் மாறி மாறி வரும். அதைக் கண்டு குழப்பம் அடையலாகாது. அந்தக் குழப்பத்தை பகவதனுக்கிரகத்தால் மாய்த்தேன் என்கிறார். அதாவது ஞானம் பெற்றேன் என்கிறார். பகவத் கீதை 14வது அத்தியாயம் 10, 11 சுலோகங்களில் சொல்லப்பட்டதைப் பார்க்க வேண்டும்:

பரத புத்திரனே! சத்வ குணமானது ரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் அடக்கிச் சில சமயம் மேலெழும். சில சமயம் ரஜோ குணமானது சத்வத்தையும் தமஸையும் மீறும். சில சமயம் அவ்வாறே தமோ குணமானது சத்வத்தையும் ரஜஸை யும் அடக்கி மனிதனை வசமாக்கிக் கொள்ளும். பொறிவாய் அனைத்திலும் அறிவின் ஒளி உண்டாகின் அப்பொழுது தெரிந்து கொள்ளலாம் சத்வ குணம் மேலோங்கிற்று என்று.

22-வது 23-வது சுலோகங்களில் பகவான் சொல்லுகிறான்:

பாண்டவனே! குணங்களைக் கடந்த ஞானி சத்வ குணத்தின் தொழிலாகிய மனப் பொலிவு (ஆழ்வாரின் சொல்,

'தெருள்'), ரஜோகுணத்தின் தொழிலாகிய வினை நாட்டம், தாமஸ குணத்தின் தொழிலாகிய மதிமயக்கம் (ஆழ்வாரின் சொல், 'மருள்') இவற்றைக் கண்டபோது வெறுப்புக் கொள்ளாமலும் இல்லாதபோது அவற்றை நாடாமலும் இருப்பான், குணங்களின் செய்கைகளைக் கண்டு கலங்காமல் உதாசீனமாக இருப்பான், அதாவது நிலைகுலையாமல் இருப்பான்.

* * *

நெடுமாற்கு அடிமைசெய்வேன்போல்
 அவனைக் கருத, வஞ்சித்து,
தடுமாற்று அற்ற தீக்கதிகள் முற்றும்
 தவிர்ந்த, சதிர் நினைந்தால்,
கொடுமா வினையேன் அவன் அடியார்
 அடியே கூடும்; இது அல்லால்,
விடுமாறு என்பதுஎன், அந்தோ!
 வியன் மூவுலகு பெறினுமே?

பகவானுக்கு அடிமை செய்கிறவனைப் போல் பொய்யனாகிய நான் அப்படி நினைத்த அளவில் என் வினைகள் தீர்ந்து போயின என்கிறார். அவன் அருள் அவ்வளவு சுலபமாகக் கிடைத்தது. நான் அறியாமலே கிடைத்தது. தீவினையேனாகிய நான் அவனுடைய அடியார்களுடைய திருவடிகளையே சேர்வேன். மூன்று உலகங்களைப் பெற்றாலும் நான் அந்தப் பாகவதர்களிடம் சரண் புகுதலை விடமாட்டேன்.

தீக்கதிகள் முற்றும் வஞ்சித்துத் தவிர்த்த சதிர்.

சதிர்—உபாயம்.

வழிபட்டு ஓட, அருள் பெற்று,
 மாயன் கோலமலர் அடிக்கீழ்ச்
சுழிபட்டு ஓடும் சுடர்ச்சோதி
 வெள்ளத்து இன்புற்று
 இருந்தாலும்,
இழிபட்டு ஓடும் உடலினில்
 பிறந்து, தன்சீர் யான்கற்று,
மொழிபட்டு ஓடும் கவிஅமுதம்
 நுகர்ச்சி உறுமோ—முழுதுமே?

வழிபட்டு ஓட அருள்பெற்று—கைங்கரியத்திலே ஈடுபட்டுச் செய்யும்படி அவனுடைய அருள் பெற்று;

மாயன் கோல் மலரடிக் கீழ்ச் சுழிபட்டு ஓடும் சுடர்ச்சோதி வெள்ளத்து—பகவான்திருவடிகளின் கீழ் ஆற்றுப் பெருக்குப் போலே சுழிகள் பட்டுச் செல்லுகிற தேஜஸ் வெள்ளத்திலே அதாவது பரம பதத்திலே.

அந்தப் பரமபத இன்பத்தைவிட, இந்த உடலில் நான் பிறந்து பகவானுடைய கல்யாணகுணங்களை அறிந்து பாசுரத்தில் அமைத்துச் சொல்லும் ஆனந்தம் பெரிது என்கிறார்.

மொழிபட்டு ஓடும் கவி அமுதம்—உணர்ந்த உணர்வானது கவி வடிவம் எடுத்து வெள்ளமாக ஓடுகிற இன்பம்.

பகவானைப் பாடி அடையும் இந்த நுகர்ச்சி இன்பத்துக்கு, மேலே சொல்லிய பரமபதத்தில் அடையக் கூடிய இன்பங்கள் முழுதும் கூடினாலும் ஒக்குமோ? என்று ஆனந்தம் தாங்க மாட்டாமல் சொல்லுகிறார்.

இந்தப் பாசுரத்தின் அழகே அழகு.

# வட்டமேஜை



## அமுதம் படைத்த கை

'அமுதம் படைத்தகை'யை உருவாக்கிய ஸ்ரீமதி ரங்கநாயகி அவர்களின் பல கதைகளைக் கல்கியில் படித்த எனக்கு இவ்வாரம் இந்தக் கதையில் வரும் ஒவ்வோர் எழுத்தும் ஆனந்தக் கண்ணீராகப் பெருகுகிறது. என் குடும்பத்தில் உள்ள எல்லோரும் அப்படி ஆனந்தக் கண்ணீர் விட்டோம். எங்கள் மனமார்ந்த நன்றியை அவர்களுக்குச் செலுத்துகிறோம்.

நெய்வேலி
7—1—61 — வி. எஸ். சக்கரவர்த்தி

## விவசாயக் கடன்

மன்னார்குடி தாலுகாவில் சமீபத்தில் வாங்கப்பட்ட இருபது ஏக்கர் நன்செய் நிலங்களைச் செப்பனிட்டுச் சீர் செய்யவும் உழவு வண்டி மாடுகள் வாங்கவும் கடன் கோரி மன்னார்குடி ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர் அவர்களுக்குச் சென்ற 5—6—60ல் மனுவையும் நகல்களைத் தஞ்சை கலெக்டர் அவர்களுக்கும், மன்னார்குடி தாசில்தார் அவர்களுக்கும் அனுப்பினேன். பிறகு மூன்று தடவைகள் ரெவின்யூ டிவிஷனல் ஆபீசருக்கும் தாசில்தாருக்கும் ஞாபகக் குறிப்பு அனுப்பியும், மனுவுக்கு ஏற்பட்ட கதியைப் பற்றியே தெரிந்து கொள்ள முடியவில்லை. இப்படியிருந்தால் விவசாய அபிவிருத்தியில் எப்படிக் கவனம் செலுத்த முடியும்?

கும்பகோணம்
12-1-61 — என். பாலகுருமூர்த்தி

## கல்வி இலாகா கைங்கரியம்

எல்லாத் தொடக்கப்பள்ளி ஆசிரியர்களுக்கும் பொங்கல் பண்டிகைக்கு முன்னதாக டிசம்பர் மாதம் சம்பளம் கொடுபட வேண்டும் என்று சர்க்கார் உத்தரவிட்டிருந்தனர். ஆசிரியர்களும் ஊக்கத்துடன் ஆண்டுக் கணக்கை அனுப்பி வைத்து விட்டுச் சம்பளத்துக்குக் காத்திருந்தனர்.

நன்னிலம் சரகத்துத் தனியார் உதவி பெறும் பள்ளி ஆசிரியர்கள் எல்லாரும் சம்பளம் வராத காரணத்தால் பொங்கல் பண்டிகையன்று ஏகாதசி விரதத்தை மேற்கொள்ளும்படி ஆகிவிட்டது.

நன்னிலம்
13-1-61 — ரெ. வேங்கடாசலம்

## திருச்சி நகரின் அவலநிலை

திருச்சி நகரின் ரஸ்தாக்கள் அநேகமாகக் குறுகலானவை. கடந்த சில ஆண்டுகளாகச் சுகாதார அதிகாரிகளின் கவனக் குறைவினால் நகரசுத்தியாளர்கள் தெருக்களைச் சரிவரச் சுத்தம் செய்யாததால் கொசுத் தொல்லை மிகவும் அதிகரித்துள்ளது. சிலர் தெருக்களின் ஓரங்களை மாட்டுத் தொழுவமாக உபயோகித்து வருகின்றனர். இவற்றை எத்தனையோ தடவைகள் நகர மன்ற அங்கத்தினர்களிடம் எடுத்துரைத்தும் இதுவரை ஒரு மன்ற உறுப்பினராவது உருப்படியான நடவடிக்கை எடுக்கவில்லை. இதுதவிர பன்றிகள், கழுதைகள் தொல்லை வேறு. அடுத்து திருச்சி டவுன் ஸ்டேஷன் ரஸ்தாவும், தஞ்சாவூர் குள ரஸ்தாவும் தற்போது இருக்கும் நிலையைக் குறிப்பிடுவதென்றால் எழுத்தில் அடங்காது. இதன் வழியாகத்தான் தினமும் ஆயிரக்கணக்கான உத்தியோகஸ்தர்களும், கல்லூரி, பள்ளி மாணவர்களும், இன்னும் வெளியூர்களிலிருந்து வரும் பிரயாணிகளும் செல்லவேண்டியிருக்கிறது. இந்த ரஸ்தாவைப் பார்த்தவுடனே திருச்சி நகராட்சியைப் பற்றி எப்படிப்பட்ட அபிப்பிராயம் ஏற்படும் என்பது நேரில் பார்த்தவர்களுக்கே தெரியும். தெருக்களின் அமைப்பு விஷயத்திலும் நகரசபையார் சரிவரக் கவனம் செலுத்தவில்லை. தெருக்களின் நடுப்பாகம் மேடாகவும் பக்கங்கள் சற்றுச் சரிவாகவும் இருந்தாலல்லவோ தண்ணீர் தெருவில் தங்காமல் இருக்கும். இங்குள்ள ரஸ்தாக்களோ இதற்கு நேர்மாறாக இருக்கின்றன.

நகரத்தில் வெளியூர் பஸ் நிலையம் ஏற்படுத்த இன்னும் தாமதம் ஏனோ தெரியவில்லை. மெயின்கார்டு ரோட்டில் ஒரு பஸ் ஸ்டாண்டிலாவது மழை, வெயிலுக்கு ஒதுங்க நகரசபை ஒரு ஷெல்டர்கூடக் கட்டவில்லை.

தெருக்களின் விளக்குகள் சில இடங்களைத் தவிர மற்ற இடங்களில் மண்ணெண்ணெய் விளக்குகளைவிட மங்கலாக இருக்கின்றன. மெர்க்குரி விளக்குகள் போட்ட இடங்களில் 'பல்ப்' ஆனவற்றை உடனுக்குடன் மாற்றுவதுமில்லை.

தயவுசெய்து இந்நகராட்சியின் பொறுப்பற்ற நிலையை அறிந்து நகராட்சி செவ்வனே நடைபெறச் செய்ய ராஜ்ய அரசாங்கத்தினரை வேண்டிக் கொள்கிறேன்.

திருச்சி
13- -61 — க. நாகராஜன்

## லைசென்ஸ் தொல்லை!

சமீப காலம் வரை மின்சார வேலை தெரிந்த எந்தத் தொழிலாளியும் ஒருவீட்டுக்கு விளக்குப் போட்டுக்கொடுத்துவர முடிந்தது. இப்பொழுது இதற்குக் காங்கிரஸ் சர்க்கார் லைசென்ஸ் பெற வேண்டும் என்றும், கண்டிராக்டர் லைசென்ஸ் பெறச் சுமார் இரண்டாயிரம் ரூபாய் பெறுமான சாமான்கள் வைத்திருந்தால்தான் லைசென்ஸ் கொடுக்க முடியுமென்றும் கூறுகிறார்கள். ஒரு பஸ் பர்மிட் பெறக்கூட ஓர்க்ஷாப் என்று பெயரளவில் காட்டி, ஒரு மார் பெறச் சுமார் ஐந்நூறு ரூபாய்ச் சாமான்கள் போதும். ஆனால் அவசியமில்லாத இரண்டாயிரம் ரூபாய்ச் சாமான்கள் வைத்திருந்தால்தான் மின்சார கண்டிராக்டர் லைசென்ஸ் கொடுக்க முடியுமென்று கூறுவது சரியாகுமா?

ஆர்க்காடு
14-1-61 — ஏ. பார்த்தசாரதி

# தமிழ் கூறும் நல்லுலகம்

**நா**சிக் தேவலாலியிலுள்ள ஐயப்ப சேவா சமாஜத்தார் மகர விளக்கு விழாவை வெகு விமரிசையாக நடத்தினார்கள்.

★

**நா**கபுரி நுண்கலைக் கழகத்தின் ஆதரவில் ஜனவரி 14, 15 தேதிகளில் ''தியாகராஜர் தினம்'' வெகு விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. அவ்வமயம் இளம் பாடகர்கள் பாடகிகள் பலர் பங்கெடுத்துக் கொண்டனர்.

★

**ப**ம்பாய்த் தமிழர்களுக்குப் புத்தாண்டு மிகக் குதூகலமாகப் பிறந்தது. கடந்த டிசம்பர் 31-ந் தேதியன்று கலா நிலையத்தினர் ஒரு கதம்ப நிகழ்ச்சியை நடத்தினார்கள். பம்பாய் கிங் ஜார்ஜ் உயர்நிலைப் பள்ளியில் இவர்கள் நடத்திய கதம்ப நிகழ்ச்சி நல்ல மணமுள்ள கதம்பமாகவே மலர்ந்தது.

அன்றே பொதார் கல்லூரி ஹாலில் குமாரி இந்திராவின் நாட்டிய அரங்கேற்றமும் சிறப்பாக நடந்தது.

★

**ப**ம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் கடந்த ஆறு ஆண்டுகளாகச் சங்கத்தின் பெண் அங்கத்தினர்கள் நடத்தும் நாடகம் வழக்கம் போல் இவ்வருடமும் நடந்தது. ''கப்பிப் கல்யாணி'' என்ற நாடகத்தை அவர்கள் சிறப்புடன் நடித்தனர்.

★

**க**டந்த ஜனவரி 5-ந் தேதி பம்பாய் ராஜ ராஜேஸ்வரி கலா மந்திரத்தார் முதன் முறையாக சாம, அதர்வ வேதப் பாடல்களுக்கு அபிநயம் அமைத்து நிருத்திய கீதாஞ்சலி என்ற நாட்டியத் தொகுப்பு ஒன்றை அரங்கேற்றினர். குமாரி சுதா துரைஸ்வாமி இதில் முழுப்பங்கு கொண்டு நன்றாக அபிநயம் செய்தார்.

★

**சௌ**த் இந்தியா கிளப், கர்நாடக சங்கீத சபை, டில்லி தமிழ்ச் சங்கம், ஸ்ரீ சண்முகானந்த சங்கீத சபை ஆகியவைகளின் சார்பில் சமீபத்தில் பாரதி ஜயந்தி விழா புது டில்லியில் நடந்தது. லோக சபை அங்கத்தினர் திரு வி. ஆர். பட்டாபிராமன் தலைமை வகித்தார். விழாவை முன்னிட்டு, டில்லி தமிழ்ச் சங்கத்தார் வெளிக் கொண்டு வந்த ''கடல்'' சிறப்பு மலரைத் தமிழ் அறிஞர் திரு ப. நடராஜன் அவர்கள் வெளியிட்டு உரை நிகழ்த்தினார்.

**ப**தின்மூன்று ஆண்டுகளுக்கு முன், ஜாம்ஷெட்பூரில் மிகச் சுருங்கிய முறையில் தொடங்கிய ''சாஸ்தாப் ப்ரீதி'' இந்த ஆண்டு 2-1-61 முதல் 8-1-61 முடிய ஒரு வாரம், சிறந்த இன்னிசை விருந்துகள் பூஜைகள் லட்சார்ச்சனை முதலியவற்றுடன் வெகு விமரிசையாக மதுரஸி ஸம்மேளனக் கட்டடத்தில் அமைக்கப்பட்ட பந்தலில் கொண்டாடப்பட்டது.

முதல் மூன்று நாட்கள் ஸ்ரீ எம்பார் விஜய ராகவாச்சாரியாரின் சிறந்த கதா காலட்சேபங்களும், மறுநாள் புதுக்கோடு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கோஷ்டியினரின் இசையும், ஸ்ரீமதி கமலாசனு பட்டாபிராமனின் இசை விருந்தும், வேதாரண்யம் ஸ்ரீ வேத மூர்த்தியின் நாகஸ்வர இசையும் நடைபெற்றன. சனிக்கிழமையன்று காலையில் ஸத்குரு ஸ்ரீ தியாகப்பிரும்மத்தின் ஆராதனையும் நடந்தது. மாலை ஐயப்பன் திருவுருவம், நாகஸ்வர இன்னிசை முழங்க, ஊர்வலமாக எடுத்துச்செல்லப்பட்டது. நிகழ்ச்சிகள் அனைத்திலும் ஜாம்ஷெட்பூர்வாழ் தமிழர்களும், பிறரும் பேதமின்றிக் கலந்து கொண்டது பாராட்டுக்குரியது.

★

''**நா**ன் கன்னடத்து வழி வந்தாலும் தமிழ் நாட்டின் நலனையே முதன்மையாகப் போற்றுகிறேன். நான் தமிழர்களோடு ஒன்றி விட்டேன்'' எனத் தமிழ்நாட்டின் சட்டசபைத் தலைவர் டாக்டர் யு. கிருஷ்ண ராவ் அவர்கள் பெங்களூர் சட்டக் கல்லூரி தமிழ் மலையாள மன்றத்தின் சார்பில் பேசுகையில் கூறினார். மன்றத் தலைவர் ரு. வெ. கிருட்டிணசாமி அனைவரையும் வரவேற்றார். திரு எ. வா. விசுவேசுவரன் நன்றி கூறினார்.

★

**ப**ம்பாய் மாதுங்காவில் பகவான் ஸ்ரீ ரமணரின் 81வது ஜெயந்தி விழா ஸ்ரீ ரமண சச்சிதானந்த சமாஜத்தின் ஆதரவில் ஜனவரி 1ந் தேதி முதல் 8ந் தேதி வரையில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. பம்பாய் பாரதீய வித்யா பவனத்தின் அதிபரான ஸ்ரீ தவே விழாவை ஆரம்பித்து வைக்க, யோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள் தலைமை உரை நிகழ்த்தினர்.

★

**கோ**விந்தப்பூர் பஜனை சமாஜத்தின் ஆதரவில் லால்குடி ஸ்ரீ சப்தரிஷி சாஸ்திரிகளால் ராதா கல்யாண மஹோத்ஸவம் ஜனவரி 8ந் தேதி வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

# மணிபல்லவம்

## 7 வீரசோழிய வளநாடுடையார்





வாழ்க்கையில் ஒவ்வோருணர்வுக்கும் மறுபுறம் என்பதொன்றுண்டு. சிலருக்குப் பிறர்மேல் ஏற்படுகிற அன்பின் மறுபுறம் வெறுப்பாக இருக்கும். அல்லது வெறுப்பின் மறுபுறத்தைத் திருப்பிப் பார்த்தால் தவிர்க்க முடியாத பேரன்பாக இருக்கும். ஒன்றாக இருப்பினும், நிறமும் தோற்றமும் வேறுபடும் உள்ளங்கையும், புறங்கையும் போல இந்த உணர்வுகளும், உறவுகளும் அமையும். நேரிற் காணும்போது குத்தலாகவும், ஏளனமாகவும் பேசி விட்டாலும் இளங்குமரனிடமிருந்த ஏதோ ஒரு கவர்ச்சி வீரசோழிய வளநாடுடையார் மனத்தினுள் அவனை நினைத்து ஏங்கும் பிணைப்பை உண்டாக்கியிருந்தது. இதனால் அந்த அநாதை இளைஞனை 'உறுதியாக வெறுக்க வேண்டும்'—என்று நினைத்துக்கொண்டே அந்நினைவின் மறுபுறம் அவன்மேல் கவலையும் அக்கறையும் அவர் காட்டி வந்தார். அதற்குக் காரணமானதும் உணர்வு ஒருபுறம் விரும்பாமல் மனம் விரும்பியதுமான அன்புத் தூண்டுதல் அவருள் மிக அந்தரங்கமானதாக இருந்தது.

அன்று காலை முல்லையும், இளங்குமரனும், நாளங்காடிப் பூத சதுக்கத்துக்குப் புறப்பட்டுச் சென்ற பின்னர் வீரசோழிய வளநாடுடையாருக்கும், அருட்செல்வ முனிவருக்கும், தங்களுக்குள் உரையாடுவதற்குத் தனிமை வாய்த்தது.

நாம் அறிவதற்கு ஆவல் கொண்டுள்ள பல செய்திகளைத் தூண்டிக் கேட்கும் விருப்பத்துடன் வந்து அமருகிறவர் போல் முனிவரின் கட்டிலுக்கு மிக அருகில் வந்து அமர்ந்தார் வீரசோழிய வளநாடுடையார். அவர் இவ்வாறு வந்து உட்காரும் நோக்கத்தைப் புரிந்து கொண்டவர் போல் தமக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டார் முனிவர்.

"உங்களுடைய இல்லத்துக்கு வந்து நீண்ட நாட்கள் ஆகிவிட்டனவே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன், உடையாரே!



நா. பார்த்தசாரதி

எப்படியோ சந்தர்ப்பம் நேற்றிரவு இங்கே வந்து தங்கும்படி செய்துவிட்டது. ஆனால் இப்படி அடி, உதைபட்டுக் கொண்டு வந்து தங்கியிருப்பதை நினைக்கும்போது தான் என்னவோ போலிருக்கிறது.''

''கவலைப்படாதீர்கள், முனிவரே! நானும் கிழவன். நீங்களும் கிழவர். நம் போன்றவர்களுக்கு இந்த வயதில் இப்படிச் சந்தித்து மனம் விட்டுப் பேசுவதைப் போலச் சுவையான அனுபவம் வேறு கிடைக்க முடியாது. எவ்வளவோ செய்திகளைப் பற்றி விரிவாகப் பேசலாம் அல்லவா...?'

''ஆகா! நீங்கள் ஆசைப்படும்போது நான் பேசுவதற்கு மறுக்க இயலுமா? ஆனால் உங்களுடைய கருத்தில் ஒரே ஒரு அம்சத்தை மட்டும் நான் மறுக்க வேண்டியவனாக இருக்கிறேன். மூப்பு நெருங்க நெருங்கப் பேசாமைதான் சுவையான அனுபவமாகப் படுகிறது எனக்கு. மூப்புக் காலத்தில் மனத்தினுள் முன்பு வாழ்ந்த நாளெல்லாம் கட்டி வைத்த நினைவுச் சுமைகளையே அவிழ்த்துப் பார்த்து ஒழுங்கு செய்யக் காலம் காணாதபோது பேசிப் பேசிப் புதிய நினைவுச் சுமைகளையும் சேர்க்கலாமா?''

''முனிவர் பெருமானுக்குத் தெரியாத மெய்யில்லை. இன்பமும், துன்பமும், நிறைந்த நினைவுகளைச் சுமப்பதுதானே உயிர்ப் பயணம்? முடிவற்ற அந்தப் பயணத்தில் அவ்வாறு நினைவுகளைச் சுமப்போரைக் கண்டும் நாம் சுமையின்றி நடந்து போகலாமென எண்ணி ஒதுங்கலாமா, அடிகளே?''

''ஒதுங்க வேண்டுமென்று நான் கூறவில்லை, உடையாரே! இந்தப் பிறவிக்குப் போதும் போதுமென்று சொல்லுமாற் போல அவ்வளவு நினைவுச் சுமைகளை ஏற்கனவே கனமாகச் சுமந்து கொண்டிருக்கிறேன் நான்.''

இவ்வாறு கூறிவிட்டு முகத்தில் ஏக்கமும், ஆற்றாமையும் தோன்ற நெட்டுயிர்த்தார் முனிவர்.

'' பிறரிடம் ஒருமுறை மனம் திறந்து பேசினாலாவது உங்கள் நினைவுச் சுமையின் கனம் குறையலாம் என்று எனக்குத் தோன்றுகிறது முனிவரே!''

'' செய்யலாம் உடையாரே! ஆனால் எல்லாச் செய்திகளையும் எல்லாரிடமும் மனம் திறந்து பேசிவிட முடிவதில்லை. சில செய்திகளை இதயத்துக்குள்ளேயே இரண்டாம் முறையாகத் திறந்து எண்ணிப் பார்ப்பதற்கும் பயமாக இருக்கிறதே....''

இதைக் கேட்டு வீரசோழிய வளநாடுடையார் இரைந்து வாய் விட்டுச் சிரித்தார்.

'' முனிவரே! இந்த மாபெரும் நகரத்தின் புறவீதியில் சாதாரணக் காவல் வீரனாகச் சுற்றிய நான் தொடங்கிப் பின்பு காவற்படைத் தலைவனாகி இன்று ஓய்வு பெற்றிருக்கும் நாள் வரை உங்களை எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால் இன்னும் நீங்கள் என்னிடம் சில செய்திகளை மறைத்தே பேசி வருகிறீர்கள். துறவிகளுக்கு ஒளிவு மறைவு கூடாதென்பார்கள். நீங்களோ மிக மிகப் பெரிய செய்திகளையெல்லாம் ஒளித்து மறைத்துக் காப்பாற்றி வருகிறீர்கள். பலமுறை அவற்றை அறிய முயன்றும் தொடர்ந்து நான் ஏமாந்து கொண்டே வருகிறேன். இன்றும் அதேபோல் ஏமாற்றத்தைத் தவிர வேறு மறுமொழி உங்களிடமிருந்து எனக்குக் கிடைக்காது போலத் தோன்றுகிறதே?''

'' இந்த விநாடி வரை ஒரு கேள்வியும் கேட்காமலே நான் மறுமொழி கூறவில்லையென்று நீங்களாகக் குற்றம் சுமத்துவது நியாயமாகுமா உடையாரே?''

'' நான் எதைக் கேட்பதற்கு நினைக்கிறேன், என்ன கேட்கப் போகிறேன், என்பதொன்றும் உங்களுக்குத் தெரியாதது போல் மறைக்கிறீர்கள் அருட்செல்வரே!''

இதைக் கேட்டவுடனே முனிவர் வீரசோழிய வளநாடுடையார் முகத்தைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். மெல்ல அவரை நோக்கி நகை புரிந்தார்.

'' இந்தப் பார்வையையும், இந்தச் சிரிப்பையும் தவிர இத்தனை காலமாக என்னுடைய கேள்விக்கு நீங்கள் வேறு மறுமொழி எதுவுமே கூறவில்லை முனிவரே! இந்தப் பிள்ளையாண்டான் இளங்குமரனைப் பற்றி அவன் சிறுபிள்ளையாக இருந்த நாளிலிருந்து நானும்தான் உங்களைத் தூண்டித் தூண்டிக் கேட்டுக் கொண்டு வருகிறேன். இதுவரை என் கேள்விக்குப் பயன் விளையவில்லை.''

'' இளங்குமரனைப் பற்றி உங்களுக்கு என்ன தெரிய வேண்டுமோ?''

'' இதென்ன கேள்வி முனிவரே? என்னென்ன தெரியக் கூடுமோ அவ்வளவும் தெரிந்தால் நல்லதுதான். அந்தப் பிள்ளையை வளர்த்து ஆளாக்கிய உங்களைத் தவிர வேறு யாரிடம் போய் நான் இவற்றையெல்லாம் கேட்க முடியும்?''

''உடையாரே! ஏதோ ஓர் அந்தரங்கமான எண்ணத்தை மனத்திற் கொண்டு நீங்கள் இளங்குமரனைப் பற்றி விசாரிக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். நான் நினைப்பது சரிதானே?''

"ஆமாம், முனிவரே! உங்களுக்குத் தான் எதையும் ஒளித்து மறைத்துப் பேசி வழக்கம். என்னுடைய அந்தரங்கத்தை நீங்கள் இப்போதே தெரிந்து கொள்ளுவதிலும் எனக்கு மறுப்பில்லை. என்னுடைய பெண் முல்லைக்கு இந்தப் பிள்ளையாண்டான் பொருத்தமான கணவனாக இருப்பானென்று வெகு நாட்களாக எனக்கு ஒரு நினைப்பு இருக்கிறது. ஆனால் அந்த நினைப்பு ஒன்றை மட்டுமே தூண்டுதலாகக் கொண்டு அதை நான் செய்து விடுவதற்கில்லை. இளங்குமரனுடைய பிறப்பிலிருந்து எதிர்காலம் வரை ஓரளவு தீர்மானமாகத் தெரிந்து கொண்ட பிறகுதான் முல்லையை அவன் கையில் ஒப்படைக்க நான் துணிய முடியும். இப்படியே இப்போதிருப்பதுபோல் ஊர் சுற்றும் முரட்டுப் பிள்ளையாக அவன் எப்போதும் இருப்பதானால் முல்லையை இளங்குமரனோடு



தொடர்புபடுத்தி நினைப்பதையே நான் விட்டுவிட வேண்டியதுதான். செய்யலாமா கூடாதா என்று இந்த எண்ணத்தை மனத்தில் போட்டுக் குழப்பிக் கொண்டிருப்பதனால்தான் உங்களிடம் இளங்குமரனைப் பற்றி அடிக்கடி விசாரிக்க நேர்ந்தது" - என்று இந்தச் செய்தியை முனிவரிடம் சொல்லி முடித்த போது மனத்திலிருந்து பாரத்தை இறக்கி வைத்தாற்போல் இருந்தது வீர சோழிய வளநாடுடையாருக்கு. அவர் அதற்கு விளக்கமான பதிலை எதிர்பார்த்து முனிவருடைய முகத்தை நோக்கினார். சிறிது நேரம் முனிவரிடமிருந்து பதில் வரவில்லை. அவர் எதற்கோ சிந்தித்துத் தயங்குவது போலிருந்தது.

"உடையாரே! உங்கள் கேள்விக்கு மறுபடியும் பழைய பதிலைத்தான் கூற வேண்டியிருக்கிறது. சில செய்திகளை இதயத்துக்குள்ளேயே இரண்டாம்முறையாக நினைத்துப் பார்ப்பதற்கும் பயமாக இருக்கிறது. ஒரு மனிதன் உலகத்தை முழுமையாகப் புரிந்து கொள்ளுவது ஞானம். ஒரு மனிதனை உலகம் முழுமையாகப் புரிந்து கொள்வது அதிர்ஷ்டம். இளங்குமரன் ஒரு காலத்தில் இவ்விரண்டு பாக்கியங்களையுமே பெறப் போகிறான் என்றாலும் இன்றைக்கு அவன் வெறும் இளைஞன். சக்கரவாளக் கோட்டத்துத் தவச்சாலையிலுள்ள முனிவர் ஒருவரால் வளர்த்து விடப்பட்ட முரட்டுப் பிள்ளை. இதுவரையில் அவன் உடம்பைத் தவிர உள்ளத்தை அதிகமாக வளர்க்க முயலாத நான் இப்போதுதான் சிறிது காலமாக அவன் உள்ளமும் வளர்வதற்கு உரியவைகளைக் கற்பித்துக் கொண்டு வருகிறேன். இவற்றைத் தான் அவனைப் பற்றி இப்போது உங்களிடம் கூற முடியும்."

"இவற்றில் புதிதாக எந்த உண்மையையும் எனக்கு நீங்கள் கூறவில்லையே, முனிவரே!"

"உண்மை வேறு, வாய்மை வேறு, மெய்ம்மை வேறு! உடையாரே, உள்ளத்துத் தூய்மை உண்மை. சொல்லில் தூய்மை வாய்மை. உடல் ஈடுபாட்டு நிகழும் செயலில் தூய்மை மெய்ம்மை. இந்த மூன்றும் இளங்குமரனுக்கு ஒருபோதும் நான் தீங்கு நினைக்கவில்லை.

**"வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றும்**
**தீமை யிலாத சொலல்"**

என்றுதான் நம் முன்னோர்கள் வாய்மைக்கு வரையறை வகுத்திருக்கிறார்கள். பிறருக்குத் தீமை தரும் உண்மையைக் கூறுவதும் பொய். பிறருக்கு நன்மை தரும் பொய்யைக் கூறுவதும் வாய்மை! இளங்குமரனைப் பற்றிய சில உண்மைகளை நான் கூறாமல் மறைத்து வருகிறேனென்பதற்குக் காரணம் அந்த உண்மைகள் வெளியாகும்போது அவற்றால்

இளங்குமாரனுக்கு ஏற்படும் நன்மைகளைக் காட்டிலும் தீமைகள் அதிகமென்பதுதான்.''

''நான் ஏதோ அந்தப் பிள்ளையைப் பற்றி அவனுக்கு முன்னாலேயே ஏளனமாகப் பேசுகிறேனே என்பதனால் என்னை அவனுக்கு ஆகாதவன் என்று நினைத்து நீங்கள் பயப்பட வேண்டாம் முனிவரே! அந்தரங்கமாக எனக்கு அவன் மேல் நிறைந்த அநுதாபம் உண்டு. இல்லாவிட்டால் என் மகளுக்கு அவனை மணமகனாக்கிக் கொள்ளும் ஆவலை உங்களிடம் கூறியிருப்பேனா, அடிகளே? இளங்குமரன் சோழர் படைக் குழுவிற் சேர்ந்து பெருவீரனாகப் புகழ்மாலை சூட வேண்டுமென்றெல்லாம் எனக்கு ஆசை உண்டு. அந்தப் பிள்ளையின் தோற்றமும், உடல் வலிமையும் எத்தனையோ பெரிய காரியங்களைச் சாதிக்கும் தகுதி வாய்ந்தவை என்பதை நான் உணர்ந்திருக்கிறேன் முனிவரே!''

''அப்படி நீங்கள் உணர்ந்திருப்பது உண்மையானால் அவனைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆவலைச் சிறிது காலத்துக்கு அடக்கி வைத்துக் கொள்வதுதான் நல்லது.''

''உங்களைப் போல் நிறையப் படித்த ஞானிகளாயிருப்பவர்களுக்குப் பேசுவதில் ஒரு வசதி இருக்கிறது. எதையும் பிறருக்குப் புரியாமலும், பிறராகப் புரிந்துகொள்ள முடியாமலும் அழகாகப் பேசிவிட முடிகிறது.'' - வீர சோழிய வளநாடுடையார் தம்மைக் குத்திக் காட்டுவதுபோல் பேசிய இந்தப் பேச்சைக் கேட்ட பின்பும் முனிவர் அமைதியாகவே சிரித்துக் கொண்டிருந்தார். எத்தகைய பேச்சுக்களையும் ஏற்றுத் தாங்கிப் பழகிய அவருக்கு இது பெரிதாக உறுத்தவில்லை. சாதாரணமானவற்றுக்கெல்லாம் உணர்ச்சி வசப்பட்டுப் பழக்கமில்லை அவருக்கு.

வீர சோழிய வளநாடுடையாருக்கும் அருட்செல்வ முனிவருக்கும் இன்று நேற்றுப் பழக்கமில்லை. ஆனாலும் அன்று அந்தக் காலை நேரத்துத் தனிமையில் ஒருவருக் கொருவர் ஆழம் பார்க்க முயன்றது இப்படி முடிந்தது. இந்தச் சமயத்தில் வீட்டு வாயிலில் குதிரைகள் வந்து நிற்கும் ஒலி கேட்கவே இருவருடைய பேச்சும் நிற்க நேர்ந்தது. வீர சோழிய வளநாடுடையார் வாயிற்புறம் வந்திருப்பது யாரென்று பார்ப்பதற்காக விரைவாய் எதிர் கொண்டு சென்றார்.

கதக் கண்ணனும், முதல் நாளிரவு அவனுடனே சம்பாபதி வனத்தில் சுற்றிய மற்றோர் ஊர்காவலனும் வேறு சில இளைஞர்களும் இல்லத்துக்குள் பரபரப்போடு நுழைந்தார்கள்.

''இராக் காவலை முடித்துக்கொண்டு பொழுதோடு வீட்டுக்குத் திரும்பக்கூடாதா குழந்தாய்? இப்படிச் சிறிது நேர உறக்கம் கூட இல்லாமல் பொழுது விடிகிறவரை கண் விழித்து ஊர் சுற்றுகிறாயே; உடல் நலம் என்ன ஆவது?'' என்று புதல்வனை அன்போடு கடிந்து கொண்டு பேச்சைத் தொடங்கிய வீர சோழிய வளநாடுடையாரை மேலே பேச விடாமல் இடைமறித்து,

''அதெல்லாம் இருக்கட்டும் அப்பா, இப்போது இளங்குமரன் இங்கிருக்கிறானா, இல்லையா? முதலில் அதைச் சொல்லுங்கள்'' எனப் பரபரப்போடு விசாரித்தான் அவருடைய அருமைப் புதல்வன்





கதக்கண்ணன். அவனுடன் வந்து நின்றவர்களும் அவன் கேட்ட அந்தக் கேள்விக்குத் தம்மிட மிருந்து பதிலை எதிர்பார்த்துப் பரபரப்புக் காட்டுவதை அவர்களுடைய முகச் சாயலிலிருந்து வளநாடுடையார் புரிந்து கொள்ள முடிந்தது.

"உன்னுடைய தங்கை முல்லை அந்தப் பிள்ளை யாண்டானைத் துணைக்கு அழைத்துக் கொண்டு பூத சதுக்கத்துக்குப் படையல் இடப் போயிருக்கிறாள். நீ திரும்பி வந்தால் உன்னை இங்கேயே இருக்கச் சொன்னான் இளங்குமரன். அவனுக்கு உன்னிடம் ஏதோ முக்கியமான செய்திகள் பேச வேண்டுமாமே?"

இந்த மறுமொழியை அவர் கூறிவிட்டு எதிரே பார்த்தபோது கதக்கண்ணன் உட்பட நின்று கொண்டிருந்தவர்களில் ஒருவர்கூட அங்கே

இல்லை. வேகமாக ஓடிப் போய்க் குதிரைகளில் தாவி ஏறிக்கொண்டிருந்தார்கள். அடுத்த கணம் வாயிலில் நின்ற குதிரைகள் புற வீதியில் புழுதிப் படலத்தைக் கிளப்பிக் கொண்டு பறந்தன.

“அப்படி என்ன அவசரம் குடிமுழுகிப் போகிறதோ?” என்று தமக்குள் முணுமுணுத்தபடி வாயிலில் இறங்கிக் குதிரைகள் விரைந்து செல்லும் திசையில் வெறித்து நோக்கினார் அவர்.

## 8 சுரமஞ்சரியின் செருக்கு

கண் மூடித் திறக்கும் நேரத்தில் அந்நிகழ்ச்சி நடந்து விட்டது. ஓவியன் மணிமார்பன் பயந்து போய் ஒதுங்கி நின்றான். முல்லை திடுக்கிட்டு அலறினாள். நாலைந்து முரட்டு யவனர்களும் பூதாகாரமான மல்லன் ஒருவனும் இளங்குமரனைச் சூழ்ந்து கொண்டு தாக்குவதற்குத் தொடங்கியிருந்தார்கள்.

“நேற்று மாலை கடற்கரையில் வெற்றி கொண்ட சாமர்த்தியம் இப்போது எங்கே போயிற்று, தம்பி?” — என்று கூறி எள்ளி நகையாடிக் கொண்டே இளங்குமரன் மேல் பாய்ந்தான் அந்த மல்லன். இளங்குமரன் கன்னத்தில் அறைந்ததுபோல் பதில் கூறினான் அந்த யவனத் தடியனுக்கு.

“சாமர்த்தியமெல்லாம் வேண்டியமட்டும் பத்திரமாகஇருக்கிறது. அப்பனே! என்னிடம் இருக்கிற சாமர்த்தியத்தை வைத்துக் கொண்டு உனக்கும் பதில் சொல்லலாம்; உன்னுடைய அப்பன், பாட்டனுக்கும் பதில் சொல்லலாம். சந்தேகமிருந்தால், தனித் தனியாக என்னோடு மல்லுக்கு வந்து பாருங்களடா. இதோ எதிரே கோவில் கொண்டிருக்கும் சதுக்கப் பூதத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். உங்கள் ஒவ்வொருவருக்கும் எத்தனை கடைவாய்ப் பற்கள் என்று எண்ணி உதிர்த்துக் காட்டுவேன். ஆனால் ஐந்தாறு பேராகச் சேர்ந்து கட்சி கட்டிக் கொண்டு வந்து இப்படி முதுகுக்குப் பின்னால் நின்று கொண்டு கையைத் தட்டி விடுகிற செயலைத் தமிழர்கள் வீரமென்று ஒப்புக்கொள்ள மாட்டார்கள். கோழைத்தனம் என்பதை விடக் கேவலமான வார்த்தை வேறொன்று இருந்தால் அதைத்தான் உங்கள் செயலுக்கு உரியதாகச் சொல்ல வேண்டும்.”



“சொல்! சொல்! நீ எதை வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டிரு. உன் கை, கால்களை முறித்துப் போடாமல் இங்கிருந்து நாங்கள் கிளம்பப் போவதில்லை....”

இப்படி அவர்கள் அறைகூவவும் பதிலுக்கு இளங்குமரன் அறைகூவவும் இருபுறமும் பேச்சுத் தடித்துக் கைகலப்பு நெருக்கமாகிக் கொண்டிருந்தபோது அவர்களைச் சுற்றிக் கூட்டமும் கூடத் தொடங்கி விட்டது. இடமோ கலகலப்பு மிகுந்த நாளங்காடிப் பகுதி. காலமோ இந்திர விழாக் காலம். கூட்டம் கூடுவதற்கு என்ன குறை? இந்நிலையில் கையில் படையலிட்டு வந்த பொருள்களடங்கிய பாத்திரத்துடனே இருந்த முல்லை மருட்சியோடு என்ன செய்வதென அறியாது திகைத்துப் போய் நின்றாள். தாக்குவதற்கு வந்தவர்கள் கொதிப்புடனும், அடக்க முடியாத ஆத்திரத்துடனும் வந்திருப்பதாகத் தெரிந்தது. அவர்களுடைய முரட்டுப் பேச்சுக்குச் சிறிதும் தணிந்து கொடுக்காமல் இளங்குமரனும் எடுத்தெறிந்து பேசுவதைக் கண்டபோது முல்லைக்கு இன்னும் பயமாக இருந்தது.

‘புறப்படும்போது தந்தையார் எச்சரிக்கை செய்தது எவ்வளவு பொருத்தமாக முடிந்து விட்டது. இவரைக் கூட்டிக் கொண்டு வந்தால் இப்படி ஏதாவது நேருமென்று நினைத்துத்தானே தந்தை அப்படிக் கூறினார்—’ என்று எண்ணி இணைத்துப் பார்த்தது அவள் மனம்.

வரைந்து கொண்டிருந்த ஓவியத் திரைச் சீலையை மெல்லச் சுருட்டிக்

கொண்டு பயந்தாங்கொள்ளியாக ஒதுங்கி யிருந்த ஓவியன் மணிமார்பன் 'கைக் கெட்டியது வாய்க்கு எட்டாமற் போகுமோ'—என்பதுபோல நம்பிக்கை இழந்து நின்ருன்.

'இந்த முரட்டு மனிதரின் பிடிவாதத்தை இளக்கி ஒருவிதமாகப் படம் எழுதிக் கொள்ளச் சம்மதம் பெற்றேன். நூறு பொற் கழஞ்சுகளை அந்தப் பெண்ணிடம் பெற்றுவிடலாம் என்று ஆசையோடு ஓவியத்தை வரைந்து நிறைவேற்றப்போகிற சமயம் பார்த்து இப்படி வம்பு வந்து சேர்ந்ததே'—என்று நினைத்துத் தளர்ந்து கொண்டிருந்தான் மணிமார்பன். தனக்கு எட்டிகுமரன் வீட்டு நங்கையிடமிருந்து கிடைக்க விருக்கும் பெரிய பரிசை அவ்வளவு எளிதாக இழந்துவிட விரும்பவில்லை அந்த ஏழை ஓவியன். 'இந்த மாபெரும் கோநகரத்தில் எனக்கு எதிரிகளும், வேண்டாதவர்களும் நிறையப் பேர் இருக்கிறார்கள்' என்று தன்னால் ஓவியமாக்கப் பட்டுக் கொண்டிருந்தவர் அதற்குச் சிறிது நேரத்துக்கு முன் தன்னிடம் கூறியிருந்த வார்த்தைகளை மீண்டும் நினைத்துப் பார்த்தான் மணிமார்பன். அவரைக் காப்பாற்றவும், தனக்குப் பரிசு கிடைக்கும் சந்தர்ப்பம் நழுவிப் போகாமல் காப்பாற்றிக் கொள்ளவும் ஏற்ற வழியொன்று அந்தக் குழப்பமான சூழ்நிலையில் மணிமார்பனுக்குத் தோன்றியது. பயந்து நிற்கும் இந்தப் பெண்ணோடுதான் அவர் நாளங்காடிக்கு வந்தார். வழிபாடு முடிந்ததும் இந்தப் பெண் அவருக்கும் எனக்கும் என்னுருண்டை கொண்டு வந்து கொடுத்த போதுதான் இந்த வம்பே ஆரம்பமாயிற்று. ஆயினும் இப்போது இந்தச் சூழ்நிலையிலே என்னைப் போலவே இவளும் அவருக்கு ஓர் உதவியும் செய்ய இயலாமல் பயந்தாற்போல நிற்கிருள். ஆனல் அவருடைய ஓவியத்தை வரைந்து கொண்டு வந்து தந்தால் நூறு கழஞ்சு பொன் தருகிறேன் என்று சொன்னுளே, அந்தப் பேரழகியால் இப்போது அவரைக் காப்பாற்ற முடியும். பல்லக்குச் சுமக்கிறவர்களும் பண்டையப் பொருள்களைச் சுமக்கிறவர்களுமாக அவளோடு நிறைய ஏவலாட்கள் வந்திருக்கிருர்கள். அவளிடம் சொல்லி அந்த ஏவலாட்களில் பத்துப் பன்னிரண்டு பேரை அழைத்து வந்தால் இங்கே நம் மனிதரை எதிர்க்கும் முரட்டு வலைஞர்களை ஓட ஓட விரட்டலாமே!' என்று மனத்தில் ஓர் உபாயம் தோன்றியது அந்த ஓவியனுக்கு.

உடனே அந்த உபாயத்தைச் செயலாக்கும் நோக்குடன் கூட்டத்தை மெல்ல விலக்கிக் கொண்டு எட்டிகுமரன் வீட்டுப் பேரழகியைத் தேடி விரைந்தான் அவன். அப்படி விரைந்து புறப்படுமுன் இளங்குமரனுடன் நாளங்காடிக்கு வந்திருந்த அந்தப் பெண்ணையும் உடனழைத்துச் செல்லலாம் என்றெண்ணி அவள் நின்ற இடத்தைப் பார்த்தான் மணிமார்பன். அவளைக் கூட்டத்தின் முன்புறம் காணவில்லை. கணத்துக்குக் கணம் நெருக்கிக்கொண்டு பெருகிய கூட்டம் அவளைப் பின்னுக்குத் தள்ளிவிட்டதோ என்னவோ? தானே எட்டிகுமரன் வீட்டுப் பேரழகியைக் காணப் புறப்பட வேண்டியதுதான் என்ற முடிவுடன் புறப்பட்டான் ஓவியன். அவன் தன் வேண்டுகோளுக்கு





# துர்க்காபூர் உருக்கு ஆலையில் கட்டுமான வேலையும், உற்பத்தியும் ஒருங்கே நடைபெற்று வருகின்றன

இஸ்கான் சிருஷ்டியான இத் தொழிற்சாலையில் தகடறைக்கும் ஆலையின் இறுதிப் பகுதிகளான இடை நிலை, வடிவமைப்பு கட்டடங்கள் தற்போது பூர்த்தியடைந்து வருகின்றன. சென்ற வருட ஆரம்பத்தில் மூன்று ஆலைகள் செயல்படத் துவங்கின அவை தற்போது இயங்கி வருகின்றன. புதிய இரண்டு ஆலைகள் காரணமாக துர்க்காபூரில் உற்பத்தியாகும் பொருள்கள் பெருகும்.

# இஸ்கான்

இந்தியன் ஸ்டீல் ஒர்க்ஸ் கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனி லிமிடெட்

டவி & யுனைடெட் என்ஜினீரிங் கம்பெனி லிமிடெட், ஹெட் ரைட்ஸன் & கம்பெனி லிமிடெட், ஸைமன்-கார்வ்ஸ் லிமிடெட், தி வெல்மேன் ஸ்மித் ஓவன் என்ஜினீரிங் கார்ப்பரேஷன் லிமிடெட், தி விஸ்ஸோ கம்பெனி லிமிடெட், அசோசியேட்டட் எலெக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (ரக்பி) லிமிடெட், தி இங்கிலீஷ் எலக்ட்ரிக் கம்பெனி லிமிடெட், தி ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி லிமிடெட், அசோசியேட்டட் எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் (மான்செஸ்டர்) லிமிடெட், சர் வில்லியம் ஆர்ரோல் & கம்பெனி லிமிடெட், க்ளீவ்லண்ட் பிரிட்ஜ் & என்ஜினீரிங் கம்பெனி லிட், டோர்மென் லாங் (பிரிட்ஜ் & என்ஜினீரிங்) லிமிடெட், ஜோஸப் பார்க்ஸ் & ஸன் லிமிடெட், இன்சுலேட்டட் கேபிள் குழுப் (கலெண்டர்ஸ் கேபிள்ஸ் லிமிடெட், பிரெலி ஜெனரல் கேபிள் ஒர்க்ஸ் லிமிடெட்).

இந்தியாவுக்காக வேலை செய்யும் பிரிட்டிஷ் கம்பெனிகள்

ISCON-27 1F

இணங்கித் தன் ஆட்களை உதவிக்கு அனுப்புவாள் என்றே உறுதியாக நம்பினான் அவன். அவனுடைய நம்பிக்கை வீண் போகவில்லை. அவள் ஓவியம் கொண்டு வந்து தரப் போவதை எதிர்பார்த்துத் தன் ஏவலர்கள் புடை சூழப் பல்லக்கில் காத்திருந்தாள் அவள். ஓவியன் பதற்றத்துடனே அவசரமாக வந்து கூறிய செய்தியைக் கேட்டபோது அவளது அழகிய முகம் கோபத்தால் மேலும் சிவந்தது. உடனே ஏவலாட்களை அந்த இடத்துக்கு விரைந்து போய் 'அவருக்கு' உதவச் சொன்னதோடு அல்லாமல் தன்னுடையபல்லக்கையும் அந்த இடத்துக்குக் கொண்டு போகும்படி கட்டளையிட்டாள் அவள். தன் நினைவு பலித்தது என்ற பெருமிதத்துடன் உதவிக்கு வந்த ஏவலாட்களை அழைத்துக் கொண்டு வேகமாக முன்னேறினான் மணிமார்பன். இதற்கிடையில் அந்த ஓவியனுக்கு இன்னொரு சந்தேகமும் ஏற்பட்டது. 'அந்த மனிதர் பிடிவாதக்காரர் ஆயிற்றே. பிறருடைய உதவி எனக்குத் தேவையில்லை' - என்று முரண்டு பிடித்து மறுப்பாரோ என மணிமார்பன் சந்தேகமுற்றான்.



ஆனால் சிறிது பொறுத்துப் பார்த்த போதுதான் நினைத்திராத பேராச்சரியங்கள் எல்லாம் அங்கே நிகழ்வதை மணிமார்பன் கண்டான். செல்வத்துக்கும், செல்வாக்குக்கும் எவ்வளவு மதிப்பு உண்டு என்பது அன்று அங்கே அவனுக்குத் தெரிந்தது. அந்த எழிலரசியின் பல்லக்கு வந்து நின்றதைப் பார்த்ததுமே தாக்குவதற்கு வந்திருந்த யவனர்களில் மூவர் கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஓடிவிட்டார்கள். அவள் பல்லக்கிலிருந்து கீழே இறங்கி வருவதைக் கண்ணுற்றதுமே இளங்குமரனைச் சூழ்ந்து தாக்கிக் கொண்டிருந்த மற்ற நான்கு யவனர்களும் தாக்குவதை நிறுத்திவிட்டு அவளை நோக்கிப் பயபக்தியோடு ஓடி வந்தார்கள். வணங்கிவிட்டு அவளுக்கு முன் கைகட்டி வாய் பொத்தி நின்றார்கள்.

“அடடா, இந்தத் தடியர்கள்தானா?” என்று ஓவியன் மணிமார்பனை நோக்கிக் கேட்டு விட்டு அலட்சியமாகச் சிரித்தாள் அந்தப் பேரழகி. ஒரு கையை இடுப்பில் ஊன்றிக் கொண்டு வனப்பாக அவள் வந்து நின்ற நிலையும் தன்னைத் தாக்கிய முரடர்கள் அவளைப் பணிந்து நிற்பதும் கண்டபோது இளங்குமரனுக்கு முதலில் திகைப்பும் பின்பு எரிச்சலும் உண்டாயிற்று. 'ஒரு வேளை அவளே அவர்களை ஏவித் தன்னைத் தாக்கச் சொல்லியிருக்கலாமோ' என்று ஒரு கணம் விபரீதமானதொரு சந்தேகம் இளங்குமரனுக்கு ஏற்பட்டது. நிகழ்ந்தவற்றைக் கூட்டி நிதானமாகச் சிந்தித்துப் பார்த்த போது, 'அவள் அப்படிச் செய்திருக்க முடியாது. முதல் நாள் மாலை கடற்கரையில் நடந்த மற்போரில் தன்னிடம் தோற்று அவமானமடைந்த யவன மல்லன்தான் தன்னை இப்படித் தாக்க ஏற்பாடு செய்திருக்க வேண்டு'மென்று தோன்றியது அவனுக்கு.

இளங் குமரனுக்குக் கேட்க வேண்டுமென்றே பேசுகிறவள்போல் இரைந்த குரலில் மணிமார்பனைப் பார்த்துக் கூறலானாள் அவள்:

“ஓவியரே! நான் இங்கு வந்து நின்றதுமே இந்த ஆச்சரியங்கள் நிகழ்வதைப் பார்த்துஎனக்கு ஏதேனும் மந்திர சக்தி உண்டோ என்று வியப்படையாதீர்கள். காவிரிப்பூம் பட்டினத்துத் துறைமுகத்திலிருந்து யவனம் முதலிய மேற்குத் திசை நாடுகளுக்குச் செல்லும் பெரிய பெரிய கப்பல்கள் எல்லாம் என் தந்தையாருக்குச் சொந்தமானவை. பட்டினப்பாக்கத்தில் எங்கள் மாளிகைக்கு முன்புறம் நடந்து போகும் போது கூட இந்த யவனர்களில் பலர் செருப்பணிந்த கால்களோடு செல்வதற்குக் கூசுவார்கள். எங்கள் குடும்பம் என்றால் இவர்களுக்கு மதிப்புக்குரிய தெய்வ நிலையம் போல் பணிவும் அன்பும் உண்டாகும். நான் சுட்டு விரலை அசைத்தால் அதன்படி ஆடுவார்கள் இந்தக்

தடியார்கள். நீங்கள் அவருடைய ஓவியத்தை எங்கள் மாளிகையில் வந்து வரையலாம். 'அவரைத்' தாக்க வந்த இதே ஆட்களை உங்களையும் அவரையும் பல்லக்கில் வைத்து எங்கள் மாளிகை வரை தோள் வலிக்கச் சுமந்து வரச் செய்கிறேன், பார்க்கிறீர்களா?" என்று ஓவியனிடம் கர்வமாகக் கூறிவிட்டு அந்த யவனர்களை இன்னும் அருகில் அழைத்து ஏதோ கட்டளையிட்டாள் அவள்.

உடனே அவர்கள் ஓடிப் போய் எங்கிருந்தோ இன்னொரு பல்லக்கைக் கொண்டு வந்து வைத்தார்கள். "நீங்களும் உங்கள் நண்பரும் ஏறிக்கொள்ளலாம்" என்று சிரித்துக்கொண்டே பல்லக்கைச் சுட்டிக் காட்டினாள் அவள். முதல் நாள் மாலை கடற்கரையில் மணிமாலை பரிசளிக்க வந்ததிலிருந்து தொடர்ந்து தன் வாழ்வில் குறுக்கிடும் அந்த அழகியைச் சற்றே வெறுப்போடு பார்த்தான் இளங்குமரன். அவள் வந்து நின்றதும் சுற்றியிருந்தவர்கள் பரபரப் படைந்து பேசிக் கொண்டதிலிருந்து அவளுடைய பெயர் 'சுரமஞ்சரி' என்பதை அவன் தெரிந்து கொண்டிருந்தான். அவ்வளவு பெரிய கூட்டத்தில் தன்னுடைய ஆற்றலால் தான் எதிரிகளை வெல்ல முடியாதபோது அவளே வந்து அபயமளித்துக் காத்தது போல் மற்றவர்கள் நினைக்க இடம் கொடுத்தது அவனுக்கு வருத்தமாக இருந்தது. தான் பெருமைப்படுத்துக் கொண்ட மாபெரும் தன்மானம் அந்த நாளங்காடி நாற்சந்தியில் அவளால் சூறையாடப்பட்டதை அவன் பொறுத்துக் கொள்ள முடியாமல் தவித்தான்.

ஆத்திரம் தீர அந்தப் பெண்ணை அலட்சியமாகப் பேசிவிட்டுப் பக்கத்திலிருக்கும் ஓவியன் கையிலுள்ள அரைகுறை ஓவியத்தையும் கிழித்தெறிந்து விடவேண்டும் போல் இளங்குமரனுக்குச் சினம் மூண்டது. ஆனால் அந்த ஏழை ஓவியனுக்கு நூறு பொற்கழஞ்சுகள் கிடைக்கச் செய்வதாகத் தான் வாக்களித்திருந்ததை நினைத்துத் தன் சினத்தை அவன் அடக்கிக்கொள்ள வேண்டியதாயிற்று. எனவே பொறுமையாக ஓவியனோடு பல்லக்கில் ஏறி உட்கார்ந்தான் அவன். அவளுடைய பல்லக்கைத் தொடர்ந்து அவன் பல்லக்கும் பட்டினப்பாக்கத்துக்குள் இருக்கும் எட்டிப் பட்டம் பெற்ற பெரு நிதிச் செல்வரின் மாளிகைக்கு விரைந்தது.

ஆனால் அப்படிப் பல்லக்கில் ஏறிப் புறப்படுமுன் முக்கியமான செயல் ஒன்றை அவன் நினைவுகூரவே இல்லை. திடீரென்று அங்கு நடந்த குழப்பங்களால் தான் முல்லையை உடனழைத்து வந்ததையே இளங்குமரன் மறந்து போயிருந்தான். (தொடரும்)

## அமரபாரதி பரீக்ஷா சமிதி

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியுடன் நடத்தப்படும் அமரபாரதி பரீக்ஷா சமிதியாரால் ஸம்ஸ்கிருத பாஷை அபிவிருத்திக்கும், நம் புராதனப் பண்பாடு பரவுவதற்கும் ஸ்ரீமத் ராமாயணம், மஹாபாரதம், விஷ்ணுபுராணம், திருக்குறள் முதலிய நூல்களிலிருந்து பொது தர்மங்களை விளக்கும் பகுதிகளடங்கிய புத்தகங்கள் பதவுரையுடன், பிறர் உதவியில்லாமல் படிக்கும்படி எளிய நடையில் வெளியிடப்பட்டுள்ளன. அவற்றைக் கொண்டு ஒவ்வொரு பிப்ரவரி – ஆகஸ்டு மாதங்களிலும் பரீக்ஷைகள் நடத்தப்பட்டு வருகின்றன. பள்ளிகளில் எஸ். எஸ். எல். ஸி. வகுப்பில் ஸம்ஸ்கிருதத்தை உபபாடமாக எடுத்துப் படிக்கும் மாணவர்களின் சௌகரியத்துக்காக அந்தந்த வருஷம் பாடப் புத்தகத்தில், எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷைக்கு முன்னோக்கம் மாதிரி பிப்ரவரி மாதத்தில் ஒரு பரீக்ஷையும் நடத்தப்படுகிறது.

இந்தப் பரீக்ஷைகளுக்குக் கீழ்க்கண்டபடி பிரவேசக் கட்டணம் அனுப்பிப் பெயர் பதிவு செய்து கொள்பவர்களுக்குப் பரீக்ஷைகளுக்குரிய புத்தகம் இனமாய் வழங்குவதோடு, முதன்மையாகத் தேர்ச்சி பெறுபவர்களுக்குத் தங்கப் பதக்கம், வெள்ளிப் பதக்கம், ஸ்ரீ காமகோடி ஆசார்ய சுவாமிகளின் மூவர்ணப் படம் முதலிய பரிசுகளும், நற்சாட்சிப் பத்திரங்களும் வழங்கப்படுகின்றன.

பரீக்ஷைகளுக்குரிய பிரவேசக் கட்டணம் வருமாறு :

ப்ராத்மிக் 0–75; மத்தியமா 1–00; பிரவேசா 1–25; ஸமர்த்தா 1–50; அபிக்ஞா 1–75; விசேஷக்ஞா 2–00; (எஸ்.எஸ்.எல்.ஸி.) மாணவர்களுக்கு 1–00.

இதன் முழு விவரங்களும் அறிய ஆவலுள்ளவர்கள், ஸ்ரீ பி. மஹாதேவ ஐயர், காரியதரிசி, அமரபாரதி பரீக்ஷா சமிதி, திருவான்மியூர், மதராஸ் 20. அல்லது என். சுப்பிரமணிய அய்யர், ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லம், மயிலாப்பூர், சென்னை–4 என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

எமது மகத்தான இரண்டாவது ஆண்டு ஆரம்பம்!



## காத்தாயி ஸில்க் எம்போரியம்

(டெலிபோன் நெ. 71905)

4. ஸந்நதி தெரு - மயிலாப்பூர் - சென்னை-4

சென்ற ஓராண்டு காலமாக எமக்குப் பேராதரவளித்து, ஊக்குவித்த எண்ணற்ற வாடிக்கையாளர்கள், அன்பர்கள், ஆதரவாளர்கள், பொதுமக்கள் யாவருக்கும் எமது மனமார்ந்த நன்றி.

தொடர்ந்து தங்களுக்கு சேவை புரிய வாய்ப்பளிக்கக் கோருகிறோம்.

டி. கோவிந்தராஜுலு செட்டி, உரிமையாளர்

---

நன்றி அறிவிப்பு



மணமகன்: பெரியநாயகம் ஜெயராஜ் மணமகள்: கனோசனு பாப்பா

எங்கள் புதல்வன் திருவளர் செல்வன் பெரியநாயகம் ஜெயராஜுக்கும் மூக்குப்பீரி திரு ஆ. எட்வர்ட் நாடார் அவர்களின் புதல்வி திருவளர்செல்வி கனோசனுபாப்பாவுக்கும் 2-1-61 அன்று மூக்குப்பீரி பரி. மாற்குவின் தேவாலயத்தில் நடைபெற்ற திருமண விழாவின்போது நேரிலும் தபாலிலும் பரிசுகள், வாழ்த்துச் செய்திகள் அனுப்பிய எல்லோருக்கும் இதன்மூலம் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இங்ஙனம்

S. P. ராஜாமணி நாடார் தம்பதிகள், சாத்தான்குளம்

பார்ட்னர்: M.A.R.S. முத்து நாடார் & கோ., மதுரை - உரிமையாளர்: R.J.D ராஜா ரைஸ் மில், பாளையங்கோட்டை

---

பண்டிட்
டி.கோபாலாச்சார்லுவின்

# அருண

ஸ்திரீகள் டானிக்

ஆயுர்வேதாஸ்ரமம் (பிரைவேட்) லிமிடெட்

சென்னை-17.



# படித்துப் பாருங்கள்



## நம்பிக்கையின் மறுமலர்ச்சி

இக் காலத்திய விஞ்ஞானம், பொருளாதாரம், அரசியல் முதலியவற்றின் வளர்ச்சியாலும், அவைகளின் உண்மைக்கேற்ப பழைய சமயவாதிகள் தமது மூடக் கொள்கைகளையும், சம்பிரதாயங்களையும் மாற்றிக்கொள்ளாததாலும் பக்தி குன்றிவிட்டது. மனிதனுக்குத் தனது ஆத்மாவிலும் இப்பொழுது நம்பிக்கையில்லை. கடவுளிடத்திலும் பக்தி இல்லை. முடிவில்லாத சந்தேகச் சுழல்களில் சிக்கித் தவிக்கின்றான். புதிய முறையில் பக்தி புத்துயிர் பெற்று, மெய்யறிவும், ஆத்ம சாந்தியும் பெற்று ஒழிய மனிதனுக்கு விமோசனமில்லை என்ற கருத்தை வற்புறுத்துகிறது. இதற்குப் பல உதாரணங்களைக் கூறி, பற்பல வாதங்களை அலசிப் பார்த்து, எல்லாச் சமயங்களிலும் அடிப்படையான தத்துவங்களும், ஆத்ம விடுதலையின் வழிகளும் ஒரே விதமே என்றும், அவற்றை மீண்டும் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் போதிக்கிறார்.

அன்னிய மொழிகளிலுள்ள விஞ்ஞான நூல்களைத் தமிழாக்குவது கஷ்டமென்று சிலர் கூறுகின்றனர். இது முற்றிலும் தவறு என்று இப்புத்தகம் நிரூபிக்கிறது. மிகவும் பிரயாசைப்பட்டு, பயபக்தியுடன் மொழிபெயர்த்தவர் தமிழாக்க முயற்சி செய்திருக்கிறார். கூடியவரையில் ஆங்கிலச் சொற்களுக்கு மாற்றுத் தமிழ்ப் பதங்கள் அமைத்திருக்கிறார். ஆனால் முதல் நூலின் கருத்துக்களும், உயரிய நடையும் மொழிபெயர்ப்பில் பிரதிபலிக்கவில்லை. பலவிடங்களில் ஆசிரியரின் அபிப்பிராயங்களும் போதனைகளும் விளங்கவில்லை. உதாரணமாக: 'சரித்திர சம்பந்தமான கொள்கைவாதிகளின் மனித சுதந்திரத்தைப் பற்றிய அபிப்பிராயத்தில் குறைவிருக்கிறது. அவர்கள் அபிப்பிராயத்தில் ஆழக் குறைவும் பெருந்தன்மைக் குறைவும் இருக்கின்றன. அவசியம் என்ற சிறையில் சிக்கிய மனிதன் படும் பாட்டைப் பற்றிய கற்பனையே அவர்களுக்கு இல்லை' என்று படிக்கும்பொழுது ஒன்றும் புரியவில்லை. இதே விதமாகவே நூல் முழுதும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. 'மெட பிஸிக்ஸ்' என்பதற்கு 'மூலப் பிரகிருதி' என்று தமிழ் செய்திருக்கிறார். உண்மையில் 'பரதத்துவம்' என்பதே சரியான பதமாகும்.

மறு பதிப்பு பிரசுரமாகும்பொழுது, இக் குறைகளைக் கவனித்து, மூலத்தின் கருத்துகள் எளிதில் தெளிவாகும்படி செய்தால் நூலின் முழுப் பயனையும் வாசகர்கள் பெறுவார்கள்.

ஆசிரியர்: டாக்டர் ராதாகிருஷ்ணன்; தமிழாக்கம்: மோ. ஸ்ரீ. செல்லம்; கிடைக்குமிடம்: ராமஜோதி நூலகம், சென்னை-28; விலை ரூ. 2—10.

## சர்வதேசப் பொருளாதார உறவுகள்

சென்ற இருநூறு வருஷங்களில் உலகில் பல நாடுகளுக்குள் ஏற்பட்டிருந்த பொருளாதார உறவுகளில் பல பெரும் மாறுதல்கள் உண்டாகியிருக்கின்றன. முதலில் அரசியலுக்கும், பொருளாதாரத்துக்கும் நெருங்கிய சம்பந்தமின்றி, எல்லா நாடுகளிலும் தங்க, வெள்ளி நாணயங்கள் நிலைபெற்றிருந்த பொழுது இந்த உறவுகள் சரசமாக நடைபெற்றன. இரண்டு உலக யுத்தங்களின் பலனாக, தங்க வெள்ளி நாணயங்கள் மறைந்து விட்டன. பொருளாதாரத்தில் அரசாங்கத்தின் அதிகாரம் அதிகரித்துவிட்டது. ஆதலால் நாடுகளுக்குள் நடைபெறும் வியாபாரத்துக்கும், இதர பொருளாதாரப் பரிமாற்றங்களுக்கும் அரசாங்கங்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டுவிட்டது. ஆனால் பொருளாதார உறவுகள் குன்றி விடவில்லை. வெளிநாட்டு வியாபாரம் பன்முறை பெருகியிருக்கிறது. அதை வளர்க்கப் பல புதிய ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

ஆசிரியர் ஆங்கிலத்தில் எழுதியிருப்பதைக் கருத்து இழைகளைச் சிதையாமல், எளிய நடையில், மொழிபெயர்ப்பாளர் தமிழாக்கியிருக்கிறார்.

—க. ச.

ஆசிரியர்: டாக்டர் ஆர். பாலகிருஷ்ணன்; தமிழாக்கம்: ஓ. இரா. கிருட்டிணசாமி; பிரசுரம்: எஸ். விசுவநாதன்; 1, பெக்கிங்கல் ரோட், சென்னை-31. விலை ரூ. 1-40.

## உணர்வின் விழிப்பு

உலகம் தெரியாத பெண்ணாக வளர்ந்தாள் லலிதா. இல்லை, அவள் பெற்றோர் அவளை அவ்வாறு வளர்த்தார்கள். ஊர் உலகமும் தோழிகளும் அவளை அவ்வாறே எண்ணிக் கேலி செய்தனர். ஏன், அவள் அத்தான் ராஜூ கூட அப்படித்தான் எண்ணினான். ஆனால் திடீரென்று ஒரு நாள் அவளுக்கு உணர்வின் விழிப்பு தட்டியது. சில வார்த்தைகளில் தன் உணர்ச்சியைக் கொட்டி விட்டாள் லலிதா. அவள் பரீட்சைக்குப் புறப்பட்ட போது காரின் முன் பக்கக் கதவைத் திறந்து விட்டான் ராஜூ. "ஊஹூம்! நான் பின்னால் உட்காருகிறேன்" என்று கன்னங்களில் செம்மை படரக் கூறி விட்டாள் லலிதா. தன் உணர்ச்சியை, பெண்மையின் விழிப்பை வெகு லாகவமாகக் கதாசிரியர் சித்திரித்திருக்கிறார் ஒரு கதையில்.

திரு கி. வா. ஜகந்நாதன் தம் முகவுரையில், "ஒவ்வொரு கதையிலும் ஒவ்வொரு நுட்பமான மன இயல் பளிச்சிடுகிறது. மெல்லிய அலை போலக் கதைப் பண்பு பரவுகிறது!" என்று கூறியது முற்றிலும் உண்மை.

ஆசிரியர்: ஏ. எஸ். ராகவன். கிடைக்குமிடம்: மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோயமுத்தூர்—1; விலை ரூ. 2—75.

# கால்கேட்டின் மூலம்
# நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிசோதனைகள் நிரூபித்தன! இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்புளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் ஆதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

DCG.32GT-TAM.

# ACOSTO

## அகாஸ்டோ




சுந்தரதாஸ் டிரேடிங் & மானுபாக்சரிங் கோ

இவ்ராஜ் மேன்ஷன்

150 - A, மவுண்ட் ரோடு (போன்: 84979) சென்னை - 2

# குருதேவரின் குரல்

பேராசிரியர்: அ. சீநிவாசராகவன்

## மழலை மனம்

உச்சிவேளை. வெளியிலே நல்ல வெய்யில். தாழ்வாரத்தில் குப்புறப்படுத்த படி, ஏதோ படம், மடம், வடம் என்று அந்தச் சிறுவன் எழுத்துக் கூட்டிப் படித்துக் கொண்டிருக்கிறான். தூக்கம் கண்ணைச் சுழற்றுகிறது. மெல்ல, புத்தகத்தின்மேல் தலையைச் சாய்க்கிறான். அம்மா என்ன சொல்வாளோ என்ற கவலை வருகிறது.

'அம்மா!'

'என்னடா?'

'தூக்கம் வருதம்மா.'

'என்னடா தூக்கம்? பகல் பன்னிரண்டு மணிக்கு என்ன தூக்கம்?'

'பன்னிரண்டு மணிக்கு, குழந்தையாயிருந்தால் தூங்கணும் என்று நீதானே சொன்னே?'

'அது இரவு பன்னிரண்டு மணி. இப்போது பகல்.'

'பன்னிரண்டு மணிக்கு ஏன் இந்தப் பகல் தூங்க மாட்டேன்னு பிடிவாதம் பிடிக்கிறது? இந்தப் பகல் நல்ல குழந்தை இல்லையா?'

தாய் சிரிக்கிறாள்.

'பகல் தூங்கவாவது! இங்கே பார். நல்ல வெய்யில் அடிக்கும்போது பகல், தெரிகிறதா? இப்போ நீ படிக்கணும். அப்புறம் வெய்யில் தாழ்ந்து, சாயங்காலம் வரும். அப்புறம் இரவு. அப்போ நீ தூங்கலாம். இப்போ படி.'

பையன் புத்தகத்தை வெறித்துப் பார்க்கிறான். பிறகு, கண்ணை மூடிக் கொள்கிறான்.

'அம்மா...!'

'என்னடா தொணதொணப்பு?'

'இல்லை, அம்மா. சாயங்காலம் வந்தால் தூங்கலாமா, அம்மா?'

'ஐ, தூங்கலாம்.'

யங்காலம் வந்திடுச்சு. நான் தூங்கப் போறேன்.'

'என்னடா இது?'

'ஆமாம், நீ கண்ணை மூடிக்கிட்டுப் பாரேன். அப்போ தெரியும். எனக்கு நல்லாத் தெரியுது. இதோ சூரியன் கீழே இறங்கிப் படுக்கப் போறான். ஏரிக்கரை மேலே, வழக்கமா கீரை பொறுக்க வருவாளே, அந்தக் கிழவி வந்தாச்சு. இருட்டு வருதம்மா. வந்து புன்னைமரத் தோப்புக்குள்ளே போகுது. குளத்தைப் பாரு. பளபளன்னு மின்னுமே, இப்போ கறுப்பாய்ப் போச்சு, நேத்திக்கு வந்த கறுப்பு மேகம் மாதிரி. ஏன் அம்மா, பன்னிரண்டு மணிதானே இரவிலே பாதி......?'

''ஆமாம்.'

'இப்போ பன்னிரண்டு மணிதானே?'

'ஆமாம்.'

'அப்போ, இரவு வந்து, பாதியாய் நிற்க வேண்டாமா? ஏன், அம்மா, நீ கொஞ்சம் கண்ணை மூடிக்கிட்டு...'

தாய் சிரிக்கிறாள். குருதேவர் தாமும் சிரித்துக் கொண்டு, இந்தக் குழந்தையின் மனத்தை ஒரு பாட்டாக அமைக்கிறார். பாட்டிலே குழந்தையையே பேச விடுகிறார்:

*படிச்சது போதும் அம்மா — நானும்
படிச்சது போதும் அம்மா.
விடிஞ்ச முதற் கொண்டே — கண்ணை
விழித்துப் படித்தாச்சு.
பன்னிரண்டு மணி தான் — ஆச்சு
படி படி படி என்பாய்.
பன்னிரண்டு மணிக்கே — இந்தப்
பகலும் உறங்காதோ?
பாரேன் வயல் வரப்பில் — இதோ
படுத்திடும் சூரியனை
ஏரிக் கரை மேட்டில் — மெள்ள
ஏறி அந்தக் கிழவி
தோண்டு கீழும் கீரை — இரவு
சோற்றுக்குத் தேடுகிறாள்.
கண்டு கொண்டேன் அம்மா — நீயும்
காண முடியும் அம்மா.
கண்ணை நான் மூடிக் கொண்டால் — இந்தக்
காட்சி தெரியுதம்மா.
பண்ணை வெளியினிலே — இருளும்
பதுங்கி வருகுதம்மா.
புன்னை மரத்தடியில் — நின்று
போகு திருளும் அம்மா.
மின்னி மின்னிக் குளமும் — கறுத்து
மேகமாய் விட்டதம்மா.
பன்னிரண்டு மணிதான் — இரவில்
பாதி என்றால் இந்தப்
பன்னிரண்டு மணிக்கே — இரவும்
பாய்ந்தேன் வருவதில்லை?

* The Crescent Moon: Twelve O' clock.
வளர்பிறை: பன்னிரண்டு மணி.

குழந்தையின் கற்பனை உலகம் இப்படித்தான் கண்ணால் காணும் செய்திகளும், கருத்தால் தொட முயலும் உண்மைகளும் கலந்து, நம்முடைய தர்க்க நெறி முறைகளைத் திணற அடிக்கும்.

நமக்கு இது வேடிக்கையாகத் தோன்றுகிறது. ஆனால் குழந்தையின் பார்வையில், நாம் செய்யும் ஒவ்வொன்றும் எவ்வளவு விநோதமாகத் தோன்றும் என்பது நமக்குத் தெரிவதில்லை. விநோதமாக மட்டுமா, நாம் செய்யும் பல காரியங்கள் அநீதியாகக் கூடக் குழந்தைக்குப் படுகிறது. இந்த மன நிலையை, ஒரு பாடலில், தாகூர் சித்திரிக்கிறார். தன் தாயைப் பார்த்து, சிறுவன் ஒருவன் பேசுகிறான். அந்தப் பேச்சுக்கு, விளக்கம் ஒன்றும் தேவையில்லை :

* 'எத்தனையோ புத்தகம்
  அப்பா எழுதுகிறார்.
புத்தகம் ஒன்றும்
  எனக்குப் புரியவில்லை.

அம்மா, பொழுது இருளப்
  போகும்வரை கேட்பாய்.
சும்மா அவர் படிக்கும்
  சொல்லும் புரிகிறதா ?

என்னென்னவோ கதைகள்
  என்றனுக்குச் சொல்வாயே
உன்னைப் போல் அப்பாவும்
  ஏன் எழுதக் கூடாது ?

அப்பாவுக்கு அம்மா ஒருத்தி
  உண்டோ ? உண்டானால்
தப்பாமல் நல்ல கதை
  சொல்லி இருப்பாளே ?

பொல்லாத பூதம்,
  இளவரசி, கந்தருவர்,
எல்லாக் கதைகளையும்
  அப்பா மறந்தாரோ ?

*   *   *

எப்போதும் எழுதி
  எழுதி விளையாடுகிறார்,
தப்பித் தவறி அங்கே
  தலைநீட்டி நான் பார்த்தால்
'என்ன குறும்படா !'
  என்றென்னை ஏசுகிறாய்.
சின்னஞ் சிறிய
  சினுக்கு நான் செய்தாலும்
'அப்பா எழுதுகிறார்'
  என்றே அதட்டுகிறாய்.

எப்போதும் இந்த எழுத்து
  என்ன விளையாட்டோ ?

அப்பாவின் பேனாவைத் தூக்கி
  அவர் புத்தகத்தில்
தப்பொன்றும் இல்லாமல்
  நானும் ஒனாவும்

வானு வரைவும் வரையத்
  தொடங்கி விட்டால்
ஏனம்மா என்னை நீ
  ஏதேதோ திட்டுகிறாய் ?

எப்போதும் அப்பா
  எழுதுகிறார். ஆனால் நீ
அப்பாவை மட்டும்
  அதட்டவில்லை. ஏனம்மா ?

எத்தனை தாளில்
  எழுதிக் குவிக்கின்றார் !
அத்தனைக்கும் சும்மா
  இருக்கின்றாய். ஆனால் நான்

பாதிக் கிழிசல் எடுத்துப்
  படகு செய்தால்
ஏதேதோ பேசி என்னை
  ஏசுகிறாய். அப்பாவோ

காகிதங்கள் கோடி
  கறுப்பாக்கிப் போடுகிறார்.
போகட்டும் என்றே
  பொறுத்திருப்பாய், ஏனம்மா ?

ஏன் என்று அம்மாவால் எப்படிச் சொல்ல முடியும்? என்னதான் சொல்ல முடியும் ?

இதோ இன்னொரு குழந்தை. தாகூருடைய கவிதை உலகத்தில் வரும் இன்னொரு சிறுவன் கேட்கிறான் : 'ஏன் சந்திரனைப் பிடிக்க முடியாது ? சந்திரன் கீழே இறங்கி வந்து, கடம்பமரக் கிளைகளுக்குள் அகப்பட்டு விழிக்கின்றபோது, யாரும் அதைப் பிடிக்கலாம். ஏன் முடியாது ?'

'எப்படியடா முடியும் ? சந்திரன் எட்டாத தொலைவில் இருக்கிறான்' என்கிறான் அண்ணன்.

'அண்ணா, நீ அசடு. அம்மா மாடியிலிருந்து நம்மைப் பார்த்துச் சிரிக்கிறாள், இந்தச் சந்திரன்மாதிரி. அப்படியென்றால், அவள் எட்டாத தொலைவிலா இருக்கிறாள் ? சொல்லேன், பார்க்கலாம்.'

'சந்திரன் ரொம்ப ரொம்பப் பெரிசு. அதைப் பிடிக்க அவ்வளவு பெரிய வலைக்கு எங்கே போவது ?'

'கையாலேயே எட்டிப் பிடிப்பேன்.'

'சந்திரன் என்ன கிட்டிப்புள்ளா ? போடா போ' என்கிறான் அண்ணன்.

---

* The Crescent Moon : Authorship.
*வளர்பிறை : எழுத்தாளன்.*

தம்பிக்கு இந்தப் பேச்சு விளங்கவில்லை. 'பள்ளிக்கூடத்தில், படித்துப் படித்து, அண்ணனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. இல்லாவிட்டால் இப்படிப் பேசுவானா?' என்று எண்ணமிடுகிறான்.

'பெரிசாம் பெரிசு! சந்திரன் கிட்ட வந்தால் எப்படிப் பெரிசாவான்? அம்மா கிட்ட வந்து முத்தமிடும்போது அவள் முகம் பெரிசாகவா ஆகிறது? இல்லையே?'

'போடா போ, அசடு' என்று அண்ணன் சிரிக்கிறான்.

'அண்ணன் உளறுகிறான்' என்று முடிவு கட்டுகிறது குழந்தை.

*வட்ட மதி ஓர் கடம்பக் கிளைக்குள்ளே
வந்து சிறைப்படும் மாலையிலே
எட்டி அதனை யாரும் பிடிக்கலாம்
ஏன் முடியாது சொல்' என்று சொன்னேன்.

அண்ணன் சிரித்தான்: 'உன்றனைப் போலோர்
அசட்டுச் சிறுவனைக் கண்டதில்லை.
எண்ணத் தொலையாத தூரத்துச் சந்திரன்
எப்படிக் கையில் அகப்படுவான்?'

என்று சிரித்தான். 'என்ன அசடு நீ!
எங்கள் விளையாட்டை மாடியிலே
நின்று சிரித்து அம்மா பார்த்திருந்தால் அவள்
நீண்ட தொலைவில் இருப்பவளோ?'

* * *

'வட்ட நிலவை உன் வாண்டுக் கையால் எட்டி
வாகாய்ப் பிடிக்கவும் கூடுமோடா?
கிட்டத்தில் வந்தால் தெரியுமடா அது
கொள்ளைப் பெரிசென' அண்ணன்
சொன்னான்.

'பள்ளிக் கூடத்தில் படித்துப் படித்துப்
பைத்தியம் ஆனாய். கிட்ட வந்தே
அள்ளி அணைக்கும்போது அம்மா முகமும்
ஆயிரம் பங்கு பெரிசாமோ?'

என்று சொன்னால் என்றன் அண்ணன் சிரிக்கிறான்
ஏனென்று எனக்குத் தெரியவில்லை.
'உன்னைப் போலே ஓர் ஏமாளி எங்கும்
உலகில் இல்லை' என்று உளறுகிறான்.

ஏன், ஏன், ஏன் என்று குழந்தை வியப்புடன் கேட்கிறது. ஏன், ஏன் என்று, நம்முடைய பதிலைப் புரிந்து கொள்ள முயன்று, முகத்தைச் சுளிக்கிறது. மழலை மனத்தின் தன்மை இது. இதைப் பார்த்து நாம் சிரிக்கிறோம். நம்மைப் பார்த்து, இறைவனும் இப்படித்தான் சிரிக்கிறானோ என்னவோ, யார் கண்டது!

*The Crescent Moon: The Astronomer.
வளர்பிறை: வான நூல் அறிஞன்.

*For this moment...*



FOR THIS MOMENT ..... and for your future, pamper your complexion – cherish that glowing radiance – nourish it with Binella. Binella is both a nourishing and foundation cream, and used as a day and night cream, it constantly feeds the skin, and removes those tell-tale wrinkles around the eyes, mouth and neck, and gives your complexion a youthful radiance.

**BINELLA** WITH 'SKINOSTELONE'–

NOURISHING AND ANTI-WRINKLE CREAM BY CIBA

# ஞானப் பெண்ணைக்

11-12-60 கல்கியில் வெளியான 'ஞானப் பெண்' என்னும் கி. ரா. கோபாலனின் கதையை ஒட்டிய கற்பனை.

செந்திலரசும், பொன்னம்பலமும் 'வேகு வேகு' என வந்து கொண்டிருந்தார்கள். கிட்டமாட்டாத இரகசியம் கிட்டி, பெறமாட்டாத பெரும் புதையலும் கைக்குச் சிக்கி விட்டதல்லவா? கனவு நினைவு இல்லே—இப்போது செந்திலரசுதான் ஊரிலேயே பெரும் பணக்காரன்! ஏன், அவனையொட்டியுள்ள பொன்னம்பலமும் ஒரு பசையுள்ள புள்ளிதான். காட்டுப்புறத்தின் பயங்கரப் பகுதிகளைக் கடக்கும் வரையிலிருந்த வேகம், ஊரை நெருங்க நெருங்க அவர்களுக்குக் குறைந்துவிட்டது. அதன் காரணம், இருவர் மனமும் ஒத்தாற்போல் இருட்டும்பொழுதை எதிர்பார்த்தது. வழியில் யார் கண்ணிலும் படாமல் வீடு போய்ச் சேர்க்க வேண்டுமே!

"என்ன மாப்பிள்ளே! ரோசனை யெல்லாம் வலுவாச் சுழலுதோ? ஊர் நெருங்கிடுச்சே" என்றான் பொன்னம்பலம் சிறு நகைப்புடன்.

செந்திலரசின் சிந்தனை தெறித்தது. "ஊம்! ஆமா, ஆமா, இப்போ என்ன செய்யலாம்?" என்றான் தயக்கத்துடன் நின்றபடியே.

பொன்னம்பலம் அழுக்கமான பெருத்த சிரிப்பை விடுத்தபடி, "எப்படியோ, இதைத் தேடிப் புடிச்சுக் கொண்டாந்துட்டோம். இதை எப்படி ரொக்கப் பணமாக்கி--ஊம்-?" என்றான். செந்திலரசின் முகத்திலும் அப்போது அசட்டுக் களை வடிந்தது.

"முக்கியமா, நம்ப வீட்டுச் சனத்துக்கே தெரியக் கூடாதுன்னுதான் ரோசிக்கிறேன்" என்றான் பொன்னம்பலம்.

"ஆமாம், எங்க ஆயிக்கிக்கூடத் தெரிஞ்சால் விசயம் அம்பலமாயிடு மோன்னுதான் தோணுது--" என்றான் செந்திலரசு.

அவர்கள் நின்று கொண்டிருந்த இடம் ஒரு பெரிய ஆலமரத்தினடி. அப்போது எங்கிருந்தோ வொரு பாட்டுக் குரல் ஒலித்தது!

**"கண்ணிருந்தும் உலகைக் காணாத மாந்தரின்**
**கண்ணென்ன கண்ணோ கண்ணே!"**

இருவரும் திடுக்குற்றுத் திரும்பினர். "ஐயோ! இது அந்தச் சாமியார் பாட்டுல்லே யிது. செஞ்சுருட்டிராகத்துலே--?" என்றான் பொன்னம்பலம்.

"ஆமாங்கறேன்! அந்தச் சாமியார்தான் கையும் களவுமாப் புடிக்கிறதுபோல் எங்கிருந்தாயினும் வந்துடிச்சோ?" பிரமிப்பும், திகிலும் கொண்ட பார்வையுடன் நாலாபுறங்களையும் பார்த்தான் செந்திலரசு. அடுத்த கணம், பொன்னம்பலத்தின் தோளைப் பற்றியபடி, பகபகவென நகைத்தான். "அட இங்கே பாருய்யா, வாழை மரத்துப் பக்கத்தை" என்று கூறி விட்டு அவனது பார்வை



# பெண்ணும் கண்ணும்

யையும் திருப்பி விட்டான். அங்கே ஆடுகள் ஒரு பக்கம் மேய்ந்து கொண்டிருக்கக் கோலும் கையுமாக ஞானம் வந்து கொண்டிருந்தாள், அவர்களை நோக்கியவாறு. பொன்னம்பலமும் இளநகை விடுத்தான்.

ஞானம் வேகமாக நெருங்கி வந்தாள்.

"அட! எங்கேயோயிருந்தோ கழுகுக்கு மூக்குலே வேர்த்தாப்பிலே யில்லே வந்துட்டே?" என்றான் பொன்னம்பலம் அவளை நோக்கி.

"காலையிலே புடிச்ச வலியை வலியைப் பார்த்துக் கிட்டுக் காத்துக்கிட்டிருக்கிற கழுகுக்கு மூக்கிலே வேர்க்காது! கொண்டாங்க, அந்தப் பொட்டியை" என்றாள் அவள் கைகளை நீட்டியபடியே.

"உச்! உன் வாயை வைச்சுக்கிட்டுச் செத்தநேரம் சும்மாத்தான் இரேன்!" அண்ணன் அதட்டவும், ஞானம் திகைத்தாள். அவளது குறும்பு முகம் செந்திலரசுவின் பக்கம் திரும்பி விட்டுக் குறைவுடன் பழுத்தது. வேறு புறம் திரும்பிக் கொண்டாள்.

இருவரும் மரத்தடியிலேயே உட்கார்ந்தனர். செந்திலரசு ஏதோவொரு முடிவுக்கு வந்தவன் போன்று, நாலாபுறங்களையும் ஒரு தடவை பார்த்து விட்டு, தகரப் பெட்டியைத் திறந்தான். அதிலிருந்த துணி மூட்டையைப் பிரித்தான். கை வளையல்கள், கழுத்துச் சங்கிலி வகைகள், தோடு, வைரப் பொட்டு இன்னும் எத்தனையோ நினுசுகள் 'தகதக' வெனக் கண்களைப் பறித்தன. கண்களைப் பறிக்கும் அந்த நகைகளைப் பார்த்தபடியே மூவரும் வாயடைத்துப் போய்த் திகைத்து விட்டனர். செந்திலரசுதான் மௌனத்தைக் கலைத்தான்.

"இதோ பாருங்க, இப்போவொரு முடிவுக்கு வருவோம். இந்த உருப்படியான நகை நட்டையெல்லாம் கையிலே எடுத்துக்கிட்டுப் போவோம். ஆளுக்கொரு தங்கக் கட்டியும் கொண்டு போவோம்; பாக்கி யெல்லாத்தியும்--" வார்த்தையை நிறுத்திக் கொண்டு, பாக்கிச் செய்தியைக் கைச் சாடைகளின் மூலம் அறிவித்தான் செந்திலரசு.

துரோணன்

"ஆ! ஆ! அதுதான் நல்ல ரோசனை" என்றான் பொன்னம்பலம். மீண்டும் ஞானத்தின் பக்கமாகத் திரும்பி, "த. இப்போ எங்க கூட நீதான் இருக்கிறே. பொம்பிளைங்க மனசுலே இரகசியம் தங்காதுன்னு, சாமியார் கூடச் சொல்லுவாரு. நீ வந்து--" என்றான் கண்டிப்பான பார்வையுடன்.

"த. அண்ணாச்சி! மறுபடியும் மறுபடியும் இப்படியெல்லாம் சொன்னியானாத் தெரியுமா சங்கதி? அப்புறம் நான் எங்கேன்னாலும் போயே போயிடுவேன்!"

"ஓஹோ? நீ போயிடுவியோ? அப்படியே போனாலும், குண்டுக் கட்டாத் தூக்கியாந்து கட்டில்லே போடத்தான் ஆளு வைச்சுக்கிட்டேனே?" இவ்வாறு நகைப்பும், கண்சிமிட்டலும் கலந்த பேச்சுடன் செந்திலரசைக் குறிப்பிட்டுக் காட்டினான் பொன்னம்பலம். மறு கணமே பட்டெனத் தன்னுடைய முகத்தைக் கரங்களால் மூடியபடி ஓரடி நகர்ந்தாள் ஞானம்.

பொன்னம்பலம் முண்டாசுத் துணியை அவிழ்த்து, அதில் அந்த நகைகளையும், இரண்டு தங்கக் கட்டிகளையும் வைத்துச் சுருட்டி முடிந்தான். பின்னர், இருவரும் தகரப் பெட்டியை யெடுத்துக் கொண்டு, ஆலமரத்துக்குத் தென்புறமிருந்த அடர்த்தியான கோரைப் புல் காட்டை அடைந்தனர். அங்கே புதருக்கு நடுவில் இயற்கையான பள்ளமொன்று இருந்தது. அதைக் கோலால் கிறி ஆழப்படுத்தி அதற்குள் பெட்டியை அமுக்கி, சுற்றிலுமிருந்த கூழாங் கற்களை வாரி வந்து போட்டுக் கிட்டித்தனர். எட்டி நின்றபடி பார்த்துக் கொண்டிருந்த ஞானமும் அருகே வந்து, அவர்களது செயலில் பங்கெடுத்துக் கொண்டாள். முடிவாக, அன்று அவர்கள் வீடு திரும்புவதற்கும், கப்பிய இருட் படலம் கண்ணை மறைப்பதற்கும், பொழுது சரியாக இருந்தது.

* * *

மறுநாள் பகற் பொழுதில், அதே ஆலமரத்தடியில் செந்திலரசும், பொன்னம்பலமும் சந்தித்தார்கள்.

"மச்சான்! உள்ளபடிக்கு, இன்னிக்கு என் நெஞ்சைத் திறந்து, ஒரு விசயம் ஒன் கிட்டே சொல்லப் போறேன்" என்றான் பொன்னம்பலம் செந்திலரசிடம்.

செந்திலரசு அவனை ஆர்வத்துடன் பார்த்தபடி, செய்தி கேட்கத் தயாரானான்.

செந்திலரசைப் போலவே, பொன்னம்பலத்தின் விஷயமும் கொஞ்சம் சுவாரஸ்யமானதுதான்! அந்தச் சேரன் விடுதி கிராமத்திலேயே கொஞ்சம் அழகும் ஆடம்பரமுமாகவுள்ள பெண்ணல்லவா அந்த அஞ்சுகம்? அதனாலேற்பட்டிருந்த விளைவு, ஊரிலிருந்த நாலைந்து வாலிபர் கட்டைகளுக்கும், ஒரே காலத்தில், ஒரேவிதமான பைத்தியம் பிடித்திருந்தது. இருந்தாலும், முக்கி முனகி, உள்ளூரப் புழுங்கியதுடனிருந்ததைத் தவிர வேறென்ன இயலும் அவர்களால்? அதில் ஒரு படி முன்னேறிப் பார்த்தவன் செந்திலரசு என்றால், இன்னுமொரு படி அதிகமாகப் பார்த்தவன் பொன்னம்பலம். இவன், முனியப்பன் வீட்டுடன் கொஞ்சம் நெருக்கமாகவே தொடர்பும் கொண்டிருந்தவன். ஏதாவதொரு காரணத்தைச் சாக்கிட்டு, முனியப்பன் வீட்டுக் குறடேறி நிற்பதில் அவனுக்கொரு பித்தமிருந்தது. அஞ்சுகத்துக்காகத் தைலம் காய்ச்சப் பச்சிலை வகை கொண்டு வர, அவளுக்காகப் பத்து மைல் போய் பவுடர் டப்பா வாங்கி வர, அவள் வீட்டு மாட்டுக்குத் தீவனம் தேடி வர, இப்படியெல்லாம் முனியப்பன் வேண்டினாலும் வேண்டா விட்டாலும், பொன்னம்பலம் தயாராக இருந்து வந்தான். அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களிலெல்லாம், பேசவும் பழகவும் அஞ்சுகமும் அஞ்சவில்லை. இதையெல்லாம் கணக்கிட்டுக் கடைசியாக ஏமாந்தும் விட்டான், பைத்தியக்காரப் பொன்னம்பலம்!

செந்திலரசு சட்டையும் பைஜாமாவுமாகப் போனவன் அவமானப்பட்டு வந்தானல்லவா? அன்றைய தினமே அவன் சென்ற அரை நாழிக்கெல்லாம் பொன்னம்பலமும் அங்கே வந்து சேர்ந்தான். அவனுக்குத்தான் அந்த வகைய மரியாதை கிடைத்ததென்றால், இவனுக்கும் அதே கதிதான் ஆயிற்று! இரண்டு வருஷங்களுக்கு முன்னால்-ஒரு பொங்கல் பண்டிகையின்போது எடுத்த ஜரிகை வேட்டியையும், சட்டையையும் எடுத்துப் போட்டுக் கொண்டு பொன்னம்பலம் வந்திருந்தான். மறுநாள் வாரச் சந்தையிலிருந்து ஏதாவது தேவையிருக்குமா என்பதைக் கேட்கும் ஆவலுடன் கொஞ்சம் ஆடம்பரமாகவும் வந்து விட்டான்—அவ்வளவுதான்!

இப்போது பொன்னம்பலத்தின் நெஞ்சிலும், அஞ்சுகம் விஷமமான ஒரு புயல்!

தனக்கு நேர்ந்த பாடம் முழுவதையும் செந்திலரசிடம் ஒப்பித்துவிட்டு, அழமாட்டாக் குறையாக இருந்தான் பொன்னம்பலம். செந்திலரசு சிறிது நேரம் யோசனையுடன் அமர்ந்திருந்தான். பின்னர், முடிவான ஒரு கருத்துக்கு வந்த புதிய தெளிவு அவன் முகத்தில் 'பளிச்'செனத் துலங்கியது.

இரண்டு மணி காலம் வரையில் செந்திலரசும் பொன்னம்பலமும் மிக இரகசியமாக உரையாடினர். முடிவாக இருவரும் எழுந்து இரு வேறு திசையாகப் பிரிந்து தெருவுக்குள் போய்ச் சேர்ந்தனர்.

* * *

ஏறக்குறைய ஒரு மாத காலத்துக்குள்ளாக, சேரன் விடுதி பட்டிக்காடு படாதபாடு பட்டது! ஊரில் இரண்டு பெரிய அதிசயம்-செந்திலரசும், பொன்னம்பலமும் திடீர்ப் பணக்காரனான விந்தையொரு பக்கமென்றால், பதினைந்து நாட்களுக்குள்ளாக அவர்கள்-கீரியும் பாம்பும் போன்ற பரம விரோதிகளாக மாறி நிற்பதும் ஒரு விந்தையல்லவா? பலர் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். சிலர், புதையல் கிடைத்திருக்குமென்றார்கள். சிலர், ஏதோவொரு கூட்டான லாட்டரிப் பரிசில் வந்திருக்குமென்றார்கள்.

செந்திலரசு சோறும் கையுமாகப் பழைய செந்திலரசுவாகவா இருந்தான்? இஸ்திரி மடிப்புக் கலையாத தினமொரு புஷ்கோட்டுச் சட்டை; வகைக்கொன்றான கலரில்பைஜாமா;

இழை கலேயாத கிராப்புத் தலே. கையில் செயின் கடிகாரம். அத்தர் வாசனே அக்கம் பக்கத்தோரையிழுக்கும் வண்ணம் கழுத்தில் சுற்றப்பட்டிருந்த கைக்குட்டை. காலில் மினுமினுப்புக் குறையாத பூட்ஸ்-இவ்வளவு வகையுடன் கண்ணைப் பறிக்கும் பச்சை நிறத்து சைக்கிளில் ஏறி அவன் தெருவுக்குள் நுழைந்து விட்டால், அத்தனே கண்களும் அவனேயே வெறித்து நோக்கும்!

இத்தகைய ஆடம்பரத்துக்கு அணுவளவும் பொன்னம்பலம் குறைந்து விடவில்லே. அதற்கென்ன, இவன் உடுத்தியிருந்தது-அயருனே கிளாஸ்கோ மல் எட்டு முழம்-இதுதான் வித்தியாசம்.

புதுமையான கோலத்தில் மாறியிருக்கும் செந்திலரசை, முனியப்பனும், அவன் மகன் அஞ்சுகமும் காணுமலில்லே. அவர்களது விழிகளிலும், உள்ளங்களிலும் வியப்பு மண்டிக் கிடந்தது. இரண்டொரு சமயம் தெருவோடு சைக்கிளில் போய்க் கொண்டிருந்த செந்திலரசை முனியப்பன் கைதட்டியழைத்த போதெல்லாம், அவனும் அவசர வேலேயிருப்பதாகச் சொல்லிக் கொண்டு போய்க் கொண்டிருந்தான். அவன்தான் அப்படி யென்ருல், நாளொன்றுக்கு நாலு தடவை வந்து போன பொன்னம்பலத்துக்குமா இப்படிப் பட்ட வாழ்வு வர வேண்டும்?

ஒருநாள் முனியப்பன் தன் மகனேயும் அழைத்துக் கொண்டு, செந்திலரசின் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். செந்திலரசும் அவனே இன்முகத்துடன் வரவேற்ருன்.

"என்னு தம்பி, இப்போவெல்லாம் உன்னேக் காணவே முடியறதில்லேயே: அன்னிக்குக்கூட ஒரு முக்கியமான சமாசாரம் உன்கிட்டே சொல்லணும்னு கூப்பிட்டேன். நீயும் அவசரமாப்பூட்டே" என்ருன் முனியப்பன்.

"என்னவோ போங்க, சிலோன் யாவாரம் தொடங்கினுலும் தொடங்கினேன், எனக்கு ஓய்ச்சல் ஒழிவில்லே. அது போவுட்டும்-எங்கே இப்படி அவுருவமா..." என்ருன்.

"விசயம் ஒண்ணுமில்லே, இந்த வாரம் பக்கத்தூர் சந்தைக் குத்தகையை நானே எடுத்துடலாம்னு பார்க்கிறேன். அதுக்கு இப்போ இரண்டாயிரம் ரூவா நாளேக்குள்ளே முன் பணமாக் கட்டியாகணும். நம்மகிட்டே இப்போ கொஞ்சம் பணவோட்டம் குறைச்சல். கொஞ்ச நாளா பினங்கிலே என் தம்பிகிட்டேயிருந்து காசு பணம், கடுதாசி-ஒண்ணுமே ஒத்து வரல்லே; விசயமும் புரியில்லே. அதுதான் இப்போ, இந்த முடைக்குப் பார்த்துக் கிட்டா, மூணு மாசத்துலே திருப்பிக் குடுத்திடறேன். ஒங்கிட்ட சௌகரியம் எப்புடியிருக்குதுன்னு கேட்கலாம்னு வந்தேன்."

செந்திலரசு யோசனையில் ஆழ்ந்தான்.

"இல்லே, இந்தக் குத்தகையை நீயே உன் பேரிலே எடுத்துக்கிட்டாலும் எனக்கு ரொம்ப சந்தோசம். இது விசயத்துக்கு, கிழக்கோடி வீட்டுக்காரன் குறுக்கே வருவான் போலே தெரியுது. அந்தப் பயலுக்கு இடம் விடக் கூடாதுங்கறது எனக்கொரு வேகம்! என்ன?-" என்ருன் முனியப்பன் தொடர்ந்து.

"அதுக்கென்ன, பணத்தைப் பத்தியென்னுங்க, நீங்க இல்லேன்னு சொல்லிடப்

# விரைவான, நிச்சயமான
# கெடுதலில்லாத

இருமலுக்கு
வீட்டிலேயே குணம் அளிப்பது




Alembic

# க்ளைகோடின்
# டெர்ப்-வசாகா

களைப்பும், வெறுப்புமூட்டும் வரட்டு இருமலுக்கு
வீட்டிலேயே கெடுதலில்லாத நிச்சய குணமளிக்கிறது.

A40,278A TAM

போறீங்க? பொழுதோட வாருங்களேன், பார்ப்போம்'' என்றான்.

முனியப்பன் விடை கூறி யெழுந்தான். அருகே நின்ற அஞ்சுகம் அவனைக் கடைக்கண்ணால் ஒரு வெட்டு வெட்டி விட்டுச் சென்றாள்.

அன்று மாலை மீண்டும் தேடிக் கொண்டு வந்த முனியப்பனிடம் கத்தை கத்தையான இரண்டாயிரம் ரூபாய்த் தாள்களையும் வீசி விட்டு, முத்திரைக் காகிதத்தில் கையொப்பமும் வாங்கிக் கொணடான் செந்திலரசு.

செந்திலரசின் வாழ்வு நிலையைத்தான் கடவுள்-இல்லை, சாமியாரின் அருள்-உயர்த்தியதென்றால், முனியப்பனின் குபேர வாழ்வும் ஒரு புறத்தில் சரிய வேண்டுமா? சந்தைக் குத்தகையின் மூலம், அவனுக்கு ஏகப்பட்ட நஷ்டங்கள் - கஷ்டங்கள் - பெய்யாத மழையால் பெய்து தீர்த்துவிட்டது! இவற்றையொட்டி, செந்திலரசைப்பற்றின தாழ்வெண்ணங்களை யெல்லாம் கழுவி விட்டான். அத்துடனில்லாமல், அவன் விரித்திருந்த கண்ணியில், கண்ணிருந்தும் விழுந்து சிக்கிய பறவையாகி விட்டானே!

ஒரு மாத காலம்---

முனியப்பன் தன் மகள் அஞ்சுகத்தைச் செந்திலரசுவுக்குக் கட்டி வைக்க, சிலரைத் தூதாக அனுப்பி வைத்தான். செந்திலரசைப் பெற்றவளுக்கென்னவோ, நல்லு தடையில்லாமல் ஏற்றுக் கொள்ள ஆசைதான். ஆனால், அவளைக் கட்டப் போகும் அவன்---?

ஒரு நாள் வீடு தேடி வந்த முனியப்பன் செந்திலரசிடம் சாடையாக வார்த்தையைத் தொடங்கினான். செந்திலரசுக்கு உடலெல்லாம் புல்லரித்தது. ஆனாலும், ஏதோவொன்றைச் சொல்லமாட்டாது தவித்துக் கடைசியாகச் சொல்லியும் விட்டான். அவனுக்கு-கல்யாணத்துக்கு முன்பாகவுள்ள ஒரு வேண்டுதலை! அவனது வேண்டுதலை விவரத்தைக் கேள்வியுற்ற முனியப்பனுக்கு முதலில் கொஞ்சம் அதிர்ச்சியாகத் தானிருந்தது. பின்னர் சமாதானமுமடைந்தது. தானே அஞ்சுகம் ஒரு லட்சத்துக்கு மதிப்புள்ளவனுக்கு வாழ்க்கைப் பட்டு, நீலகிரி பங்களாவில் வாழப் போகிறவ ளில்லையா? முடிவாக, முனியப்பன் செந்திலரசுவுக்கு வாக்களித்து விட்டுத் திரும்பினான்.

தகப்பனின் மூலம் செந்திலரசுவுக்குள்ள வேண்டுதலையைக் கேள்வியுற்ற அஞ்சுகத்துக்கும் ஓர் அதிர்ச்சிதான். முதலில் நொடித்தாலும், முனியப்பனின் தேர்தலால் மனம் ஒப்பினாள்.

செந்திலரசுவின் வேண்டுதலை துவங்கியது!

வாரச்சந்தைக்கு முதல்நாள், செந்திலரசு கோலும் கையுமாகக் காட்டுக்குச் செல்லுவான். இரண்டு மூன்று உடும்புகள் பிடித்து வந்து அஞ்சுகத்தினிடம் ஒப்படைப்பான். அவள் அவற்றை யெடுத்துக்கொண்டு சந்தையில் விற்கச் செல்லுவாள். அப்பனும் மகளுமாகச் சிலசமயம்செந்திலரசுவும் கூடவே சேர்ந்து கொண்டு சந்தைக்குச் செல்லுவார்கள். அங்கே அவள் உடும்பு விற்ற தொகையைக் கொண்டு வந்து, பேத்தியம்மன் உண்டியலில் போடுவாள். இந்தக் காட்சியைக் காணக் கிராமமே கூடிவிடும். இவ்வாறு ஒன்பது



**பையன்:** அம்மா, எனக்குப் பெண் பிடித்து விட்டது! அவர்களிடம் நான் சொல்லட்டுமா? நீ சொல்கிறாயா?

**பையனின் தாயார்:** இரண்டு பேருமே சொல்லத் தேவையில்லை! ஏன்னு பெண்ணுக்கு உன்னைப் பிடிக்கவில்லையாம்!

வாரங்கள். உண்டியிலும், கணிசமாக முப்பது ரூபாய்கள் சேர்ந்துவிட்டன.

முனியப்பன் தேதி வைக்க முற்பட்டுக் கொண்டிருந்த சமயம், செந்திலரசு தம் கல்யாணத்தை, ஊருக்குள் உள்ள பகவதியம்மன் கோவிலில்தான் நடத்த வேண்டும் என்றும், அதையும் உடும்பு விற்று உண்டியில் சேர்த்துள்ள தொகையைக் கொண்டு ஆடம்பரமின்றிச் செய்ய வேண்டுமென்றும் உடும்புப் பிடியாக உறுமிக் கொண்டிருந்தான்! ஊரே திடுக்குற்று வியந்ததில் முனியப்பனும் அஞ்சுகமும் எப்படி விரும்புவார்கள்?

இரு தரப்பிலும் சமாதானத்தை ஏற்படுத்தப் பலரும் முயன்றும் பலனில்லாது போய் விட்டது.

முனியப்பனின் கண்கள் திறந்தன! செந்திலரசின் உடும்புப் பிரார்த்தனை உண்மையானதுதானா வென்ற சந்தேகம் அப்போது தான் அவனுக்கு உதித்தது. அவர்கள் உள்ளத்தில் அவமான உணர்ச்சியின் விளைவால் ஆக்ரோஷமும் கொந்தளித்தது. ஆனால்... ஆனால்...?

இந்தச் சந்தர்ப்பத்தில், செந்திலரசுக்கும், பொன்னம்பலத்துக்கு மிடையே விருந்த பூசல் முனியப்பனுக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருந்தது.

'ஏன், பொன்னம்பலத்துக்குத்தான் என்ன, செந்திலரசுக்குள்ள இலட்சணமும் யோக்கிய தாம்சங்களும் இவனுக்கில்லையா? அவனைப் போன்ற கெடும்புக்காரனுகவுமில்லையே? இனி கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே யிருந்து எழும்பினாலும் சரி, செந்திலரசுக்குப் பெண்ணைக் கட்டுவதில்லை! அவன் கண்ணெதிரிலேயே அஞ்சுகத்தின் கல்யாணத்தை ஆடம்பரமாக நடத்திவிடுவது'--இந்த அளவுக்கு முனியப்பனின் சார்பில், பொன்னம்பலத்திடம் தூதுகள் நடந்தன. அதற்கெல்லாம் முடிவாகத்தான், பொன்னம்பலம், சந்தையில்

உடும்பு விற்ற பெண்ணைக் கைப்பிடிக்க ஒருவாறாக ஒப்புக் கொண்டான்.

படு பட்டிக்காடான சேரன் விடுதியில் புரட்சியான அதிசயம் ஒன்று நடந்ததென்றால் அது பொன்னம்பலத்துக்கும் அஞ்சுகத்துக்கும் நடந்த கல்யாணத்தைத் தவிர வேறென்ன இருக்க முடியும்?

கல்யாணத்துக்கு முன், செந்திலரசு ஆடின நாடகம்தான் ஒரு நிஜமாக முடிந்தது. இப்போது - கல்யாணத்துக்குப் பின், புது மாப்பிள்ளையான பொன்னம்பலத்தின் விதம் ஆரம்பமாயிற்று! ஆடம்பர உடை, மெத்தை வீடு, எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டு, ஓர் ஆறு மாத காலமாவது அஞ்சுகம் மண் தரைக் குடிசையை மெழுகிக் கோலமிட்டுத் தன்னுடன் வாழ்ந்தாலன்றி அழைக்க மறுத்து விட்டான் பொன்னம்பலம். யார் சொல்லியும் அவன் கேட்பதாக இல்லை. இந்தச் சண்டையைத் தீர்த்து வைக்க, பரம வைரியாக இருந்த செந்திலரசுதான் வந்து சேரவேண்டியிருந்தது! இப்போது கிராமத்துக்கும் முனியப்பனுக்கும் எல்லாம் புரியாமல் இருக்குமா?

* * *

மாலைப்பொழுது மங்கும் சமயம். ஆலமரத்தடியில் நின்று, அலகால் தழை கொய்து ஆடுகளை மேய விட்டுக் கொண்டிருந்தாள் ஞானம். அவ்வாடுகள், கீழே விழுந்த தழைகளைத் தின்னவில்லை, ஓடவுமில்லை. அவளது முகத்தையே பார்த்துப் பார்த்து மௌன மொழியில் ஏதேதோ கொஞ்சின. பின்னே யிராதா? முகத்திலும், கைகளிலுமாகப் பளிச்சிடும் ஒளி வனப்புடன், அற்புத மோகினி வடிவாக விளங்கும் எஜமானியின் புதுத் தோற்றம் கண்டு அவை மெய்யிழந்து சொக்கி விட்டன.

''த! நான்தான் ஒன்னை அப்பவே கண்டிச் சுட்டுப் போனேனல்ல? இனிமேல்பட்டு ஆடு மேய்க்க வந்தா, அத்தான்தான் என்ன நினைக்கும்?'' - இவ்வாறு திடீரென்று அண்ணன் குரலைக் கேட்டுத் திரும்பினாள் ஞானம். மச்சானும் மாப்பிள்ளையும் தோளில் போட்ட கையாக வந்து கொண்டிருந்த காட்சி அவளை வெட்கி வொதுங்கச் செய்து விட்டது!

''இதனாலே யென்ன மச்சான்? உடும்பு புடிக்கிற புருசனுக் கொத்தபடி ஓர் ஆடு மேய்க்கிற பொஞ்சாதிதானே பொருத்தம்?'' எனக் கூறியபடி பெருநகை விடுத்தான் செந்திலரசு. அதே கணம் அவர்கள் மூவரையும் திகைக்கச் செய்தது மற்றொரு குரல்!

'' **மண்ணிலே பொன்னிருக்கும்**<br>
**மர்மத்தை அறியாத**<br>
**மனிதரின் மதியென்னவோ - ஞானப்**<br>
**பெண்ணே!''**

மூவர் பார்வையும் ஒரே திசையில் வெறிச்சிட்டு நோக்கின. என்ன அதிசயம்? அந்தச் சாமியார்தானா, இல்லை - அவருடைய - ஆவியோ? ஐயோ, அந்தச் சாமியாரேதான்! இப்போது - படு கிழம்!

சாமியார் நெருங்கி வந்தார். செந்திலரசும், பொன்னம்பலமும் ஓடிப் போய், ஒருமிக்காக அவரது காலில் விழுந்தார்கள். ஞானம் அவரது கைகளைப் பற்றி அணைத்துக் கொண்டாள்.

சாமியார் ஒரு தடவை கடகடவென்று நகைத்தார். பின்னர், ''தம்பிங்களா, எழுந்திருங்க! நீங்க செய்த காரியம் எனக்குத் தெரியாதுன்னு நினைக்கவேணும். உலகத்துலே, யார் யாருக்கு எதது நியாயமாகக் கிடைக்கணுமோ, அததுதான் கிடைக்கும்! இந்தப் பாடத்தை முதல்லே தெரிஞ்சுக்கிருங்க ரெண்டு பேரும். அடுத்த படியா, பேராசைக் காரனுக்குப் பெரு நஷ்டம்தான் விளையும் கிறத்தையும் நல்லாத் தெரிஞ்சுக்கிருங்க! நீங்க ரெண்டு பேருமாக்கூடி, தூக்கமாட்டாமே எடுத்து வந்தீங்களே, யாராவது அதுலே கொஞ்சம் ஊர் உலகத்துக்காகச் செலவழிப் போம்னு நினைச்சீங்களா? அதுதான் இல்லை! போங்க, போங்க! போயி, புதைச்சதைத் தோண்டி இங்கே கொண்டாங்க!'' என்றார் கேலியான குரலில்.

இருவரும் ஒரு கணம் விலவிலத்துப் போனார்கள்! பின்னர், புதரடிக்குச் சென்று தோண்டிப் பெட்டியை யெடுத்துவந்தார்கள். சாமியார் அதை வாங்கி வைத்துக்கொண்டு, ''நீங்க ஆளுக்கு ஒண்ணு எடுத்துக்கிட்டுப் போனீங்களே - செம்புக் கட்டி - அதுதான் அசல் தங்கக் கட்டி! இங்கே பாருங்க'' எனக் கூறிக்கொண்டே, பெரிய அளவாக இருந்த எட்டுக் கட்டிகளையும், துணியால் துடைத்துக் காட்டிவிட்டு, ஒவ்வொன்றாகக் கீழே எறிந்தார். அத்தனையும், 'ணங் ணங்' எனச் சத்தமிட்டபடி தெறித்து விழுந்த வெண்கலம், செப்புக் கட்டிகள்!

சாமியார் பெருநகை விட்டார். ''அப்பா, போனது போகட்டும். நீ என் ஞானப்பெண்ணுக்கு அண்ணன்; நீ என் ஞானப் பெண்ணைக் கட்டிக்கப் போறவன். இதனாலே யெனக்குத் திருப்தி. என் ஆசை யென்னவோ, அது நடந்துடிச்சி. நான் செய்து வைச்சிருந்த நகை நட்டுச் சாடாவும், இந்த ஞானப் பெண்ணுக்காகத் தான்! இப்போ - மரியாதையா, இந்தக் கட்டியெல்லாம் வாரிப் போட்டு, இருந்த இடத்திலியே, கொண்டு போயி, நீங்க வைச்சுடணும். இத்தனையும், ஒரு காலத்திலே தங்கமா மாறி, உலகத்துக்குத்தான் கிடைக்கும். அதுக்கு, எத்தனை யெத்தனையோ காலமிருக்கு!'' இவ்வாறு கூறிவிட்டுச் சாமியார் எழுந்து விட்டார். மூவரும் பரபரப்புடன் அவரைச் சூழ்ந்து கொண்டனர். ஆனாலும், சாமியார் கிளம்பியே விட்டார். 'மண்ணிலே பொன்னிருக்கும்' என்ற பாட்டுடன், போகிற போக்கில், அவரது கை, செந்திலரசுவின் நிலத்தைச் சுட்டிக்காட்டிப் புரிய வைத்தது!

உலகத்தின் எங்கேயோ ஒரு மூலைக்காட்டில் பிறந்து வளர்ந்த பெண்ணை, ஞானப் பெண்ணாகச் சாமியார் புகழ்ந்ததன் தெய்வ இரகசியம் என்னவோ? பூர்வ ஞானமுள்ள அவர்தான் அறிவார் அதை. ஆனால், ஊனக் கண்ணிருந்தும் உலகைக் காணாத மாந்தரிடையே உண்மையொளி பெற்றவை-நான்கு சோடி விழிகள்!



# SHIMADA

## VACUUM FLASK

## "உங்கள் நண்பன்"

உலகதரச் சிறப்புடன் சீரோடு
இந்தியாவில் தயாரிக்கப்படும்
வாக்கூம் பிளாஸ்க்குகளின்
உபயோகங்கள் எண்ணிலடங்கா.
கடும் உழைப்பிற்குப் பின்
புத்துணர்ச்சிபெற உல்லாசப்
பயணத்தில் உவகைபெற,
நோயாளிகள் புதிய ஊக்கம்பெற,
கொட்டும் பனியிலும் வாட்டும்
வெயிலிலும் சூடான அல்லது
குளிரான பானம் பரிமாற-
படிக்கும்போதும், பல சிக்கலான
பிரச்னைகளில் மூழ்கியிருக்கும்போதும்
உங்களுக்குச் சேவை செய்ய,
உற்றதுணையாய்-சேவகனாய்-
உதவுவதும்-எங்கும் எப்போதும்
உபயோகத்திலிருப்பதும்-அனைவருட
வாழ்வில் நீங்காத ஓர் அங்கமாய்
விளங்குவதும் - ஷிமாடா.

முழு சோதனைக்குப் பின் வெளிவரு
வது அதன் தனிச் சிறப்பு. அந்த
நண்பனைப் பெறுவது உங்களு
க்குச் சிறப்பு. அதற்குச் செல
விடும் த. பை. ஒவ்வொன்றும்
பயனுள்ளது என்பது
எல்லோருக்கும் சிறப்பு.
மறவாதீர்கள் உங்கள்
நண்பனை
ஷிமாடாவை.




இந்தியாவில்
தயாரிப்பவர்கள்:
ஷிமாடா கிளாஸ் &
பிளாஸ்க் பாக்டரி
பிரை விட்.
சென்னை—25

MPC-TAM

5—5—2

# விக்ரமோர்வசீயம்

எம். எஸ். சிவஸ்வாமி

சென்ற ஜனவரி முதல் வாரத்தில் முடிவடைந்த சென்னை சங்கீத வித்வத் சபையின் கலைவிழா நிகழ்ச்சிகளில் முக்கிய இடம் பெற்று, ஏராளமான ரசிகர்களும் ஸம்ஸ்கிருத மொழியில் பற்றுள்ளவர்களும் மற்றவர்களும் கண்டுகளித்து அவர்களுடைய பாராட்டுதலைப் பெற்ற விசேஷ நிகழ்ச்சி 'விக்ரமோர்வசீயம்' என்ற ஸம்ஸ்கிருத நாடகம். இதற்கு முன் ஆண்டு நிகழ்ச்சியில் ''மாளவிகாக்னி மித்ரம்'' என்ற நாடகத்தை மிகவும் வெற்றிகரமாக நடத்தி, ஸம்ஸ்கிருத மொழி புத்தகத்தில் மட்டும் படித்துப் போற்றப்படும் மொழி அன்று, பேச்சிலும் பழகி அளவளாவுவதற்கு ஏற்ற உயிருள்ள அழகிய மொழி என்பதை எடுத்துக் காட்டிய, சென்னை ஸம்ஸ்கிருத ரங்கம் குழுவினர் இந்த ஆண்டு நிகழ்ச்சியில் 'விக்ரமோர்வசீயம்' என்ற நாடகத்தை நடத்திக் காட்டினர்.

கவி காளிதாசனுடைய சாகுந்தலத்தைப் பற்றி எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அவனுடைய இதர நாடகங்களைப் பற்றிச் சாதாரண மக்களுக்கு அதிகம் தெரியாது. ஆனால் இவ்விஷயங்களில் நுட்பமறிந்தவர்கள் விக்ரமோர்வசீயம் என்னும் உணர்ச்சி மிக்க நாடகத்தைச் சில அம்சங்களில் சாகுந்தலத்தைக் காட்டிலும் உயர்வானது என்றும் நடிப்பதற்கு மிகவும் ஏற்றது என்றும் கூடக் கருதுவது உண்டு. மேடையில் இந்நாடகத்தைக் கண்டவர்கள் இந்தக் கூற்றில் ஓரளவுக்கு உண்மை இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ளுவார்கள்.

ஸம்ஸ்கிருத நாடகம் என்றால் எப்படி யிருக்கும்? தற்காலம் நாம் தினசரி பார்த்துக் கொண்டிருக்கும் நாடகங்களைப் போலத் தான் இருக்குமா? அரங்க மேடை எவ்வாறு இருக்கும்? பின்னணி இசை எவ்வாறு இருக்கும்? காட்சி ஜோடனைகள் எப்படி இருக்கும்? பாட்டுக்கள் எப்படிப் பாடப்படும்? இப்படிப் பல கேள்விகள் மனத்தில் எழுகின்றன. அதிலும் ஸம்ஸ்கிருத மொழி மகோன்னத நிலைமையில் சீரும் செழிப்புமாக வளர்ந்திருந்த காலத்தில், பேரரசர்கள் முன்னிலையில் நடிக்கப்பட்ட நாடகங்கள் என்றால் எல்லா அம்சங்களிலும் பூரணத்வம் பெற்றிருந்திருக்க வேண்டும் அல்லவா?

அந்தப் பொற்காலத்தைப் பற்றி இப்போதுள்ள நமக்குத் தெரியாது. எல்லாம் ஆராய்ச்சியின் பேரில் ஆதாரங்களைக் கொண்டு அறியப்பட வேண்டியவை. இத்தகைய ஆராய்ச்சிகளை ஆழ்ந்து தொடர்ந்து நடத்திய பேரறிஞர்கள், பரத சாஸ்திரத்தில் நாடகமுறைச் சிறப்புக்களை அந்தக் காலத்தில் கையாண்டபடி, முடிந்த வரையில், விக்ரமோர்வசீயம் என்னும் நாடகத்தில் வெளிக்கொணர முயன்றிருக்கின்றனர். அதில் வெற்றியும் பெற்றனர் என்றே கூறலாம்.



இத்தகைய சிறப்பு அம்சங்கள் பல இந்த நாடகத்தில் காணப்பட்டன. காளிதாஸனுடைய வசனங்களை முழுதும் கையாளப் பட்டிருக்கின்றன. தழுவி அமைக்கப்பட்டதல்ல. காளிதாசவிழாவில் நடித்துக் காட்டத் தயாரிக்கப்பட்டதால், வசனங்களுக்கு முக்கிய இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. நாடகத்தையும் ஒரு நாட்டிய நாடகமாக மாற்றி விடாமல், நாடக அம்சத்தை மட்டும் இருத்திக் கொண்டு நடன அம்சத்தை விட்டு விட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. நடனத்துக்கு ஏற்ற இடங்கள் பல இந்நாடகத்தில் வருகின்றன. நாடகத்தின் முக்கியமான கதாநாயகியே ஊர்வசிதானே! இந்தக் காலத்தின் போக்குப்படி நடிப்பதாக இருந்தால், குறைந்தது நான்கு அல்லது ஐந்து நடனக் காட்சிகளாவது இருந்திருக்கும். ஒரு நடனக் காட்சிகூட இந்நாடகத்தில் இராதது ஒரு முக்கிய அம்சம்.

முதல் பாதி வரையில் அங்க அசைவுகளின் மூலமும், முக பாவங்களின் மூலமும், நடிப்பு மூலமும், உணர்ச்சியை வெளியிடாமல் உணர்ச்சி மிக்க கட்டங்களில் கூட வசனங்களின் மூலமும், உச்சரிப்பின் அழுத்தத்தின் மூலமும் உணர்ச்சிகளின் வேகம் வெளிப்பட்டது. தற்கால நாடகமேடையில் நாடகங்கள் பார்த்துப் பழகியவர்களுக்கு இது புதுமையாகத் தோன்றியிருக்கலாம். ஆனால் நாடக முடிவு வரையில் பார்த்த பின்னரே உணர்ச்சிகளனைத்தையும் கட்டுப்பாட்டுக்குள் அடக்கியே நாடகம் நடிக்கப்பட்டிருக்கிறதென்பது தெரிந்தது. இதுவே இந்நாடகத்தின் சிறப்பு என்று சொல்ல வேண்டும். சில சமயங்களில் மிகவும் சிரமத்தின் பேரிலேயே உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ள வேண்டியிருந்தது என்ற எண்ணமும் ஏற்பட்டது. இதற்கு ஓரளவுக்கு விலக்கு என்பது போல் ஒரு காட்சி மட்டும் அமைந்திருந்தது. அது தான் நாடகத்தின் ஏழாவது காட்சி. அது தான் நாடகத்தின் 'க்ளைமாக்'ஸாம். கதாநாயகனான புரூரவஸ், தனது காதலி ஊர்வசியின் பிரிவாற்றாமையால் பரிதவித்துச் சித்தப் பிரமை கூட ஏற்பட்டு விடும் காட்சி. இந்த அவஸ்தையில் புரூரவஸின் நடிப்பும் உணர்ச்சி வேகத்துக்கு ஏற்றபடி ஈடு கொடுக்கிறது. பசும் புல்லையும் இந்திர கோபப் புழுக்களையும் தன் காதலியின் மேலங்கியாகப் பாவித்து அதனை அணையப் போவதும், மேகத்தையும் இடி ஓசையையும் தன் காதலியைக் கவர்ந்து

செல்லும் அரக்கனது குரலாகக் கருதி அவனுடன் போர் புரியப் புறப்படுவதும், பாறை மீது உட்கார்ந்திருந்த மயிலைக் கண்டு தன் காதலியைப் பற்றிப் புலம்பி விசாரிப்பதும், இப்படியே சக்கரவாகப் பக்ஷி, வண்டு, யானை, குன்று, நதி, மான் முதலிய ஒவ்வொன்றையும் கண்டு புலம்புவதும், இந்நாடகத்தின் உணர்ச்சி ததும்பும் கட்டங்கள். இந்தக் காட்சியின் இறுதிதான் ஊர்வசி உருமாறிக் கிடந்த செடியின் முன் நின்று உருகுவதும் அதனை அணைய முற்படுவதும். இந்தக் காட்சியிலிருந்து நாடகத்துக்கு வேகம் விறுவிறுப்பு எல்லாம் உண்டாகி விடுகின்றன. புரூரவஸின் நடிப்பும் மிகவும் உயர்வாக இருந்தது.

இசையைப் பற்றித் தனியாகக் குறிப்பிட வேண்டும். கதாபாத்திரங்கள் ஒருவராவது நேரிடையாகப் பாடுவதில்லை. ஆண் பாத்திரமானாலும், பெண் பாத்திரங்களானாலும், பூஜை செய்யும் கட்டம், இறந்த உப்பரிகையில் பூரண சந்திரனைக் குறித்து "பிரியப்ரஸாதன" (இழந்த காதலனுடைய அன்பை மீண்டும் அடையப்பெண்கள் மேற்கொள்ளும் நோன்பு) என்ற விரதம் அனுஷ்டிக்கும் போதும் பாட்டுகள் பாடலாம் என்ற கட்டங்களில் கூட, பாட்டுகள் பாடப்படுவதில்லை. ஆனால் அந்தந்தச் சந்தர்ப்பங்களுக்கும் பாவங்களுக்கும் ஏற்றபடி பாட்டுக்களைப் பின்னணி கோஷ்டியினர் பாடுகின்றனர். இந்தப் பின் அணி கோஷ்டியும் மிக விரிவானதன்று. நான்கு பேர்களை மட்டுமே கொண்டது இந்தக் குழு. வீணையும் குழலும் மட்டுமே வாத்திய இசைகள். ஆண் பாத்திரங்களின் உணர்ச்சிகளையும் பாவங்களையும் வெளியிடும்போது ஆண் குரலும், பெண் பாத்திரங்களின் நடிப்பின்போது பெண் குரலும் பின்னணியாக ஒலிக்கின்றன. அது மட்டுமல்ல. பின்னணி ராகத்துக்கும், நாடக மேடையில் தோற்றுவிக்கப்படும் சம்பவங்களுக்கும் பாவங்களுக்கும் இடையே இருந்த இணைந்த ஒருமைப்பாடு மிகவும் பாராட்டப்பட வேண்டியது. உதாரணமாக, ராஜா உத்தியான வனத்தில் இருக்கும்போதுள்ள அமைதி நிலையை வீணையில் ஒலித்த மலயமாருத ராகம் மூலமும், ஊர்வசிமீது உதயமாகும் காதலை பரசு ராகத்திலும், தேவலோகத்தில் நிகழும் சம்பாஷணையைத் தேவகாந்தாரி ராகத்திலும், பூரண சந்திர விரதத்துக்கு அரசரை அழைக்கும் சந்தகி பூர்ணசந்திரிகா ராகத்திலும் விருத்தங்கள் அமைத்துப் பின்னணிக் குழுவினர் இசை வழங்குகிறார்கள். அதேபோல் தலைவியின் துக்கத்தைக் கண்டு தோழிகள் ஆஹிரி, அசாவேரி, செஞ்சுருட்டி ராகங்களில்தான் ஏங்குகின்றனர். மேகத்தைக் கண்டு கோபிக்கும் புரூரவஸ் அடாணா ராகத்தில்தான் கோபிக்கிறார். தன் தலைவியைப் பற்றி விசாரிக்கும் கட்டத்தில் கூட மயூரத்தை (மயிலை)ப் பார்த்து மயூரத்வனியிலும், குயிலைப் பார்த்துக் கோகிலவராளியிலும், அன்னத்தைப் பார்த்து ஹம்ஸ நாதத்திலும், சக்கரவாகப் பறவையைப் பார்த்துச் சக்கரவாக ராகத்திலும், மானைப் பார்த்துச் சாரங்க ராகத்திலும், செடியைப் பார்த்து உதாங்கி ராகத்திலும் பிரலாபிக்கிறார். பிரலாபிக்கிறார் என்பதைவிடப் பிரலாபிப்ப



தற்கு ஏற்ப அந்தந்தச் சந்தர்ப்பத்துக்கு ஒத்து வீணையிலும், குழலிலும், பின்னணி இசை ஒலிக்கிறது என்பது பொருந்தும்.

இசைவழங்குவதில் இவ்வளவு விசேஷ கவனமும் ஆராய்ச்சித் திறனும் காட்டப்பட்டுள்ள மற்றொரு நாடகத்தைப் பார்க்கமுடியுமா என்பது சந்தேகம். ஆனால் வீணை நாதமும் குழல் நாதமும் ஒலிபெருக்கி சரியாக அமையாததாலோ என்னவோ முழுவதும் கேட்கப்படவில்லை. இசை மட்டும் முதல் தரம். ஆரம்பத்தில் கேட்கப்பட்ட மிருதங்க ஓசையைத் தவிர, பிறகு மிருதங்கமே ஒலிக்கவில்லை. இதுவும் ஒரு முக்கிய அம்சம்.

அரங்கமேடை அமைப்பு நாடகத்துக்கு ஏற்றதாக இல்லை என்பதை வித்வத் சபை விசேஷப் பந்தல் எடுத்துக் காட்டியது. கச்சேரி செய்வதற்கும் நடனங்களுக்கும் ஏற்ற வாறு அமைக்கப்பட்ட மேடை நாடகத்துக்கு உகந்ததல்ல. ஆனால் அரங்க மேடையில் குறைந்த வசதிகளையும் பூரணமாகப் பயன்படுத்திக் கண்குளிர அமைந்திருந்த காட்சி ஜோடனைகள் முதல் தரம் என்றே சொல்லவேண்டும். தேவலோகக் காட்சியும், உத்தியான வனக் காட்சியும், இமயமலைச் சாரல் காட்சியும் மிகவும் நேர்த்தியாக அமைந்திருந்தன. கலாசாகரம் ராஜகோபால் இந்தப் பொறுப்பை ஏற்று நிர்வகித்தார் என்றால் கேட்க வேண்டுமா ?

இதற்குக் காரணமாக இருந்தவர்களைப் பற்றி ஒரு வார்த்தை. டாக்டர் வே. ராகவனுடைய தலைமையில் திரு வி. எஸ். சுந்தரம், குமாரி, ஜானகி முதலியோரின் ஒத்துழைப்பைக் கொண்டு, ஆக்கப்பட்டது இந்நாடகம். இதில் பங்கு கொண்டவர்களில் முக்கியமானவர்கள் விவேகானந்தா கல்லூரி போதகாசிரியர் திரு கணேசன் (புரூரவஸ்) ராமகிருஷ்ண மிஷன் ஆசிரியர் திரு எஸ். ராஜகோபால சர்மா (விதூஷகன்) ஸ்ரீமதி நிர்மலா ராமச்சந்திரன், (ஊர்வசி) முதலியவர்கள். எல்லோரும் ஸம்ஸ்கிருதத்தில் பட்டம் பெற்றவர்கள். பொறுப்புடன் ஆராய்ச்சித்திறனும் உள்ளவர்கள். அவர்களுடைய உற்சாகத்தினால் உருவாகியுள்ள இந்நாடகம் வெற்றியடைந்திருப்பதில் ஆச்சரியமில்லை. இந்த நாடகத்தை ஸம்ஸ்கிருத ரங்கம் மற்றும் எங்காவது நடிக்கச் சந்தர்ப்பம் ஏற்பட்டால் ரசிகர்கள் கண்டுகளிக்கலாம்.



# த்வார்க்கின்ஸ்

கை ஆர்மோனியப் பெட்டிகள் செய்வதில் மிக்க கைதேர்ந்தவர்கள். மேற்படி ஆர்மோனியப் பெட்டிகள் தயாரிப்பதில் புதுமையைப்புகுத்தியவர்களில் 'த்வார்க்கினை' முன்னணியில் நிற்கிறார்கள்.

விலை ரூ. 40/-லிருந்து ரூ. 550/- வரையில்

விலை விவர ஜாபிதாவுக்கு ஆங்கிலத்தில் எழுதுங்கள்

**த்வார்க்கின் & சன் பிரைவேட் லிட்.**
8/2, எஸ்பிளனேட் ஈஸ்ட் - கல்கத்தா

---

## பாஜுலேஸரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,

(நிறுவியது)
"வீணா விஹார்," 17-A. ஸயான் - மாதுங்கா எஸ்டேட்
(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)
**பம்பாய் - 22**
தந்தி : 'GROW RICH'

POST BAG No 6759

| 25 மாதங்கள் | குறுகிய கால ஏலச் சீட்டுகள்<br>2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள்<br>1961 பிப்ரவரி மாத ஸீரிஸ் | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

சேரக் கடைசி தேதி 11-2-1961 ... முதல் ஏலந் தேதி 12-2-1961

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | J | ரூ. 10/- | ரூ. 250/- |
| F | ரூ. 25/- | ரூ. 625/- | | | |

### நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 11-2-1961 முதல் ஏலத் தேதி 12-2-1961
50 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| A | ரூ. 100/- | ரூ. 5,000/- | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2,500/- | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1,000/- | ரூ. 100/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களை சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

வெள்ளிக்கிழமை (வார விடுமுறை நாள்)

வேலை நேரம் : காலை 8 முதல் 11 மணி வரை : மாலை 4 முதல் இரவு 8 மணி வரை

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

தலைமை ஆபீஸ் : "பானுமேசி பில்டிங்ஸ்", 3, சிங்காரச்சாரி தெரு, தபால் பெட்டி நெ. 414 திருவல்லிக்கேணி, மதராஸ் - 5

இதர கிளைகள் :
1. 185, முதல் மாடி, ஆறாவது கிராஸ், காந்தி நகர், பெங்களூர் - 9
2. "கான்னன் ஹவுஸ்" 1/24, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி - 1
3. "பானுமேசி பில்டிங்", 14-A/4, W.E.A. கரோல்பாக், புது டெல்லி - 5
4. 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி - 3

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# கருவூர் பசுபதீஸ்வரர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஒரு வீட்டின் பின்புறம் படரும் செடிகள் சில வைத்திருக்கிறார்கள். அவரை, புடல், பீர்க்கு, சுரை முதலிய காய்கறித் தோட்டம் அது. தோட்டத்துக்கோ பெரிய வேலி ஒன்றும் இல்லை. அடுத்த வீட்டுக் கன்றுக்குட்டி ஒன்று இந்தத் தோட்டத்தில் நுழைந்து பசுமையாய் இருந்த செடிகளைத் தின்று விடுகிறது. தோட்டம் போட்டிருந்தவர் இதனைக் காண்கிறார். கோபம் பிறக்கிறது அவருக்கு. கன்றுக்குட்டியை விரட்ட, பக்கத்தில் கிடந்த கம்பு ஒன்றை எடுத்துக் கன்றுக்குட்டியின் பேரில் வீசுகிறார். வேகத்தோடு வீழ்ந்த கம்பு கன்றின் கால் ஒன்றை முறித்துவிடுகிறது. அவ்வளவுதான்; கன்றுக்குட்டியின் சொந்தக்காரர், 'ஆம் அடுத்த வீட்டுக்காரர்தான் — எப்படி என் கன்றுக்குட்டியின் காலை முறிக்கலாம்?' என்று வெளியே வருகிறார். இரண்டு வீட்டுக்காரர்களுக்குமே கலகம். இந்தக் கலகம் காரணமாக ஒருவரையொருவர் கொலை செய்கிறார்: கொலை செய்தவர் நீதிஸ்தலத்தில் குற்றம் சாட்டப்பட்டுக் கடைசியில் தூக்குத் தண்டனையே பெறுகிறார். இரு குடும்பங்களும் ஒரு சிறு தோட்டம் காரணமாக அழிந்தே போகின்றன. இது நடந்தது சென்ற சில வருஷங்களுக்கு முன்னால். ஆனால் பல வருஷங்களுக்கு முன்னால் ஓர் அதிசய சம்பவமே நிகழ்ந்திருக்கிறது. ஒரு குட்டிக் கலகம் காரணமாக, அக்கலகத்தில் ஈடுபட்டவர்கள் நல்ல பக்தியுடைய பெருமக்கள் ஆனதினாலே, பெருந்தன்மையோடு நடந்து புகழ் பெற்றிருக்கிறார்கள். அறுபத்து மூன்று அடியார்களில் இருவராகத் திருத்தொண்டர் புராணத்திலேயே இடம் பெற்று விடுகிறார்கள். அவர்கள்தாம் எறிபத்தர், புகழ்ச்சோழர் என்பவர்கள். அவர்களது கதை இதுதான். எறிபத்தர் சிறந்த சிவபக்தர். சிவ அபசாரம் ஏதேனும் நடந்தால் அவர் சகிக்கமாட்டார். சிவபெருமானை வழிபடுவதும், சிவனடியார்களுக்குத் துன்பம் ஒன்றும் வராமல் காப்பதுமே அவர் பணியாக இருக்கிறது. சிவகாமி ஆண்டார் என்பவரோ சிவபெருமானுக்கு மலர் மாலை சாத்தும் பணி செய்பவர். ஒரு நாள் நந்தவனத்தில் மலர் பறித்து வரும்போது நாட்டை ஆளும் மன்னன் புகழ்ச்சோழனது பட்டத்து யானை சிவகாமி ஆண்டார் கையிலிருந்த மலர்க்கூடையைப் பறித்து மலரையெல்லாம் சிதறி விடுகிறது. பாகன் இதனைத் தடுக்கவில்லை. இதைக் கண்ட எறிபத்தர் தம் கையிலுள்ள மழுவால் யானையின் துதிக்கையை வெட்டியதோடு பாகனையும் தாக்குகிறார். யானையும் பாகனும் அந்த இடத்திலேயே மாண்டுவிடுகின்றனர். செய்தி அறிந்த மன்னன் தலத்துக்கு விரைகிறான். மழுவுடன் நின்று கொண்டிருந்த எறிபத்தரைக் காண்கிறார். உடனே அவர் திருவடியில் விழுந்து யானையையும் பாகனையும் கொன்றது போதாது. அவர்கள் செய்த சிவ அபசாரத்துக்குத் தம்மையுமே பலி வாங்க வேண்டுமென்று வேண்டுகிறார். எறிபத்தர் மன்னனின் சிவபக்தியைக் கண்டு மாழ்குகிறார். இறைவனும் இருவரது பக்தியை மெச்சி அவர்களுக்குத் தரிசனம் தருகிறான். இத்துடன் நிற்கவில்லை புகழ்ச்சோழனது புகழ். பகைவராகிய அதிகன் பேரில் படைகொண்டு சென்று வெற்றி பெறுகிறான். போர்க்களம் சென்ற சோழன், தம் படையினர் கொன்று குவித்த வீரர்களிடையே சடைமுடியுடைய ஒரு தலையைக் காண்கின்றான். 'ஐயோ! இது என்ன அபசாரம்? சிவபக்தரை அல்லவா மடியச் செய்து விட்டார்கள் நம் வீரர்கள்' என்று வருந்துகிறான். பின்னர் எரி வளர்த்து அச்சடை முடியுடைய தலையை ஏந்திய வண்ணமே தீக்குளித்து முக்தி எய்துகிறான். இப்படிப் புகழ்ச்சோழன் புகழ் பெறுகிறான். இந்த இரண்டு தொண்டர்களது வரலாற்றையும் சேக்கிழார் விரித்து உரைக்கிறார்.



கருவூர்த் தேவர்

அவரது பெரியபுராணத்தில். இந்த இருவரும் வாழ்ந்த தலமே **கருவூர்**. அந்தக் கருவூரிலே இருப்பவர் **பசுபதி ஈசுவரர்**. அவரது திருக் கோயிலுக்கே செல்கிறோம் நாம் இன்று.

கருவூர் கொங்கு நாட்டுத் திருத்தலங்களில் ஒன்று. கிட்டத்தட்ட ஒரு வருஷகாலமாகச் சோழநாட்டுத் திருத்தலங்கள் பலவற்றைக் கண்டு களித்த நாம், சோழநாட்டை விட்டுக் கொங்கு நாட்டில் புகுகிறோம். கொங்கு நாட்டில் நமது தலயாத்திரை கருவூர் பசுபதீசுவரர் முன் நிறுத்தித் தொடங்குகிறது மகிழ்ச்சி தருகின்றது. கருவூர் திருச்சிக்கு நேர் மேற்கே ஐம்பது மைல் தொலைவில் இருக்கிறது. திருச்சி ஈரோடு ரயில் பாதையில் கரூர் என்ற ஸ்டேஷனில் இறங்கி மேற்கு நோக்கி ஒரு மைல் நடந்தால் கோயில் வாயில் வந்து சேரலாம். கோயில் பெரிய கோயில். நல்ல சுற்று மதிலோடு கூடியது. மதில் கிழமேல் 465 அடி நீளமும் தென் வடல் 250 அடி அகலமும் உடையது என்றால் அதன் அளவு கொஞ்சம் தெரியும் அல்லவா? இந்தக் கோயிலே **ஆனிலை** என்றும் இக்கோயில் இருக்கும் கருவூரை வஞ்சி, பசுபதீச்சரம், பாஸ்கரபுரம் என்றெல்லாம் கூறுகிறார்கள். காமதேனு பூசை செய்து வழிபட்டதால், கோயில் ஆனிலை என்றும் கற்பந்தோறும் தவம் செய்த பிரமன் படைப்புத் தொழில் செய்யக் கரு உற்பத்தி செய்த இடம் ஆதலின் ஊர் கருவூர் என்றும் பெயர் பெற்றிருக்கிறது. இத்தலம் முழுதும் வஞ்சிகள் வனமாக இருந்த காரணத்தால் இதனை வஞ்சி என்றும் அழைத்திருக்கின்றனர். (சேரர் தலைநகரம் வஞ்சி இத்தலமே என்றும், அது சரியில்லை அத்தலைநகரம் திருவஞ்சைக் களமே என்றும் ஆராய்ச்சியாளர் அன்றுமுதல் இன்று வரை வாதிட்டுக் கொண்டிருக்கின்றனர். இந்த வாதத்தில் எல்லாம் நாம் இறங்க வேண்டாம்!) இத்தலத்தின் சிறப்பு என்னவென்றால் பழைய சோழ மன்னர்கள் முடிசூட்டிக் கொள்ளுவது ஐந்து ஊர்கள்தாம். அதில் இந்தக் கருவூரும் ஒன்று என்பது. மற்றவை காவிரிப்பூம்பட்டினம், திருவாரூர், உறையூர், சேய்ஞலூர் என்றும் கூறுவர். இங்கிருந்து அரசாண்ட சோழ மன்னனுக்குத் தெய்வயானையார் திருமணநாளிலே தேவேந்திரனே அழைப்பு அனுப்பி வைத்திருந்தான் என்ற பெருமையும் உண்டு.

இத்தனை தகவலையும் தெரிந்துகொண்ட பின் கோயி. வாயிலைக் கடந்து உள்ளே செல்லலாம். சென்றால் ஒரு பெரிய திறந்த வெளி முற்றம் இருக்கிறது. அதில் வடப்பக்கம் நூற்றுக்கால் மண்டபம் அழகு செய்கிறது. இடைநிலைக் கோபுரத்தின் முன்னர் ஒரு மண்டபம் சமீபத்தில் கட்டியிருக்கிறார்கள். அங்குதான் ஒவ்வொரு ஞாயிறு மாலையும் பொதுச் சமய சன்மார்க்க சங்கத்தார் கூடுகின்றனர். வாரம் தவறாது சமயச் சொற்பொழிவுகளும் நடக்கின்றன.



எறிபத்தர்

இனி இடைநிலைக் கோபுரத்தையும், மகா மண்டபத்தையும் கடந்து கருவறை வந்தால் அங்கு பசுபதி ஈசுவரர் லிங்க உருவில் இருப்பார். இவர் கொஞ்சம் வலப்பக்கமாகச் சாய்ந்திருக்கிறார். திருமுடியில் பசுவின் கொம்புபட்ட வடுவேறு இருக்கிறது. காமதேனு வழிபடும்போது கொம்பு பட்டிருக்கும் போலும். அது காரணமாகவே கொஞ்சம் சாய்வும் ஏற்பட்டிருக்க வேணும். காமதேனு வழிபட்ட இவ்விறைவனைப் பங்குனி மாதத்தில் மூன்று தினங்கள் சூரியனும் வழிபடுகிறான். காலை 6·30 மணிக்கெல்லாம் சூரியகிரணம் வாயில் கொடிமரம் எல்லாவற்றையும் கடந்து வந்து இறைவன் திருமேனியைத் தழுவுகிறது. சரிதான். ஏன் இத்தலம் பாஸ்கரபுரம் என்று பெயர் பெற்றிருக்கிறது என்பது இப்போதல்லவா விளக்கமுறுகிறது. இங்குள்ள பசுபதி லிங்கரைத் தவிர வேறு நான்கு லிங்கத் திருவுருவங்கள் உண்டு. ஆதி நாயகராகிய பசுபதிக்குக் கீழ்ப்பக்கத்தில் கோடீச்சரர், அதற்கும் கீழ்பால் கயிலாயநாதர், அதற்கும் தெற்கே கரியமாலீசர், அதற்கும் தெற்கே ஆம்பிரவதி நதிக்கரையிலே வஞ்சுளேச்சரர் என்பவர் எல்லாம் லிங்கத் திருவுருவில் இருக்கின்றனர். ஒன்று சொல்ல மறந்து விட்டேனே! இந்தப் பசுபதி ஈசுவரர் கோயில் ஆம்பிர நதிக் கரையிலே இருக்கிறது. ஆனைமலைத் தொடரிலே உற்பத்தியாகி மாமரங்கள் அடர்ந்த சோலை வழியாக ஓடிவருவதால் **ஆம்பிரவதி** என்று பெயர் பெற்றது போலும்! இதனையே மக்கள் **அமராவதி** என்று கூறுகின்றனர். இந்த நதி கருவூருக்குக் கிழக்கே திருமுக்கூடல் என்ற தலத்திலே காவிரியுடன் கலக்கிறது. இறைவன் சந்நிதியில் நின்று கொண்டிருந்த நாம் மனத்தை எங்கெல்லாமோ செல்லவிட்டு விட்டோமே. கொஞ்சம் வேகமாகவே இத்தலத்தில் உள்ள இறைவியைக் காணச் செல்வோம். கிழக்கு நோக்கிய ஈசன் சந்நிதியிலிருந்து வடக்கு நோக்கி நடந்து ஒரு வாயிலைக் கடந்தால் எதிரே நிற்பாள் **சௌந்தரவல்லி**. தெற்கு நோக்கியவளாய். பெயருக்கு ஏற்ப அவள் நல்ல சௌந்தர்யவதிதான். அவளைப் பார்த்த கண்களைக் கொஞ்சம் இடப்பக்கம் திருப்பினால் அங்கு ஓர் **அலங்காரவல்லி** கிழக்கு நோக்கி

நிற்பாள் திவ்ய அலங்கார பூஷிதையாக. என்ன? இந்த இறைவன் ஏகபத்னி விரதன் ஆயிற்றே. இவர் எப்போது இரண்டாவது தாரத்தை மணம் முடித்தார்? என்று நாம் அதிசயிப்போம்! இங்கு முதல் முதல் கோயில் கொண்டவள் அலங்காரவல்லிதான். அச்சிலை வடிவம் கொஞ்சம் பின்னம் அடைய, அவளை ஒதுக்கிவிட்டுச் சௌந்திரவல்லியை உருவாக்கி யிருக்கிறான் மன்னன். ஆனால் அவன் கனவில் அலங்காரவல்லி தோன்றி, தான் தன் இடத்தை விட்டு அசைய மாட்டேன் என்று மறுத்திருக்கிறாள். அவ்வளவுதான்! 'அவளும் இருக்கட்டும் புதிதாய் உருவான சௌந்திர வல்லியும் இருக்கட்டும்' என்று சௌந்திர வல்லியைத் தெற்கு நோக்கி பிரதிஷ்டை செய்திருக்கிறான். இந்தத் தலத்துக்குச் சம்பந்தர் வந்திருக்கிறார்.

**விண் உலா மதிசூடி வேதமே**
**பண் உளார் பரமாய பண்பினர்**
**கண் உளார் கருவூருள் ஆனிலை**
**அண்ணலார் அடியார்க்கு நல்லரே**

என்று பாடி யிருக்கிறார். இத்தலத்திலுள்ள முருகனை **அருணகிரியார்** திருப்புகழ் பாடிப் பரவி யிருக்கிறார். கருவூர் என்றதுமே **கருவூர்த் தேவர்** நினைவுக்கு வருவாரே. அவரைப் பற்றித் தெரிய வேண்டாமா? அவரது சந்நிதி வெளிப்பிராகாரத்தில் தென்பக்கம் ஒரு சிறிய கோயிலாக இருக்கிறது. இவர்தான் அன்று திருவிசைப்பா பாடியவர். எண்ணற்ற அதிசயங்கள் செய்து காட்டியவர். தஞ்சைப் பெருவுடையாரை ஆவுடையாரில் பொருந்தச் செய்தவர். கடைசியில் பசுபதி ஈசுவரரோடு இரண்டறக் கலந்தவர். இவருக்கும் நம் வணக்கங்களைச் செலுத்திவிட்டு வெளியே வரலாம். இக்கோயிலிலும் நிறையக் கல்வெட்டுகள் உண்டு. சோழ மன்னர்களான வீர ராஜேந்திரன், மூன்றாம் குலோத்துங்கன், விக்கிரமன் முதலியவர்களோடு வீர பாண்டியன், சுந்தரபாண்டியன், மீனாக்ஷி நாயக்க மன்னர்கள் ஏற்படுத்திய நிபந்தங்களைப் பற்றிக் கல்வெட்டுகளிலிருந்து அறியலாம்.

வந்ததோ வந்தோம். இத்தலத்திலுள்ள **ரங்கநாதரையும்**, இத்தலத்தின் பக்கத்தில் உள்ள **தான்தோன்றிமலை கல்யாண வேங்கடரமணரையும் வெண்ணெய்மலை பாலசுப்பிரமணியரையும்** வணங்கிவிட்டே திரும்பலாமே. பசுபதீசுவரர் கோயிலுக்குக் கிழக்கே ஆறு பர்லாங்கு தொலைவில் அரங்கநாதர் பள்ளி கொண்டிருக்கிறார். இவரையே அபயப்பிரதான ரங்கநாதர் என்று அழைக்கிறார்கள். கோயிலின் மேலப் பிராகாரத்தில் சிலை உருவத்திலும் ரங்கநாதர் இருக்கிறார். கோயில் கட்டப் பூமியைத் தோண்டும்போது கிடைத்தவராம். பத்தடி நீளம் உள்ள கம்பீரமான வடிவம். இங்கு ஓர் இலந்தை மரம். இந்த மரத்தின் கனி பலவிதமான 'சைஸ்' களிலும் பலவிதமான சுவைகளிலும் கிடைக்கிறதென்கிறார்கள். இந்த ரங்கநாதரைத் தரிசித்து விட்டு, ஆம்பிராவதி ஆற்றைக் கடந்து தெற்கு நோக்கி இரண்டு மைல்கள் நடந்தோ வண்டியில் ஏறியோ சென்றால் தான்தோன்றிமலை வந்து சேருவோம். மலை தானாகத் தோன்றியதாக இருக்கலாம். ஆனால் இங்குள்ள கல்யாண வேங்கடரமணர், சிற்பிகளால் ஆக்கப்பட்டவர்தான். மலையையே குடைந்து அதில் பெருமாளைச் செதுக்கி யிருக்கிறார்கள். சுமார் எட்டடி உயரத்தில், இவர் இங்கே தனித்தே நிற்கிறார். அலர்மேல்மங்கைத்தாயார் இல்லை. 'அம்மையை விட்டுத் தனித்து வந்திருக்கும் இவர் எப்படிக் கல்யாண வேங்கடரமணர் என்று பெயர்பெற்றார்?' என்று தெரியவில்லை. இவருடைய உற்சவமூர்த்தம் கருவூர் ரங்கநாதர் கோவிலிலேயே இருக்கிறது. இந்தத் தான்தோன்றி மலையைத் **தென் திருப்பதி** என்கிறார்கள். அந்த வடமலைமேல் நிற்கும் மாதவனைக் காணும் வாய்ப்புப் பெறாதவர்கள் இந்தத் தென் திருப்பதியானையாவது கண்டு தரிசித்தால் போதும்.

வேங்கடரமணனைத் தரிசித்த பின் கருவூருக்கு வந்து பின்னும் இரண்டு மைல் வடகிழக்காகக் கருவூர் சேலம் செல்லும் சாலையில் செல்ல வேண்டும். சென்றால் இடப் பக்கத்தில் ஒரு சிறு பாறையும் அதன்மேல் ஒரு கோயிலும் தெரியும். இந்த மலையைத் தான் வெண்ணெய்மலை என்கிறார்கள். வெண்ணெய் போன்ற வெள்ளைக்கல் குன்று இது. இந்த மலையில் கோயில் கொண்டிருப்பவர் பாலசுப்பிரமணியர். இவருடன் காசி விசுவநாதர், விசாலாக்ஷி, கருவூர்த் தேவர் எல்லாம் இருக்கின்றனர். இவர்களையெல்லாம் வணங்கியபடி இறங்கி வரலாம். சந்நிதிக்கு எதிரில் ஒரு சிறு குளம் இருக்கிறது. அதற்கும் வடகிழக்கில் தேனு தீர்த்தம் இருக்கிறது. இது புராணப் பிரசித்தி பெற்றது. பிரமனுக்குத் தான் இல்லாவிட்டால் படைப்புத் தொழிலே நடக்காது என்ற கர்வம் ஏற்பட்டிருக்கிறது. அதை அடக்க இறைவன் அந்த வேலையினின்றும் பிரமனை விலக்கிவிட்டுக் காமதேனுவையே 'அப்பாயிண்ட்' பண்ணியிருக்கிறார். காமதேனுவும் அப்படியே உயிர்களனைத்தையும் படைத்து விட்டு அந்த உயிர்களுக்கு உணவாக வெண்ணெயையே மலையாகப் படைத்திருக்கிறது. காமதேனுவுக்கு வேறு உணவு சமைக்கத் தெரியாது போய் விட்டதுபோலும்! அந்தவெண்ணெய் உண்டே உயிர்கள் எல்லாம் வாழ்ந்திருக்கின்றன. வெண்ணெய் உண்டவர்கள் விக்கிக்கொள்ளாமல் இருக்கக் காமதேனுவே தேனுக ஒரு தீர்த்தத்தையும் உருவாக்கி யிருக்கிறது. இத்தனை விஷயங்களையும் சொல்கிறது ஒரு பாட்டு.

**பூத்திட உதித்த சராசரம் அனைத்தும்**
**பொசித்திட உள்ளிடை தெரிந்து**
**நித்தனார் சடில நிருமலன் உறையும்**
**நீள் திருக்கோயில் உத்திரத்தில்**
**மீத்திகழ் அமுதம் தானெனத் திரண்ட**
**வெண்ணெய் மால்வரை எனவிருந்துத்**
**தீர்த்தம் ஒன்று அதன் கீழ்பால் வகுத்தது**
**அத்தீர்த்தமும் தேனுமாதீர்த்தம்**

நாமும் வெண்ணெயையும் தேனையும் நினைத்துச் சப்புக் கொட்டிக்கொண்டே திரும்பலாம். இன்னும் அவகாசத்தோடு கரூர் செல்கிறவர்கள், பக்கத்திலுள்ள நெரூர் சென்று அங்குள்ள சதாசிவப் பிரம்மேந்திரர் சமாதிக்கும் வணக்கம் செலுத்திவிட்டு வரலாம்.

# சோற்றுச் சுமை

## ஜெயகாந்தன்



எலெக்டிரிக் கம்பெனிக்காரர் வீட்டு அம்மாளைத்தான் அவள் பெரிசாக நம்பியிருந்தாள். வீட்டு அம்மாவின் கையிலிருந்து சாப்பாட்டுக் 'காரியர்' ஆண்டாளுவின் கைக்கு மாறும்போதே, தயவை நாடிக் குழையும் புன்சிரிப்போடு, முக பாவத்தினாலேயே ''என்ன வேணும் ஆண்டாளு?'' என்று வீட்டு அம்மாளைக் கேட்க வைத்துவிட்டது ஒரு வெற்றிதான். ஆண்டாளுவின் சிரிப்பே அப்படி. அவள் சாதாரணமாய்ச் சிரித்தால் கூட வேண்டுவோர் வேண்டியபடி அர்த்தம் கற்பித்துக் கொள்ளலாம். அந்தச் சிரிப்பில் சிக்கிக்கொண்டு எலெக்டிரிக் கடைக்கார நாயுடு தவிக்கிற தவிப்பைப் பார்க்க வேண்டுமே...இத்தனைக்கும் முப்பது வயதேயுள்ள நாயுடுவின் மனைவியைவிட ஐந்தாறு வயது மூத்தவளாகவே இருப்பாள் ஆண்டாளு. மூன்று நாலு குழந்தைகளுக்குத் தாயாகி வற்றிப்போன உடல்தான் என்றாலும் ஆண்டாளுவின் முகத்தில் அப்படி ஒரு வாகு....முகராசி என்றுதான் சொல்ல வேண்டும். வீட்டுக்கார அம்மாளிடம் என்னவோ கேட்கத் தயங்கித் தயங்கிக் குழையும்போது அவள் முகம்தான் என்னமாய்க் கூசுகிறது.

யாசகமா கேட்கிறாள், கடன்தானே? அதுவும் முன்பணமாகத்தானே கேட்கிறாள். இதிலென்ன வெட்கம்?...

''ஒரு அஞ்சு ரூபா பணம் வேணும்மா; என் பையனுக்குப் பரீட்சை எழுதப் பணம் கட்டணும்.'' கேட்கப் பிறந்த வெட்கத்தைவிட, தன் மகன் படிக்கிற விஷயத்தை, அவன் பணம் கட்டிப் பரீட்சை எழுதப் போகும் விஷயத்தைச் சொல்லப் பிறந்த வெட்கம்தான் அதிகம்.

''அடடே! உனக்கு அவ்வளவு பெரிய மகன் இருக்கானா? அது என்ன பரீட்சை, அஞ்சு ரூபா கட்டி எழுதறது?......''

''என்னமோ 'எ. ஸெல்ஸி'யாம். அடுத்த செவ்வாய்க்கெழமைக்குள்ளே கட்டணுமாம். இல்லாட்டி படிச்ச படிப்பெல்லாம் வீணாப் பூடும்...நானும் எம்மால் கஷ்டப்பட்டுப் புஸ்தகமும் நோட்டும் வாங்கிக் குடுத்துடறேன். அந்த மனுஷன்-அதான் எங்க ஊட்டுக்காருக்கு அவன் படிக்கறதிலே கொஞ்சம்கூட இஷ்டம் இல்லே. நேத்துக்கூட, இவன் படிச்சி என்னத்தைக் கிழிக்கப்போறான், எங்கூடப் பட்டறைக்கு அனுப்பு. தெனம் எட்டணா கூலி கெடைக்கும்'னு. எனக்குக் கெட்ட கோவம் வந்திடுச்சி. 'எல்லாம் உன்னை மாதிரியும் என்னை மாதிரியும் இருந்தா ஒலகம் உருப்பட்ட மாதிரிதான்னு' நெனைச்சிக்கிட்டேன். ஆனா கண்டிஷனா சொல்லிட்டேன். 'இந்தா பாரு. பையன் படிப்பு விசயத்திலே நீ தலையிடாதே, அது எம் பொறுப்புன்னு. 'பின்னே என்னம்மா வயசு பதிமூணு ஆவுது. அவன் என்ன வேலே செய்வான், வேலே? இந்தக் காப்பிரேசன் இஸ்கூல்லே தான் படிக்கிறான். நல்லாப் படிக்கிறானுங்களாம். அந்த வாத்தியாரையாவைப் பார்க்கும் போதெல்லாம் நான் கேட்டுக்கறது. எங்க ஊட்டுக்கார மனுஷனுக்கு இருக்கிற பிச்சைக்காரப் புத்தியிலே இன்னக்கி எட்டணா கெடச்சாப்போதும்னு நெனக்கிறாரு. அவனைப் புஸ்தகமும் கையுமாப் பாத்தாலே அவருக்குப் புடிக்கிறதில்லே. 'ஏன்டா அதைக் கட்டிக்கிட்டு அழுவறே? என் வயித்திலே பொறந்த உனக்குப் படிப்பு எங்கே ஏறப்போவுது?'ன்னு சொல்றாரு.''

''படிக்க வெச்சா செலவுக்கும் பணத்துக்கும் என்ன பண்றதுன்னு சொல்லுவாரு போல இருக்கு. நியாயந்தானே?'' என்றாள் வீட்டுக்கார அம்மாள்.

''நீங்க என்னம்மா நாயம் சொல்றீங்க. என்னத்தைச் செலவு செய்யப் போறோம்? எப்படியோ கஷ்டப்பட்டு நாலு எழுத்துக் கத்துக் குடுத்தா அவனுக்கு நல்லதுன்னு நான் நெனச்சா, அந்த மனுஷன் 'அதெல்லாம் ஒண்ணும் நடக்காது. படிப்புபிடிப்புன்னு சுத்தி அடிக்கக் கடைசியிலே இரும்புப் பட்டறையிலே வந்து நிக்கவேண்டியதுதான்... கம்மா என்னமோ ஒங்க ஆத்தாளுக்குத்தான் பெரிச பெரிசா நெனைப்பு'ன்னு கலாட்டா பண்றாரு. அப்படியா சங்கதி? ஒங்கண்ணு முன்னாடியே எம் மவனைப் படிக்க வைச்சுக் காட்டறேன் பாரு. இந்த ஆண்டாளு உசிரு இருக்கிற வரைக்கும் எம் மவன் இரும்புப் பட்டறை மண்ணைக் கூட மிதிக்கக்கூடாதுன்னு முடிவு பண்ணிட்டேன். நம்ம பண்ற முடிவிலே என்ன இருக்கு? அந்த ஏழுமலையான் தயவு இருந்தாம் எல்லாம் நடக்கும்'' என்று சொன்னதும் வீட்டு அம்மாளும் ஆண்டாளோடு சேர்ந்து தலையாட்டினாள்.

''நேத்து ராத்திரி எம்மவன் சொன்னான், அஞ்சு ரூவா கட்டணும்னு. அப்பவே அம்மாவைத்தான் நெனச்சக்கிட்டேன்; மாசம் பொறக்கப் பத்து நாள் இருக்கே; வேறே எங்கே போறது நான்? ஒரு அஞ்சு ரூவா குடுத்தீங்கன்னு ரொம்பப் புண்ணியமா இருக்கும். மாசம் பொறந்ததும் சாப்பாட்டுக் கூலி மூணு ரூபாயைக் கழிச்சுக்கிட்டு ரெண்டு ரூவா இருப்பிக் குடுத்திடறேன்'' என்று பல்லைக் காட்டிக் கெஞ்சினாள் ஆண்டாளு.

ஏதோ கதை கேட்கிற சுவாரசியத்தில் ஆண்டாளுவின் பேச்சில் லயித்திருந்த அம்மாள், ரூபாய் என்ற சொல்லைக் கேட்டவுடன் வியவகார ஞானத்தோடு தன் வீட்டுப் பொருளாதார நிலையை வர்ணிக்க ஆரம்பித்தாள். கடைசியில், இல்லை என்று ஆயிற்று. அடுத்து யாரிடம் கேட்கலாம் என்ற நினைவோடு ஆண்டாளு சாப்பாட்டுக் கூடையைத் தலைமீது வைத்துக் கொண்டு தெருவில் இறங்கி நடந்தாள். தருவார்கள் என்று நம்பிய இடமே பொய்த்துவிட்டது. இனி யாரை நம்புவது?

அந்தத் தெருவில அவள் சாபபாடு எடுக்குமிடம் இன்னும் ஐந்து வீடுகள் இருக்கின்றன. ஆனால் அங்கெல்லாம் எப்படிக் கிடைக்கும்? அதெல்லாம் அனேகமாகக் கூலிக்காரக் குடும்பங்கள். அவள் சாப்பாடு எடுக்கும் வீடுகளிலேயே கொஞ்சம் பசையுள்ள இடம் இந்த எலெக்டிரிக் கம்பெனிக்காரர் வீடுதான். கடைக்கார நாயுடுவுக்கு ஆண்டாளுவின் சிரிப்பில் ஒரு தனி மயக்கம். அவளைப் பார்க்கும் போதெல்லாம் நாயுடுவின் கண்களில் கிறக்கம் சுழல்வது அவளுக்கும்தெரியும். பதிலுக்குத் தன் வழக்கமான சிரிப்பைத்தான் அள்ளி வீசுவாள் ஆண்டாளு. 'நாயுடுவிடம் கேட்டால் நிச்சயம் அஞ்சுரூபாய் கிடைக்கும். சீ, அந்த ஆள் ஏதாவது தப்பா நெனச்சிகிட்டா?...அது அசிங்கம்! கேட்கக் கூடாது' என்ற மன உளைச்சலோடு ஒவ்வொரு வீடாய்ச் சென்று சோற்றுச் சுமையை ஏற்றிக் கொண்டு ஒரு மைலுக்கு அப்பால் இருக்கும் டவுனை நோக்கி நடந்தாள் ஆண்டாளு.

போகும் வழியில் ஒரு தண்ணீர்ப் பந்தல். அங்கு வந்தவுடன் தலையில் கனக்கும் பாரத்தைச் சற்று இறக்கிவைத்து, தாகத்துக்குத் தண்ணீர் குடிப்பாள். இடுப்பிலிருக்கும் சுருக்குப் பையைத் திறந்து, வெட்டுப் பாக்கோடு, பாதி வெற்றிலைச் சருகையும் சுண்ணும்பைத் தடவி வாயில் அடைத்துக் கொள்வாள். கூடையைத் தூக்கித் தலைமீது வைத்துக் கொள்வதற்குமுன் துண்டுப் புகையிலையில் கொஞ்சம் கிருகிக் கையில் வைத்துக் கொண்டு, மீண்டும் நடக்கும்போது, வழியில் குறிக்கிடும் அந்த மணிக்கூண்டில் பன்னிரண்டு மணி அடிக்கும். அதற்காகத்தான் காத்திருந்தவள் போன்று கையிலிருக்கும் துண்டுப் புகையிலையை வாயில் திணித்துக் கொள்வாள் ஆண்டாளு. அதன் பிறகு நடையல்ல; ஓட்டம்தான்.

அடுத்த கால்மணி நேரத்துக்குள், அவள் வருகை நோக்கிக் காத்திருக்கும் வயிறுகளுக்கு உணவு வழங்கிவிடுவாள். முதலில் அந்த அச்சாபீஸ் பியூனுக்கு ஒரு சோற்று மூட்டை, பாட்டிலில் தண்ணீர்; கொஞ்சம் சுமை குறையும். அடுத்தது கார் ரிப்பேர் ஷாப்பில் இருக்கும் மெக்கானிக்குக்கு ஓர் அலுமினியம் காரியர். அப்புறம் அந்த எலெக்டிரிக் கம்பெனி நாயுடு .. 'மனுசன் எவ்வளவு சாப்பிடுவாரோ, எத்தா பெரிய காரியர்!'—புதிய எவர் சில்வர்—அதை இறக்கிட்டால் பாதி பாரம் குறையும். 'ஈ ஈ' யென்று பல்லைக் காட்டியவாறே எழுந்து வருவார் நாயுடு. பதிலுக்குச் சிரிப்பாளே ஒழிய, அவர் கையில் காரியரைக் கொடுக்கமாட்டாள் ஆண்டாளு. கொடுக்கக் கூடாது என்பது அல்ல! அவசரம். இன்னும் இரண்டு வயிறுகள் இருக்கின்றனவே. எலெக்டிரிக் கம்பெனி வாசலில் கூடையை இறக்கி வைத்து, அதிலிருக்கும் வேறு இரண்டு பித்தளைக் காரியர்களை மட்டும் கையில் எடுத்துக் கொண்டு பக்கத்திலிருக்கும் ஒரு பத்திரிகை ஆபீசுக்கு ஓடுவாள். அங்கே இரண்டு கம்பாஸிட்டர் வயிறுகள் காத்திருக்கும்.

அந்தப் பத்திரிகை ஆபீஸின் முன்புறம் பெரிய காம்பவுண்ட். மரங்கள் நிறைந்து நிழல் பரப்பும். சாப்பாட்டுக் காரியர்களை அந்தக் கம்பாஸிட்டர்களிடம் கொடுத்தவுடன், காம்பவுண்டிலிருக்கும் குழாயடிக்குச் சென்று தண்ணீர்த் தொட்டியருகே ஓடும் கால்வாயில் வெற்றிலைச் சாற்றைத் துப்புவாள். தண்ணீரை அள்ளி ஊற்றி முகம் கழுவி, இரண்டு கை அள்ளிக் குடிப்பாள். ஓடிவந்த களைப்புத் தீர மரத்தடியில் சாய்ந்து கிடப்பாள். தூக்கம் மாதிரி, மயக்கம் கண்களைக் கிறக்கும். சுகமாக அடிக்கும் காற்று பசியையும் களைப்பையும் மறக்கடிக்கும். பத்து நிமிஷங்கள் என்றாலும் பரிபூரண ஓய்வு. பத்து நிமிஷங்களுக்குப் பிறகு அந்தக் கம்பாஸிட்டர்கள் இருவரும் சாப்பாட்டுக் காரியரைக் கொண்டுவந்து வைத்து எழுப்புவார்கள். கொண்டுவரும் போது கட்டித் தொங்கியிருந்த இலைச் சுருளை இழந்து விட்ட காரியர்களின் கனம் குறைந்திருக்கும். அவற்றைத் தூக்கிக் கொண்டு எலெக்டிரிக் கம்பெனிக்கு வருவாள். அந்தப் புத்தம் புது எவர்சில்வர் காரியர் இலையில்லாமல் கனம் குறைந்திருக்கும். நாயுடு பல்லெல்லாம் தெரிய வெற்றிலை குதப்பும் வாயோடு சிரித்தபடி கேட்பார்:

"ஆண்டாளு, நீ சாப்பிட்டியா?"

ஆமாம், தனக்கும் வயிறு இருக்கிறது என்ற நினைவு அவளுக்கும் வரும். வயிற்றின் நினைவும், பசியென்ற உணர்வும் வந்து விட்டால் போதுமா?...அவள் கொண்டு வந்ததைச் சாப்பிட்ட வயிறுகளுக்கெல்லாம் இதயமும் உண்டு. யாரும் காரியரைக் காலியாக்கித் தருவதில்லை. அவளுக்காக ஒவ்வொரு பாத்திரத்திலும் கொஞ்சம் உணவு மீத்து வைத்திருக்கிறார்கள். தனக்குக் கிடைத்ததைத் தான் மட்டும் சாப்பிட்டுவிட முடியுமா அவள்? அங்கே குடிசையில் இந்த மிச்சத்தை எதிர்நோக்கி இரண்டு வயிறுகள் காத்துக் கிடக்குமே...

காலையில் சாப்பிட்டு மீந்த பழைய சோற்றைப் பட்டறையிலிருந்து திரும்பிய அவள் புருஷனும், பள்ளியிலிருந்து வரும் அவள் மகனும் மத்தியானம் சாப்பிட்டுவிட்டுப் போய் விடுவார்கள். பையனுக்கு இளைய இரண்டு பெண் குழந்தைகளும் மத்தியானத்தில் அண்ணனும் அப்பனும் சாப்பிடும் போது வடித்துத் 'தரும் நீத்தண்ணியைக் குடித்து விட்டுத் தாயின் வருகைக்காகக் காத்திருப்பார்கள். சுமார் இரண்டு மணிக்குத் திரும்பும் ஆண்டாளு தெருவில் விளையாடிக்கொண்டிருக்கும் தனது பெண்களை அழைத்து அவர்களோடு' காரியரில் மீந்திருக்கும் உணவைப் பங்கிட்டுக் கொள்வாள்.

''ஆண்டாளு, நீ சாப்பிட்டியா ?'' என்ற நாயுடுவின் கேள்விக்கு, 'ஆச்சுங்க' என்று புன்முறுவலோடு பதில் சொல்லிவிட்டு அந்தப் பக்கம் கொஞ்சம் நகர்ந்து சென்று, வெட்டுப் பாக்குத் துண்டு ஒன்றோடு பாதி வெற்றிலைச் சருகுடன் சுண்ணாம்பையும் சேர்த்து வாயில் கருட்டி அடைத்து ஒரு துண்டு புகையிலையையும் அதன் மேல் தள்ளிவிட்டுப் பசிக்கு மாற்று கண்டுவிடுவாள் ஆண்டாளு.

அவள் மனத்தில் பசியோடு காத்திருக்கும் அந்தப் பெண் குழந்தைகளின் நினைவுதான் நிலைத்திருக்கும். வரும்போது வந்தது போல் போகும் போதும் அதே ஓட்டம் தான்.

ஓ! அவளை நம்பித்தான் எத்தனை வயிறுகள்!



ஆனால், ஆண்டாளு இன்று ஒவ்வொரு இடத்திலும் காலிக் காரியரை வாங்குகையில் தயங்கித் தயங்கி நின்றாள். அவளுக்கு இன்று பசியில்லை; பசியோடு வீட்டில் காத்துக் கிடக்கும் அந்தக் குழந்தைகளின் நினைவும் இல்லை.

'அஞ்சு ரூபா!' ஆம்; பையனுக்குப் பரீட்சைக்குக்கட்டப் பணம்..... அது கிடைக்காவிட்டால் அவன் படித்ததெல்லாம் வீணாகிவிடும். அஞ்சு ரூபாய் கிடைத்துப் பரீட்சைக்குப் பணம் கட்டி விட்டால்?... இன்னும் இரண்டு வருஷங்கள் கழித்துப் பத்தாவது படிச்சிடுவான். அப்புறம் எல்லாரையும் போல் எங்காவது நல்ல உத்தியோகம் கிடைக்கும்... அவன் நாலு எழுத்துப் படிக்கத் தெரிந்த படித்த மனுஷனாகி விடுவான். இந்த ஐந்து ரூபாய் கட்டாவிட்டால்.... அவன் அப்பன் சொல்லுவது போல் சுற்றி அடித்துப் பட்டறைக்குத்தான் வந்து நிற்பான்.

அவள் அந்தக் கம்பாஸிடர்களிடம் அட்வான்ஸாகப் பணம் கேட்டாள். பாவம், அவர்களிடத்தில் நிஜமாகவே இல்லை.

எலெக்டிரிக் கடை நாயுடுவிடம் கேட்டால் கிடைக்கும். அவளுக்குக் கேட்க விருப்பமில்லை. அந்த மனுஷனின் பார்வையே அவளைப் பிய்த்துத் தின்னுவது போல் இருக்கும் போது... 'சீ! அசிங்கம். அந்த ஆள் வேறெதாவது நெனச்சிக்கிட்டா? அந்த நெனைப்பை வளர்க்கிற மாதிரி, நான் காசு கேட்கிறதாவது?' என்று நினைத்த ஆண்டாளு — நாயுடுவிடம் ஒன்றும் கேட்காமல், வழக்கமாக உதிர்க்கும் புன்னகைகூடக் காட்டாமல் சுபாவத்துக்கு விரோதமாய்—மௌனமாய்க் கூடையைச் சுமந்து கொண்டு செல்கிறாள். அப்புறம் கிடைக்காத இடமாகிய மோட்டார் மெக்கானிக்கிடமும், அந்த அச்சாபீஸ் பையனிடமும் கேட்கிறாள். கிடைக்கவில்லை.

'அந்த மனுசன் சொன்னமாதிரி எம் மவனுக்கு இரும்புப் பட்டறைதான் கதியா?' என்று நினைத்த போது ஆண்டாளுவின் கண்கள் கலங்குகின்றன.

அவள் மெள்ள நடந்து வண்டிப்பேட்டை யருகே வரும்போது 'டக்'கென்று அந்த யோசனை தோன்றுகிறது.

அங்கே...

ஆண்டாளுவைப் போன்ற சோற்றுமூட்டை சுமக்கும் பல பெண்கள்—காரியரில் மீந்த சோற்றைக் கை வண்டிக்காரர்களிடமும் கூலிக்காரர்களிடமும் விற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஆண்டாளு இதுவரை சோற்றை விற்றதில்லை. விற்றால் கௌரவம் குறைந்து விடும் என்பதற்காக அல்ல; அந்தச் சோற்றுக்கு 'விலை' வீட்டிலேயேஇருந்ததனால்தான். ஆனால் இன்று அவளுக்குப் பணம் தேவை.

'இன்னும் எத்தினி நாளு இருக்கு, பணம் கட்ட? இன்னிக்குச் செவ்வாயா? செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி — திங்கட்கிழமையும் சேர்த்து ஆறு நாளா? தெனம் எட்டணாக் கெடைச்சாக்கூட மூணு ரூபாய் ஆகும். அப்புறம் ரெண்டு ரூபா எங்கனாச்சும் சமாளிச்சுடக் கூடாதா? அடுத்த செவ்வாய்க் கெழமைக்குள்ளதானே கட்டணும்?'

ஆண்டாளு வண்டிப்பேட்டையில் கூடையை இறக்குகிறாள். சாப்பாட்டுக் காரியர்களைத் திறக்கிறாள். ஐந்து பாத்திரங்களிலும் சோறும் கறியும் குழம்பும் மீந்திருக்கின்றன. ஐந்தில் இருந்த சோற்றையும் எடுத்து நிரவிமூன்றாக்குகிறாள். கறியையும் குழம்பையும் அதேபோல் கூறிடுகிறாள்.

"ஓடியா...ஓடியா... ஓர் ஆளுச் சாப்பாடு நாலணாதான்'' என்று அங்கிருந்த சாப்பாட்டுக்காரிகள் கூவுவதைப் போல் அவளும் தன் வாழ்க்கையிலேயே முதல் முறையாகக் கூவுகிறாள்.

கட்டைக் குட்டையாய் ஓர் ஆசாமி முண்டாசைப் பிரித்து உதறி முகத்தைத் துடைத்துக் கொண்டே அவள் எதிரில் வந்து உட்காருகிறான். பெரிய பிசினஸ் நோட்டம் போல ஒரு பாத்திரத்தைச் சாய்த்து அதிலிருக்கும் சாதத்தின் அளவைப் பார்க்கிறான்.

"இன்னாது, நாலணாவா? ஏம்மா ஒனக்கு இம்மா ஆசை? இத்தினூண்டு தானே இருக்கு! உம்...'' என்று முகவாயைச் சொறிந்து கொண்டே மடியிலிருந்த சில்லறையை எண்ணுகிறான்.

"இந்தாம்மா, நான் ஒண்டியாளா லாரியிலேயிருந்து இருபது மூட்டை அரிசியை எறக்கிப்பிட்டு வந்திருக்கேன். இன்னும் கூலி வாங்கல்லே. பசின்னா சாதாரணப் பசி இல்லே. காசிருந்தா மூணுத்தையும் வாங்கிடுவேன்'' என்கிறான் அந்த ஆள். அவனுக்கு மூச்சு இறைக்கிறது. உடம்பெல்லாம் வியர்வை ஆறாய்ப் பெருகி ஓடுகிறது. கடின உழைப்பின் வேகத்தால் தோளிலும் முதுகிலும் — தசைகள் உருண்டு திரண்டிருந்தும் — ரத்த ஓட்டத்தின் அதிர்ச்சியில் துடிக்கின்றன. அவன் வயிறு ஒட்டி, மடிப்பு மடிப்பாய்ச் சுருங்கிச் சுருக்கங்களின் இடை வெளியில் வியர்வை கசிந்து கசிந்து ஒழுக, ஒவ்வொரு கவளத்துக்கும் குழிந்து குழிந்து உயர்கிறது. அவனைப் பார்க்கும்போது, அவன் கண்களில் மின்னும் 'சாப்பிடும் வெறி'யைக் காணும்போது இந்தச்சாப்பாட்டைச் சும்மா கூடக் கொடுத்து விடலாம் என்று தோன்றுகிறது ஆண்டாளுக்கு. ஆனால் அவள் மகனுக்குப் பரீட்சைக்குக் கட்ட பணம்... அந்த நினைப்பு வந்தவுடனே வியாபார முடுக்குடன் சொல்கிறாள் ஆண்டாளு:

"இஷ்டமிருந்தா எடு—நாலணாத்தான்.''

"அட போம்மா! பசிக்குதுன்னு வந்தா பெரிசா பேரம் பேசறியே! இந்தா, சில்லறை இவ்வளவுதான் இருக்கு. புடி!'' என்று அவள் கையில் காசைப் போட்டு விட்டுக் காரியரில் இருந்த சோற்றை இழுத்து வைத்துக் கொண்டு அள்ளி அள்ளி விழுங்குகிறான் அந்த ஆள்.

ஆண்டாளு கையிலிருந்த காசை எண்ணிப் பார்க்கிறாள்.

'மூணணா—சரி போகட்டும்.'

அன்று சோறு விற்ற பணம் ஒன்பதணா.

* * *

தாயின் வரவுக்காக வீட்டில் காத்துக் கிடந்த குழந்தைகளுக்குச் சோறில்லை. ஓரணாவுக்கு இரண்டு லாலாக் கடை பகடா பொட்டணங்களை வாங்கிக் கொண்டு வந்து குழந்தைகளுக்குக் கொடுத்தாள். அவளுக்கு? வெட்டுப் பாக்கும், வெற்றிலைச் சருகும் துண்டு புகையிலையும்தான்.

பையனின் பரீட்சைக்காக அன்றையக் கணக்கில் எட்டணா சேர்ந்தது. எப்படியும் சேர்த்து விடலாம் என்ற நம்பிக்கை ஆண்டாளுக்கு.

இரவில் புருஷன் கொண்டு வந்த பன்னிரண்டணாவில் அரிசி வாங்கிச் சோறு பொங்கி, குழம்பு காய்ச்சி வைத்தாள். குழந்தைகளுக்கும் புருஷனுக்கும் சோறு போட்டு விட்டு, மீதியைத் தண்ணீர் ஊற்றி வைத்து விட்டுப் படுத்துக் கொண்டாள்.

அவளுக்குப் பசி இல்லையாம். இரவு வெகு நேரத்துக்குப் பிறகு சோற்றுப் பானையைப் போய்த் திறந்து பார்த்தாள். பசி இருந்தும் சாப்பிட மனம் வரவில்லை, மறு நாள் மத்தியானமும் அவள் தன் குழந்தைகளுக்குச்






அறுபது ஸ்பூன்கள் = அறுபது கோப்பைகள்

Stanes

தூய்மையான திடீர் காபி

எங்கும் கிடைக்கும்

சோறு கொண்டு வந்து தரப் போவ இல்லே. அப்பொழுது பாவம் அந்தப் பெண் குழந்தைகள் என்ன செய்யும் ?

சோற்றுப் பானையை மூடி வைத்து விட்டு, அடுப்பருகே இருந்த 'வாயோரம் உடைந்த' சட்டியில் ஆடை கட்டிக் கிடந்த வடித்த கஞ்சியை இறுத்து உப்புப் போட்டுக் கலக்கிக் குடித்தாள். பசிக்கு என்னவாக இருந்தால் என்ன ? குடித்தபின் பெரிசாக இரண்டு ஏப்பம் விட்டாள். பசி தீர்ந்த திருப்தி. பிறகு தன் சுருக்குப் பையைத் திறந்து வெற்றிலே போட்டுக் கொண்டாள்.

* * *

மறுநாள் காலே. வேலேக்குப் போகும் புருஷனிடமும் பையனிடமும் சொன்னுள் ஆண்டாளு:

" இப்பல்லாம் எங்கேயும் சோறே மீற மாட்டேங்குது. அதனுலே கொஞ்சம் அரிசி தாஸ்தி போட்டுத்தான் வடிச்சேன். மத்தியா னத்துக்கு நீங்க பழையது துன்ன வரும்போது அந்தப் பசங்களுக்கும் ஒரு பிடி வெச்சுத் தண்ணி ஊத்துங்க" என்று தான் சாப்பிடா மல் மீந்த சாதத்துக்கு ஒரு பொய்க் காரண மும் சொல்லி அந்தப் பெண் குழந்தைகளின் வயிற்றுக்கும் வழிபண்ணினுள்.

நீத்தண்ணியைக் குடித்து விட்டுப் புருஷன் வேலேக்குப் போனபின் பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த மகனே, "ராசையா ! ராசையா !" என்று அன்போடு அழைத்தாள். அருகில் வந்த மகனின் கையைப் பிடித்துக் கொண்டு, "நல்லாப் படிக்கணும் கண்ணு. உனக்கு வர்ற செவ்வாக் கிழமைதானே பணம் கட்டணும் ? நான் எந்தப் பாடாவது பட்டுத் தர்றேன்.... நீ நல்லாப் படிக்கிறியா ?" என்றுள்.

"நீ வேணுமாஞ பாரேன். நான் எவ்வளவு மார்க்கு வாங்கறேன்னு..." என்று பெருமை யாகப் பேசினுன் பையன்.

" எல்லாம் அந்த ஏழுமலேயான் கிருபை.." என்று மகனின் நெற்றியில் முத்தம் கொடு கிருள் ஆண்டாளு.

பையனும் பள்ளிக்கூடம் போனபின்பு பத்து மணிக்குத் தன் கூடையைத் தூக்கிக் கொண்டு தொழிலுக்குப் புறப்பட்டாள்.

இன்று அவள் யாரிடமும் பணம் கேட்க வில்லே. சோற்றுச் சுமையைத் தலேயில் தூக்கிக் கொண்டு ஓடித் தண்ணீர் பந்தலருகே இறக்கி விட்டு, ஒரு குவளேக்கு நாலு குவளே நீர் மோரைக் குடித்துப் பசித்த வயிற்றை நிரப்பிக் கொண்டாள். பிறகு வெற்றிலேப் பாக்கு புகையிலேச் சுகத்தில் இரண்டு நாள் பட்டினி யையும் மறந்து தெம்புடன்ஓடி அவள் வருகை நோக்கிக் காத்துக் கிடக்கும் வயிறுகளுக்கு உணவு வழங்கினுள். மீந்த சோற்றுடன் வண்டிப் பேட்டைக்கு வந்து, கூறு போட்டு விற்றுள். இன்றும் எட்டணு கிடைத்தது.

அவள் பையனுக்கு, பரீட்சைக்காகக் கட்டும் பணத்தில் ஒரு ரூபாய் சேர்ந்து விட்டது.

அவளுக்கு, இரவில் கஞ்சித்தண்ணி; பகலில் நீர்மோர்—வெற்றிலேப் பாக்கோடு சேர்ந்த புகையிலேச் சாற்றின் பசி மறக்கும் போதை ! மகன் படித்துத் தேறப் போகிறுன் என்ற ஆனந்தக் கனவு, போதாதா ?

* * *

மறுவாரம், திங்கட்கிழமை இரவெல்லாம் ஆண்டாளுக்குத் தூக்கம் பிடிக்க வில்லே. ஞாயிற்றுக்கிழமை ஒருநாள் தவிர மற்ற நாட்களில் சோறு விற்றுச் சேர்த்த பணம், இரண்டரை ரூபாய் அவளது சுருக்குப் பையில் இருக்கிறது. இன்னும் இரண்டரை ரூபாய் வேண்டும். மறுநாளும் விற்றுல் ஓர் எட்டணு தேறும்...அப்புறம் இரண்டு ரூபாய்களுக்கு என்ன செய்வது ?...

" ராசையா ...ராசையா ..." என்று கூப் பிட்டாள் : அவன் தூங்கிவிட்டான். பக் கத்தில் போய்ப் புரட்டி எழுப்பினுள்.

" ராசையா.........பரீட்சைக்குப் பணம் நாளேக்கு மத்தியானத்துக்கு மேலே கட்டலாமா ?..."

' பரீட்சை ' என்றதும் ராசையா விழித்துக் கொண்டான் : " நாளேக்கி...மத்தியானமா? உம்...சாயங்காலம் அஞ்சு மணிக்குள்ளே கட்டிடணும்......"

" சரி, நீ படுத்துக்க...நாளேக்கி மத்தி யானம் மூணு மணிக்குள்ளே பள்ளிக்கூடத் துலே கொண்ணுந்து குடுத்துவிடுகிறேன் " என்று சொல்லிவிட்டு அவளும் படுத்துக் கொண்டாள்.

" ஆண்டாளு......ஆண்டாளு......" என்று அவள் புருஷன் அழைத்தான்.

" என்ன ?"

" ராவு பகலா ஒனக்கு இதே நெனப்புத் தானு ? இந்தக் காலத்திலே படிப்புக்கு மதிப்பு இல்லேடி...படிச்சவன் எல்லாம் இன்னுத்தெ வாரிக் கட்டிக்கிட்டான் ?"

"படிக்காம நீ இன்னுத்தெ வாரிப்புட்டே?"

" ஏன் கோவிச்சுக்கறே ? அவனுக்கு நாளேக் குப் பணம்கட்ட வழி இல்லியேன்னு வருத்தப் பட்டுக்கிட்டு இருக்கியே... ...அதுக்குத்தான் சொல்றேன். நாளேக்கே எங்கூடப் பட்ட றைக்கு அனுப்பு. தெனம் ஒரு ரூபாய் கூலி வாங்கித் தர்றேன்."

" அட சீ, வாயை மூடு...ஒம்புத்தியும் நீயும் ?" என்று எரிந்து விழுந்தாள் ஆண்டாளு. அதன் பிறகு அவள் புருஷன் வாயை மூடிக் கொண்டான்.

வெகு நேர மௌனத்துக்குப் பின் ஆண் டாளு புரண்டு படுத்தாள். அப்பொழுது மறு படியும் அவள் புருஷன் கரகரத்த மெல்லிய குரலில் ரகசியமாக அழைத்தான்.

" ஆண்டாளு...ஆண்டாளு..."

" உம்..."

" நீ ஏன் சாப்பிடலே?..."

" சாப்பிட்டேனே..."

" பொய்யி...கஞ்சித் தண்ணி இல்லே குடிச்சே ?"

" ஆமா, கஞ்சித்தண்ணி குடிச்சா என்ன வாம் ...அதுதான் சத்து..."

" ஆமா...ஆண்டாளு நீ ரொம்ப எளேச்சிப் பூட்டே..." என்றவாறு தூரத்திலிருந்து எட்டி, இருளில் அவள் தோளேப் பற்றினுன் அவன். அவள் பதில் ஒன்றும் சொல்லவில்லே. அவன் அவள் அருகே நெருங்கி வந்து

அவன் தலையை வருடியவாறு ஆதரவோடு சொன்னாள்: "நீ வயித்துக்கு நல்லா சாப்பிடணும்...பின்னே எதுக்காக நாம்ப இவ்வளவு கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கிறோம்...?"

"அதுதான் சாப்பிடறோமே, போதாதா?" என்று ஏதோ சுருக்கென்று சொல்லவந்தவன், இந்தச் சமயத்தில் தன் குழந்தைகளைப் பற்றி அவளிடத்தில் நல்லதனமாகப் பேசி உணர்த்த வேண்டும் என்ற நினைவில், "நான் ஒண்ணு சொல்லுவேன் கேப்பியா?" என்றான்.

"உம்...!" என்றாள் கரகரத்த குரலில். அவள் பேச்சில் அவனுக்கு இப்பொழுது கவனமில்லை.

"திடீர்னு நான் செத்துப் போயிட்டேன்னு இந்த மூணு புள்ளைங்களையும் வச்சிக்கிட்டு நீ என்ன பண்ணுவே...அதுக்குத்தான் சொல்றேன். எப்படியாவது கஷ்டப்பட்டு ராசையாவைப் படிக்க வெச்சிட்டா, அவன் காப்பாத்திடுவான், மத்த கொழந்தைங்களை..." என்று நெஞ்சடைக்க உருகிச் சொன்னான் ஆண்டாளு.

"அதெல்லாம் நீ ஒண்ணும் சாகமாட்டே" என்று அவன் வாயைப் பொத்தினாள் அவள்.

"செத்தாத்தான் உனக்கென்ன கவலையா?" என்று விரக்தியோடு சொன்னான் ஆண்டாளு. அவள் அதற்குப் பதில் ஒன்றும் சொல்லும் நிலையில் இல்லை. அவள்தான் வேறு என்ன செய்ய முடியும்?...

இந்தக் குழந்தைகளுக்கெல்லாம் அவள் தாயானதே, இவனுக்கு மனைவியானதினால் தானே! அவனுடைய பசியை அவனால் தெரிந்துகொள்ள முடியாவிட்டாலும், அவளுடைய பசி அவனுக்குத் தெரிந்தது.

* * *

பொழுது விடிந்து வெகு நேரமாகியும் ஆண்டாளு படுத்துக் கிடந்தாள்; புருஷன் வேலைக்குப் போனபோதும் அவள் விழிக்கவில்லை. பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்ட அவள் மகன் சொல்லிக்கொண்டு போக எழுப்பினான்.

"அம்மா...என்ன இப்படித் தூங்கறே, இன்னைக்கி? எழுந்திரு" என்றதும் எழுந்து உட்கார்ந்து கண்களைக் கசக்கினாள்.

"நான் பள்ளிக்கூடம் போறேன். மத்தியானம் மறக்காம கொண்ணாந்து குடுத்திடு... இன்னைக்கித்தான் கடைசி நாள்."

"மறப்பேனா? இன்னைக்கித்தான் கடைசி நாள்" என்று எழுந்தாள் ஆண்டாளு. தலை சுற்றியது; சுவரைப் பிடித்துக் கொண்டு நின்றாள். கண்கள் எரிந்தன. உடம்பே ஒரு சுமையாய், தலையே ஒரு பாரமாய்க் கனத்து ஆளைத் தள்ளியது.

"ஏம்மா ஒடம்பு என்ன பண்ணுது? திடீர்னு என்னவோ மாதிரி இருக்கியே" என்று பதறினான்.

"ஒண்ணுமில்லே, உனக்குப் பணம் கொண்டுவந்து குடுத்துட்டா எல்லாம் சரியாப் போயிடும். கையிலே மூணு ரூபா இருக்கு. இன்னும் ரெண்டு ரூபாய்க்கு என்ன பண்றதுன்னு தெரியலே..." என்று, இன்று விற்கப் போகும் சோற்றையும் சேர்த்துச் சொன்னாள் ஆண்டாளு.

"அம்மா, எப்படியாவது கேக்காதவங்களைக் கேட்டாவது கொண்டுவந்து கட்டிடு, அம்மா" என்று தன் தாயாரிடம் பரிதாபமாகக் கெஞ்சினான் பையன்.

"நீ பயப்படாதே. எப்படியாவது கொண்டுவந்து தார்றேன்" என்று தீர்மானமாகச் சொன்னாள் ஆண்டாளு. பையன் பள்ளிக்குப் போய்விட்டான்.

அவன் போன பிறகு வெகு நேரம் யோசித்தாள்:

'இன்னொரு தடவை எலெக்டிரிக் கம்பெனிக்கார வீட்டு அம்மாவையே கேட்டுப் பார்த்தா....ரெண்டு ரூபாதானே? எப்படியாவது நீங்கதான் தரணும்னு கெஞ்சிக் கேட்டா....இல்லாட்டி அந்தப் பத்திரிகை ஆபீஸில் வேலை செய்கிறவர்களிடம் காலில் விழுந்தாவது ஆளுக்கு ஒரு ரூபாய் வாங்கிக் கொடுக்கச் சொன்னால், அவர்கள் எங்கேயாவது வாங்கிக் கொடுப்பார்கள். ஏழை கஷ்டம் ஏழைகளுக்குத்தான் தெரியும். பையனுக்குப் பரீட்சைக்குக் கட்டறதுக்குன்னு கேட்போம். ஓர் அவசரத்துக்கு ரெண்டு ரூபா சமாளிக்க முடியாட்டி, இவங்களுக்குச் சோத்தைச் சுமந்துட்டு ஓடற தொழிலேத்தான் ஏன் செய்யணும்?' என்றெல்லாம் நினைத்தாள். இன்று எப்படியும் கிடைக்கும்

என்ற நம்பிக்கையுடன் கூடையைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டாள்.

* * *

எலெக்டிரிக் கம்பெனிக்கார வீட்டு அம்மா இன்றும் இல்லை என்று சொல்லி விட்டாள்.

'சீ! இதெல்லாம் மனுஷ ஜன்மமா? ரெண்டு ரூபாயா இவங்கிட்டே இல்லாமலா போகும்? இவபையன் பணம் கட்டிப் பரீட்சை எழுதறதாவதுன்னு இவளுக்குப் பொறுமை யாகக்கூட இருக்கும். அன்னைக்கே 'ஒனக்கு அவ்வளவு பெரிய பையன் இருக்கானா? அது என்ன பரீட்சை? அஞ்சு ரூபா கட்டி எழுதற பரீட்சை'ன்னு உதட்டைப் பிதுக்கிக்கிட்டுக் கேட்கும்போதே கவனிச்சேன்' என்ற நினைப் போடு சோற்றுக்கூடையைத் தூக்கிக்கொண்டு தெருவில் இறங்கி நடந்தாள் ஆண்டாளு.

'இன்னைக்கி என்ன ஒரு 'காரியரே' இப்படிக் கனைக்குது' அவள் கால்கள் பின்னுவது போல் தடுமாறி நடந்தாள். எப்படி எப்படியோ சமாளித்துக் கொண்டு ஒவ்வொரு வீடாய்ச் சென்று சோற்று மூட்டைகளை எடுத்துக்கொண்டு வரும்போது கடைசி வீட்டு அம்மாள் ஆண்டாளுவைப் பார்த்துப் பதறிப் போய், ''என்ன ஆண்டாளு! உடம்புக் கென்ன?'' என்று கேட்டாள். ''ஒண்ணு மில்லே!'' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டாள் ஆண்டாளு. அவள் போன பின்பு அவளுக்குப் பின்னால் இரண்டு பெண்கள் பேசிக்கொண்டது, பசி கிறுகிறுப்பில் அடைத் துப்போன அவள் செவிகளுக்குக் கூடக் கேட்டது: ''பாவம் எப்படி இருந்த பொம் பளே, எப்படி ஆயிப்போனா. ஒடம்புக்கு என்னவோ?....''

'ஹூம்....இன்னைக்கி எம் மவனுக்குப் பரீட்சைக்குப் பணத்தைக் கட்டிப்பிட்டு நாளையிலேருந்து மூணு வேளையும் சாப்பிட ஆரம்பிச்சேனா......அப்புறம் பாருங்க' என்று நினைத்துக் கொண்டாள் ஆண்டாளு.

போகிற வழியில் தண்ணீர்ப் பந்தலில் கூடையை இறக்கி வைத்துவிட்டு இரண்டு குவளை நீர்மோர் வாங்கிக் குடித்தாள். நீர் மோரைக் குடித்தவுடன் வயிற்றைப் புரட்டியது. வாயெல்லாம் உமிழ்நீர் சுரந்து குடல் புரண்டு ஓங்கரித்துக்கொண்டு வாந்தியெடுத் தாள். கண்கள் கலங்கி நீர் சொரிந்தன. அப்படியே சுவரில் சாய்ந்தபடியே உட்கார்ந்து விட்டாள். பக்கத்திலிருந்த இலந்தைப்பழம் விற்கும் கிழவி ஓடி வந்து முகத்தில் தண்ணீர் தெளித்து ஆசுவாசப்படுத்தினாள்.

கிழவி ரொம்ப அநுபவம் மிகுந்தவள். ''ஏம்மா பசி மயக்கமா? ஏதாவது சாப்பிட றயா?'' என்று கேட்டாள்.

''இல்லே, இல்லே. சாப்பிட்டேன், பாட்டி! இந்த வெயில் மயக்கம்தான்...''

''ஆமாண்டி அம்மா! வெயில்தான் என் னம்மா காயுது!'' என்று கிழவி காலத்தைப் பழித்துக் கொண்டே போனாள்.

''பாட்டி, கொஞ்சம் தூக்கிவிட்டுட்டுப் போறியா? கொஞ்சம் வெத்திலே போட்டுக் கறேன்'' என்று வெட்டுப்பாக்கோடு, ஒரு சருகு வெற்றிலையை வாயில் திணித்துக் கொண்டு, கையில் புகையிலையைத் திருகி எடுத்துக் கொண்டாள் ஆண்டாளு. கிழவி கூடையைத் தூக்கி விட்டாள் — அம்மாடி என்ன கனம்!

மெள்ள மெள்ள நடந்து மணிக்கூண்டின் அருகில் வரும்போது — மணி பன்னிரண்டு அடித்தது; அவள் புகையிலையை வாயில் போட்டுக் கொண்டு அவசரம் அவசரமாக ஓடினாள். உடம்பெல்லாம் வியர்வை ஆறாகப் பெருகி வழிந்தது. அவள் ஓடிக்கொண்டே யிருந்தாள். அதாவது அவள் ஓட முயன்று பரிதாபமாய் நடந்து கொண்டிருந்தாள். நெற்றியில் வழிந்த வியர்வை புருவத்தி லிருந்து கண்ணில் இறங்கியபோது, கண்ணை மூடினாள். கண் இருண்டது. பூமியிலிருந்து கிளம்பி எங்கோ பறப்பதுபோல....

அதன்பிறகு, அவளுக்கு ரொம்பச் சுகமாக இருந்தது: பத்திரிகை ஆபீஸ் காம்பவுண்டில் நிழல் பரப்பும் மரத்தடியில் குளுமையாக அடிக்கும் காற்றில் கண்களைக் கிறங்க வைக் குமே அந்தச் சுகம் போல, தூக்கம் வருவது போல....

மணிக்கூண்டு அருகே ஒரே கும்பல். சோற் றுக் கூடை விழுந்து டிபன்காரியர்களும் சோற்று மூட்டையும் சிதறி, நாற்புறமும் சோறும் கறியும் ரசமும் குழம்பும் இறைந்து தெறித்துக் கிடக்கின்றன. ஆண்டாளு மல் லாந்து வீழ்ந்து அமைதியாகக் கிடக்கிறாள். அவள் தலையின் பின்புறமிருந்து ரத்தம் வடிந்து பூமியில் ஓடி உறைகிறது...

சோற்றுச் சுமை ஏற்றுத் திரிந்த அவள் உடம்புச் சுமையையும் உதறி அவள் ஜீவன் பிரிந்து விட்டது.

அன்று அவள் வருகைக்காகக் காத்திருந்த வயிறுகளெல்லாம் ஏமாந்து போயின. அவள் தலையிலிருந்து இறங்கி அவர்கள் வயிற் றுக்குப் போக வேண்டிய உணவெல்லாம் வீதியில் இறைந்து போயின. இத்தனை நாட்க ளாய் அவள் தன் தலையில் சுமந்து பிறருக்கு அளித்ததில், அல்லது இப்பொழுது தரையில் சிந்திப் பாழானதில் கொஞ்சம் அவள் வயிற் றுக்குப் போயிருந்தால்...அவள் செத்திருக்க வேண்டாம்.

அன்று, தலையிலிருந்து வயிற்றுக்குப் போக வேண்டிய பாரம் தரையோடு போயிற்று!

அதனால் யாரும் செத்துப் போய்விடவில்லை!

* * *

அவள் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டிச் சேர்த்து வைத்த காசு, அவளது சுருக் குப் பையில் இருந்த இரண்டரை ரூபாய் அவளது ஈமக் கடனுக்குத்தான் ஆயிற்று.

ஆண்டாளு செத்துச் சிதையேறி விட்டாள் என்றால் ஊரில் பலர் நம்ப மறுக்கிறார்கள். அவள் செத்துவிட்டாள் என்பதற்கு ஒரேஒரு சான்றுதான் உண்டு.

அதோ,

அவள் மகன் பணம் கட்டாமல் பரீட்சை எழுதாமல் அப்பனின் மகனாக-சுற்றி அடித்து- இரும்புப் பட்டறைக்கு வந்து, கொல்லன் உலையில் துருத்தி ஊதிக் கொண்டிருக்கிறான்... பாருங்கள்!



# உரிமை எங்கே?

செந்தூரன்

காலை மூன்று மணி. பறங்கி மலைத் தோட்டம் ஏழாம் நம்பர் 'லயத்தில்' உள்ள சுப்பையா நாயக்கரின் 'காம்பிரா'வில் கொழுந்து கணக்குப்பிள்ளையிடம் கைமாற்றாக வாங்கிய 'அலாரம்' கணீர் என்று ஒலித்தது. வழக்கத்துக்கு மாறாகத் தூங்காமலே கனவு கண்டு கொண்டிருந்த சுப்பையா நாயக்கர் மணியோசை கேட்டதும் எழுந்து விட்டார். எழுந்தவர் சும்மாயிருக்கவில்லை. நாள் முழுதும் உழைத்த களைப்பால் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த மனைவியையும் பிள்ளைகளையும் திட்டிக் கொண்டே எழுப்பினார் சுப்பையா.

"சனியனுக! நேரம் போச்சேன்னு கொஞ்சமாவது யோசனை இருக்கா? வெறகு கட்ட மாதிரில்ல ஆயும் புள்ளைகளும் கெடக்குதுக. ஏ, புள்ளே, மீனாச்சி! எந்திருடி! எந்திரிச்சி அடுப்பு பத்த வச்சிப் புளிச்சாறு கட்டுடி. விடிஞ்சு வெள்ளக் கோழி கூவிடுச்சே காது கேக்கலே? காதுல என்ன மத்துக் கட்டியா வச்சு அடைச்சிருக்கு?" என்று சத்தமிட்டுக் கொண்டே மீனாட்சியை எழுப்பினார் நாயக்கர்.

"என்னாங்க! என்னிக்கும் இல்லாத புதுமையா இன்னிக்கு என்னா வந்திரிச்சு? காலங் காத்தாலே எந்திரிச்சு ஏன் இப்படிச் சத்தம் போடறீங்க?" என்றாள் அரைத் தூக்கத்திலிருந்த மீனாட்சி.

"ஆமாடி, வந்திருச்சு! நமக்கு நல்ல காலம் இன்னிக்குத் தான்டி பொறக்கப் போவுது. இன்னிக்குக் கண்டியிலே போய்ச் சத்தியம் செஞ்சுப்புட்டால் நாமெல்லாரும் இந்த நாட்டிலே 'பெரசை' ஆயிறலாமுடி. வரச் சொல்லி 'கண்டுரோலர்' எழுதியிருக்காருன்னு நேத்து சொன்னேனே அறியில்லே? நூதேன்! எந்திரிடி! அடியே செகப்பி! நீயும் ஆயோட சேந்து தூங்காம சட்டுப்புட்டுனு வேலையைப் பாரு. ஆறு மணி பஸ்லே போவனும். 'தேத்தண்ணி. இத்தண்ணி குடிச்சுறுங்க. அப்புறம் பஸ்ஸிலே வாந்தி எடுப்பீங்க" என்று படபட வென்று கூறிக் கொண்டே வெளியில் சென்றார் நாயக்கர்.

சுப்பையா நாயக்கருக்கு அன்று நிலைகொள்ளவில்லை. ஆமாம், இருக்காதா என்ன? எத்தனை ஆண்டுகள் அந்த ஒரு கடிதத்துக்காக அவர் தவியாய்த் தவித்தார். ஓராண்டா? ஈராண்டா? பத்தாண்டுகள் எப்படியோ ஓடி மறைந்தன. அவருடைய பாட்டன் இந்தியாவிலிருந்து வந்தது ஏதோ உண்மைதான். சுப்பையாவின் தந்தையோ கடலைப் பற்றிக் கேள்விப்படாமலே தேயிலைக்கு உரமானார். 'சுப்பையாவுக்குக் கடல் என்ன நிறம்?' 'எப்படி இருக்கும்?' என்று கண்டவர்கள் சொல்லக் கேள்விதானேயன்றிக் கண்டதேயில்லை. ஈழத்தின் மத்தியப் பகுதியில் இருக்கும் ஒரு தேயிலைத் தோட்டத்தில் உழைக்கும் ஒரு தொழிலாளிதான் நாயக்கர். சுமார் பதினொரு ஆண்டுகளுக்கு முன்னர் பிரஜா உரிமைச் சட்டம் வந்த புதிதில் தம்மையும் தம் குடும்பத்தையும் இலங்கைப் பிரஜைகளாகச் சேர்த்துக் கொள்ளுமாறு மனுப் போட்டவர்களில் அவரும் ஒருவர். மனுப் போட்டதும் உரிமை கிடைத்துவிட அவரென்ன இலட்சாதிபதியா? எத்தனை விசாரணைகள்? எவ்வளவு பணச்செலவு, அலைச்சல்கள்? அப்பப்பா, அவர் தம் பிறப்புரிமையைப் பெறும் பொருட்டு, பல்



## ஈழத்துச் சிறுகதைப் போட்டி
## இரண்டாவது பரிசுக் கதை 3

களுக்கும், கடிதம் எழுதுபவருக்கும், தபால் அலுவலகத்துக்கும் கொடுத்த பணம் இன்று அவரிடம் இருந்தால் குறைந்தது ஐந்து ஏக்கர் தேயிலைத் தோட்டத்துக்காவது அவர் அதிபதியாக இருந்திருப்பார். பாவம், இத்தனை இன்னல்களுக்குப் பின்னர் ஒரு நாள் அந்தக் கடிதம் வந்தது.

'' உனக்கும் உன் குடும்பத்தாருக்கும் பிரஜாவுரிமை தரப்படும். கண்டியில் வந்து பிரஜாவுரிமைக் கமிஷனர் முன்னிலையில் சத்தியம் செய்து பிரஜா உரிமை 'சர்டிபிகேட்'டைப் பெற்றுக் கொள்ளவும்'' என்று தேதியும் குறிக்கப்பட்டிருந்த கடிதம் கிடைத்தால் சொல்ல வேண்டுமா?

தோட்டத்துப் பெரிய கங்காணி, 'கண்டா கய்யா', 'கிளாக்கரய்யா' முதலியோருக்கெல்லாம் பிரஜாவுரிமை கிடைக்கு முன்னர் தமக்குக் கிடைக்கப் போவதில் அவர் உள்ளம் பூரித்தது. அந்த மகிழ்ச்சியில் பூத்த கோபத்தில்தான் காலையில் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்.

பதினாறு கல் தொலைவிலிருக்கும் கண்டி நகருக்குச் செல்வதென்றும் தோட்டத்து மக்களுக்கு ஒரு தனி உற்சாகம். நாயக்கர் மாத்திரம் அதற்கு விதிவிலக்கா? ஓட்டல் சாப்பாடு உடம்புக்கு ஒத்துக் கொள்ளாதல்லவா? அதனால் பகல் உணவுக்காகப் புளிச்சாதம் கட்டிக் கொண்டு, புதிய ஆடைகளையும் அணிந்து, குடும்பத்தோடு காலை 5–45 க்கு நல்லநேரம் பார்த்து, வீட்டைத் தாழிட்டுக்கொண்டு புறப்பட்டார். அன்று வேலைக்குச் செல்வதற்காகக் காலையிலேயே எழுந்து 'பிரட்டுக்கு'ச் சென்று கொண்டிருந்த தம் நண்பர்களிடம் தாம் செல்லும் விஷயத்தைக் கூறி விடைபெற்றார். 'பிரட்டு'க்குச் சென்று கொண்டிருந்த பெரிய கணக்குப் பிள்ளையையும் வழியில் சந்தித்தார்.

'' என்ன நாயக்கர், எங்கிட்டு இப்புடிக் குடும்பத்தோடு விருந்தாடக் கிளம்பிட்டே?'' என்று வியப்புடன் கேட்டார் கணக்குப் பிள்ளை.

'' விருந்தாடி ஒண்ணுமில்லீங்க. கண்டிக்கு பெரசா உரிமை தர வரச்சொல்லி யிருக்காங்க கணக்குப்பிள்ளையா. அதுக்குத் தாங்க போறோம்.'' மகிழ்வோடு கூறினார் நாயக்கர்.

'' ஓகோ! அப்படியா சங்கதி. நீ கொடுத்து வெச்சவன். நாங்களும்தான் எழுதி எழுதி ஒரு எழுவையும் காணோம்.'' பொறுமையோடு வெளிவந்தன கணக்குப் பிள்ளையின் சொற்கள்.

'' எல்லாம் ஏழுமலையான் கண் பார்த்ததுங்க. இல்லாட்டி எனக்கு இப்போதைக்கு இந்தப் பாக்கியம் கிடைக்கப் போவுதுங்களா? சரிங்க.... பஸ்ஸுக்கு நேரமாவுதுங்க. நான் வாரேங்க'' என்று விடைபெற்றார் நாயக்கர்.

நாயக்கரின் அவசரத்தைப் பஸ் போக்குவரத்துச் சபை அறியவில்லை போலும். அன்றைக்கென்று பஸ் பத்து நிமிடங்கள் தாமதித்தே வந்தது. அதற்குள் நாயக்கர் இலங்கைப் போக்குவரத்துச் சபையையே சபித்துக் கொட்டி விட்டார். வழக்கமாகக் காரசாரமாகப் பேசாத நாயக்கர் அன்று சிறிது கடுமையாகவே ஏசினார்.

'' மடப்பயலுக! நேரங் காலத்துக்கு வந்து தொலையறானுகளா? அரசாங்க உத்தியோகமின்னு அவிங்க நெனச்சப்படி நடக்க நாங்க என்ன ஏமாளிகளா? இவங்களுக்கு ஒரு 'பெட்டிஷன்' எழுதிப் போட்டாத்தான் சரிப்படும்'' என்று உரிமையோடு திட்டிக் கொட்டினார். ஆமாம், இன்னும் சிறிது நேரத்தில் அவரும் இந்நாட்டின் உரிமையோடு பேசப் போகிற பிரஜைதானே? அதனை இப்பொழுதே போக்குவரத்துச்சபையில் ஒத்திகை செய்து பார்த்தார்.

வண்டியும் வந்தது. ஏதோ பதினைந்து இருபது ஆயிரங்கள் கொடுத்து வாங்கிய தமது சொந்தக் காரில் ஏறி இருக்கப் போகும் உற்சாகம் அவருக்கு. 'பஸ் சாரதியும் டிக்கட் கலெக்டரும் தமது சேவகர்கள்' என்ற எண்ணம் உரிமையைப் பெறுமுன்னரே அவர் உள்ளத்தில் தோன்றி விட்டது. எவ்வளவுதான் உரிமையுடையவராயினும் டிக்கட் கலெக்டருக்கு அவர் தோட்டக்காரனாகத்தான் காட்சியளித்தார், பாவம்!

'' ஏய், வாத்தி போடுற மனுஷனெல்லாம் பின்னிக்குப் போ'' என்று தமக்குத் தெரிந்த

தமிழில் அவரிட்ட கட்டளை நாயக்கரையும் குடும்பத்தையும் வண்டியின் இறுதி ஆசனத்துக்கே அனுப்பி விட்டது. நாயக்கருக்கோ அவரது கட்டளை கோபத்தைக் கிளறியது. இருப்பினும் குடும்பத்தோடு வந்தபடியால் தகராறுக்குச் செல்ல மனம் கூசியது. அமைதியாக இருந்து விட்டார்.

மலைகளையும், ஆறுகளையும் கடந்து தேயிலைத் தோட்டங்களினூடே வளைந்து வளைந்து செல்லும் சாலையில் ஓடிக் கொண்டிருந்தது வண்டி. சாலையின் இரு மருங்கிலும் அழகாய்ப் பச்சைப் பசேலென்று காட்சி தந்த தேயிலைச் செடிகள் தமக்கு உணவளித்துப் பாதுகாக்கும் இனத்தைச் சேர்ந்த ஒருவருக்கு இந்நாட்டு உரிமை கிடைக்கப் போகிறது என்ற மகிழ்வில் கம்பீரமாகக் காட்சி தந்தன. அவற்றைப் பார்க்கும்போதெல்லாம் நாயக்கரின் உள்ளம் பூரித்தது. அப்பொழுது எழுந்த பூரிப்பில் அவர் தம்மையே மறந்தார். மகிழ்ச்சியின் எல்லையும், வண்டியின் வேகமும் அவரது எண்ணத்தை எங்கோ இழுத்துச் சென்றன.

அடேயப்பா! முதன் முதலில் பிரஜாவுரிமை மனுப் போடும் பொழுது 'தமக்கு இந்நாட்டில் உரிமை கிடைக்காது' என்றே கருதினார் நாயக்கர். அவர் ஈழத்திலே பிறந்ததற்குப் போதிய 'ருசு' இல்லை. அவரது தந்தை செய்த தவறினால் பெயரில்லாத 'பிறப்புச் சாட்சிப் பத்திரம்' தான் 'கச்சேரி'யில் இருந்தது. இதை வைத்துக் கொண்டு எப்படி வாதாடுவது? ஒன்றுமே அவருக்குப் புரியவில்லை. இருப்பினும் ''ஒரு கை பார்த்து விடுவோம்'' என்றுதான் எல்லோரையும் போல் மனுப் போட்டார். ''இந்த ஊர் இல்லாட்டி வேற எங்கேதான் தள்ளுவான்? அதையும் பார்ப்போமே'' என்ற அசட்டுத் தைரியம் அவர் உள்ளத்தில் அப்பொழுது இருந்தது. துணிந்து விட்டார் நாயக்கர்.

ஆண்டுகள் ஆறு எங்கும் பிரஜாவுரிமைப் பேச்சிலேயே உருண்டோடின. ஒரு நாள் சுப்பையா நாயக்கரையும் குடும்பத்தாரையும் மூன்றாம் முறையாக விசாரிக்கக் கமிஷனர் வரப் போவதாகக் கிடைத்த கடிதத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே உரிமை கிடைத்து விட்டதாக அவர் எண்ணினார். நாட்டுரிமையென்ன அவ்வளவு மலிவாகக் கிடைத்து விடக்கூடிய கடைச் சரக்கா? அதுவும் நாயக்கரைப் போன்ற ஒரு தொழிலாளிக்கு! விசாரணை நடத்துவோருக்கு ஆயிரம் ஆயிரமாக 'சம்திங்' கொடுத்தவர்களுக்கே உரிமை கிடைக்கப் பல ஆண்டுகள் செல்லும்பொழுது, இவருக்கு உடனே நாட்டுரிமை கிடைத்து விட்டால் தொழிலாள வர்க்கத்துக்கே விமோசனம் கிடைத்தமாதிரி தானே? வழக்கம்போல் அன்றும் விசாரணை நேரத்தில் ஏதேதோ அடுக்கடுக்காகக் கேள்விகள் கேட்கப்பட்டன. நாயக்கரும் சிந்தித்தே பதிலிறுத்தார். சில கேட்கத்தகாத கேள்விகளும் கூடக் கேட்டார்கள் அவர்கள், தமது பொழுதைப் போக்குவதற்காக. சுப்பையாவுக்கு அவர்களது 'பவிஷு' எப்படித் தெரியும்? மிகவும் பயபக்தியோடு அவர் பதில் கூறினார்.

''ஆமாப்பா, உன் பொம்பிளையை நீ உண்மையாகத் தான் கலியாணம் முடித்தாயா?'' விசாரணையின் இறுதிக் கட்டத்தில் கேட்கப்பட்ட மிக முக்கியமான கேள்விகளில் ஒன்று இது.

''என்னங்க, இப்படிக் கேட்டுட்டீங்க? நம்ம மாரியம்மாவுக்குத் தெரியுங்க! ஆத்தா கோவில்லதாங்க நான் தாலி கட்டினேன்!! நம்ம தோட்டத்திலே எல்லாருக்கும் வெத்தலைப் பாக்கும் வச்சேங்க!!!''

''ஓகோ! அப்படியா, நீங்க ரெஜிஸ்டர் பண்ணலையா?''

''அதெல்லாம் இப்ப வந்தது தானுங்களே. அந்தக் காலத்துலே அதெல்லாம் ஏதுங்க?''— தமக்குத் தெரிந்த வரலாற்று உண்மையை அடிப்படையாக வைத்துப் பதில் கூறினார் நாயக்கர். பாவம்! வரலாற்றுக்கும் பிரஜாவுரிமைச் சட்டத்துக்கும் எவ்விதத்திலும் தொடர்பில்லையென்பது அவருக்கு எங்கே தெரியப் போகிறது?

''சரியப்பா, உன்னுடைய முதல் பிள்ளையும் மூன்றும் பிள்ளையும் இலங்கையில் பிறந்தாங்கன்னு 'புரூவ்' பண்ணறே. இரண்டாம் பிள்ளைக்கு 'புரூவ்' இல்லையே!'' பெரியதோர் உண்மையைக் கண்டு பிடித்தார் உதவி விசாரணையாளர்.

''இது அநியாயமுங்க. எம் மவன் கந்தையா பொறந்த அன்னிக்கே தோட்டத்து டாக்டரய்யாகிட்டே சொன்னேனுங்களே.'' பரிதாபமாகக் கூறினார் நாயக்கர்.

''நமக்கு அதெல்லாம் தெரியாது. உனக்குப் பிரஜாவுரிமை தரத்தகுந்த 'புரூவ்' இல்லை'' என்று ஓரேயடியாகக் கூறி நாயக்கரை வெளியே செல்லுமாறு பணித்தார், எதையோ எதிர்பார்த்த விசாரணையாளர்.

சோர்ந்த முகத்தோடு வெளியே வந்த சுப்பையாவைக் கண்ட விசாரணையாளரின் கார் சாரதி, ''மெய்யே, விசாரணை முடிஞ்சுதோ?'' என்று அக்கறையோடு கேட்டார்.

''ஆமாய்யா, 'புரூவ்' இல்லையாம். பிரசாவுரிமையும் இல்லையாம்.'' சுப்பையாவின் பதில் வெறுப்பாகவே இருந்தது.

''ஓ அதுவே, நானொண்டு சொல்றேன், கேட்பியோ?''

''என்னய்யா? சொல்லித் தொலை.''

''இங்கார், அவைக்கு ஓர் ஆயிரம் இருந்தாக் கொடுமன். சரிப்பண்ணி விடுவினம்''— உரிமை பெறக் குறுக்கு வழியைக் காட்டினார் அந்தச் சாரதி.

''ஆ....ஆயிரமா....அடேங்கப்பா, நான் எங்கிட்டய்யா போவேன்? மூன்று புள்ளைகளையும் மூணு எடத்திலே ஒக்கார வைச்சாலும் அவ்வளவு கெடைக்காதே'' என்று ஏங்கித் தவித்தார் நாயக்கர்.

''பின்னை ஏனப்பா வந்த நீ? எங்கட ஐயா அவை உன்னைப் போல ஆள்கிட்டத்தான் ஆயிரம் மற்ற இடமென்றால் அஞ்சாயிரம் குறையாது. அப்படித்தானே பிரஜாவுரிமை வேண்டியினம்''—உண்மையை ஒளிவு மறைவின்றிக் கூறினார் சாரதி.

சுப்பையா நாயக்கருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. இந்த நாட்டிலே பிறந்து, இங்கேயே வளர்ந்து, காடு மலைகளைச் சீர்ப்படுத்தி நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த, வெய்யில், மழை, பனி எதையுமே பாராமல் ஈழவள நாட்டை உயர்த்துவதற்குப் பாடு







RISING SUN BRAND



**எழுத்தாளர்:** நான் எழுதி முடித்த நாவலுக்கு ஒரு பிரபல கதாசிரியர் கிட்டே முகவுரை வாங்கிவிட்டேன்.

**மனைவி:** பலே! அப்படியா சேதி! அப்போ உங்க நாவல்லே, ஒரு பக்கமாவது நன்னாயிருக்குமுன்னு சொல்லுங்கோ!

"......................"

பட்ட அவர், இன்று நாடற்றவராக நிற்பதா? திகைத்துப் போய் நின்றார் நாய்க்கர்.

"ஏனப்பா நிக்கறே? நேரமல்ல போகுது. ஓடிப்போய் என்னாறுவது பார்த்துவா. நான் ஐயாகிட்டச் சொல்றேன்" என்று நாயக்கரின் அமைதியைக் குலைத்தார் சாரதி.

ஏதோ முடிவுக்கு வந்த நாயக்கர், "சரி" என்று அவசரமாக வீட்டுக்குச் சென்றார். சற்று நேரத்துக்குப் பின்னர் நூறு ரூபாய் நோட்டுக் கத்தைகள் ஐந்துடன் திரும்பினார். அந்தப் பணத்தைச் சாரதியிடம் கொடுத்து, "ஐயா, நீங்கதான் எப்படியாவது இதைக் கொடுத்து எனக்குப் பெரசா உரிமை எடுத்துத் தாரணும்" என்றார் அழாக்குறையாக.

இப்படி எத்தனை இன்னல்கள்? எண்ணவே முடியாது. அத்தனையும் தன்னை இந்நாட்டில் உரிமையோடு வாழத் தகுதி யுடையவனாக ஆக்கிக் கொள்ளத்தானே? எத்தனை பேருக்கு எப்படி எப்படிப் பணம் கொடுக்க முடியுமோ, அந்த வழிகளிலெல்லாம் தாம் அறியாமலே தம்மால் இயன்ற தொகைகளைக் கொடுத்தார். பெரிய இடங்களில் பத்தாயிரம் என்றும் நாயக்கரைப் பொறுத்த மட்டில் பத்து ரூபாயாக இருந்தது. எந்த வழியிலாவது உரிமையைப் பெற்று விட்டால் நாட்டில் தலைநிமிர்ந்து திரியலாமல்லவா? பிறகு யார் இவரைக் 'கள்ளத் தோணி' என்று அழைக்கப் போகிறார்கள்? நம்பிக்கையைத் தளரவிடவில்லை நாயக்கர். தொடர்ந்து முயற்சி செய்தார். பலனும் கிட்டியது. அதனை அனுபவிக்கத்தான் தம்முடைய குடும்பத்தோடு இன்பம் கண்டு கொண்டே, கண்டியை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றார் அவர்.

பஸ் கண்டி நிலையத்தில் நின்றதும் 'அன்று வண்டி மிக விரைவில் வந்து விட்டதாக' அவர் உணர்ந்தார். உரிமை வேட்கை வண்டியின் வேகத்தையே அதிகரித்து விட்டது அவரளவில். மக்கள் நெருக்கம் மிகுந்த அழகு மிக்க கண்டி நகரை முன் பின் கண்டறியாத தம் மனைவி மக்கள் வழி தவறி விடக் கூடாதே என்று எண்ணிய நாயக்கர் அவர்களைத் தம்முடனே அழைத்துக் கொண்டார்.

"ஏ....புள்ளேகளா, அங்கிட்டு இங்கிட்டுப் பராக்குப் பார்க்காம என் பின்னுக்கே கையப் புடிச்சிக்கிட்டு வாங்க" என்று கட்டளையிட்டார். கணவன் கூறுவதில் மிகப்பெரிய உண்மையைக் கண்ட மீனாட்சி, "சரிங்க", என்று தலையசைத்தவளாய் அவரைத் தொடர்ந்தாள்.

பலரையும் கேட்டுக் கேட்டுக் கண்டி "கச்சேரி" இருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதற்குள் கண்டி நகரையே பலமுறை வலம் வந்து விட்டார். அப்படி வழி தெரியாமல் கண்டியைச் சுற்றியதில் அவருக்கோ, மனைவி மக்களுக்கோ ஒரு சிறிதேனும் களைப்பு ஏற்படவில்லை. உரிமை கிடைக்கப் போகும் உற்சாகத்தோடு, நகரும் அங்கு காணப்பட்ட காட்சிகளும் அவர்களுக்குப் புதிதாகவே இருந்தன. புத்தரின் தந்தம் இருப்பதாகக் கருதப்படும் 'தலதா மாளிகா'வும், கண்டி நகரை அழகுபடுத்தும் 'தெப்பக் குளமும்', பூங்காக்களும், சிலைகளும் அவர்களை வியப்பில் ஆழ்த்தின. ஒருவாறு முன்னர் சென்ற வழியிலேயே காணப்பட்ட "கச்சேரி"யைக் காலை 10-30 மணியளவில் நாயக்கரும் குடும்பத்தாரும் வந்தடைந்தனர்.

அன்று, 'கண்டி இலங்கைப் பிரஜாவுரிமை' அலுவலகத்துக்கு முன்னும் பல குடும்பங்கள் தமது உரிமைக்குரிய சாட்சிப் பத்திரத்தைப் பெறுவதற்காகக் காத்திருந்தன. அவற்றோடு நாயக்கரின் குடும்பமும் பெருமையோடு கலந்து கொண்டது. வந்திருந்த குடும்பங்களனைத்தும் பணம் படைத்த குடும்பங்களாகவே காட்சியளித்தன. அவர்கள் பேச்சு, நடை, யுடை, பாவனை அனைத்தும் தோட்டங்களின் உரிமையாளர்களாகவும், பெரிய ஸ்தாபனங்களின் உரிமையாளர்களாகவுமே அவர்களைக் காட்டின. இத்தகைய செல்வக் குடும்பங்களோடு வேறு எத்துறையிலும் எந்நேரத்திலும் சரிநிகர் சமானமாக இருக்கக் கனவுகூடக் கண்டிராத நாயக்கர், இன்று உரிமையை நிலைநாட்டப் போகும் பொழுது அவர்களோடு சமமாக இருப்பதை நனவிலே கண்டு உச்சி குளிர்ந்தார். தம் மகிழ்ச்சியை மனைவியிடம் கூறித் தம்மைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டுமென்று அவர் உள்ளம் அவரைத் தூண்டியது.

"அடியே, மீனாட்சி! பார்த்தியாடி வந்திருக்கிற பெரிய புள்ளிகள்? அவுங்களோட நமக்கும் பெரசாவுரிமை கெடைக்கப் போவுதுடி. இப்ப தெரிஞ்சுக்க, இந்த நாயக்கர் மனம் வெச்சாருன்னா எதையும் செஞ்சுப்புட்டுத்தான் சும்மா இருப்பாரு.... ஆ...மா," என்று இழுத்த நாயக்கர் தமது

சுருண்டு வளர்ந்துள்ள மீசையை ஒரு முறை தடவிக் கொடுத்தார்.

''ஆ..மா, சும்மா இருங்க. யாரும் பார்த்தா ஏதும் நெனப்பாங்க'' என்று அவ்விடத்தில் தன்னுடைய குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றினாள் மீனாட்சி.

இலங்கைப் பிரஜாவுரிமைச் சாட்சிப் பத்திரத்தைப் பெற்ற குடும்பங்கள் ஒவ்வொன்றாக மகிழ்வோடு சென்று கொண்டிருந்தன. நேரம் நெருங்க நெருங்க நாயக்கரின் மனமும் 'படபட'வென்று அடித்தது. சிந்தனையில் ஆழ்ந்திருந்த அவரை, ''சுப்பையா யாரு?'' என்ற குரல் விழிப்படையச் செய்தது.

''நான்தான், ஐயா!''—உட்கார்ந்திருந்த நாயக்கர் பயபக்தியோடு எழுந்து 'பிரூனே' வணங்கினார்.

தனக்குள் முறுவலித்த சேவகன், ''உள்ளே போகலாம்'' என்றான்.

'கமிஷனரின்' அறைக்குள் சென்ற நாயக்கருக்கு உடம்பெல்லாம் நடுங்கியது. 'பயாஸ் கோப்பில் பார்த்த சிவபெருமான் இருக்கும் கைலாச மலைக்குத் தாம் வந்து விட்டதாக' அவர் நினைத்தார். தாம் இந்நாட்டில் உரிமையோடு வாழ உரிமையளிக்கப் போகும் தெய்வமே அவர்தானே! அவரை அப்படியே சாஷ்டாங்கமாக விழுந்து வணங்க வேண்டுமென்றே அவர் எண்ணினார். ஆனால் கமிஷனர் பேசத் தொடங்கவே அவ்வெண்ணத்தைக் கைவிட்டு ''நமஸ்காரங்கய்யா!'' என்றார் இரத்தத்தில் ஊறிய பண்போடு.

''நமஸ்காரம், நீ எந்தத் தோட்டம்?''—அதிகாரத்தோடு கேட்டார் கமிஷனர்.

''நாங்க பறங்கிமலைத் தோட்டங்கய்யா.'' பணிவோடு பதில் கூறினார் நாயக்கர்.

''ஓ...வெல், குட். ஓம் பேரு.''

''எம் பேரு சுப்பையா நாயக்கர். அவ பேரு மீனாச்சிங்க.''

''என்ன...? இன்னொரு முறை திருப்பிச் சொல்லு. ஓம் பேரு.''

''சுப்பையா நாயக்கர் தாங்க.'' தம் பெயரை மீண்டும் கேட்டதில் நாயக்கருக்குச் சொல்ல முடியாத மகிழ்ச்சி.

''அப்படியா? இன்னைக்கி நாங்க கூப்பிட்டது பறங்கிமலை சுப்பையா ஏட் கங்காணிதானே? அவன் சம்சாரம் பேரு தேவானை.''

சம்மட்டியால் தலையில் அடிப்பதுபோல் இருந்தது நாயக்கருக்கு. ''ஐயா! எனக்குத் தாங்க வரச்சொல்லிக் கடுதாசி வந்திச்சு'' என்றார் அழாக் குறையாக.

''எங்கே? அந்தக் கடுதாசியைக் கொண்டுவா'' என்ற கமிஷனர் அழைப்புக் கடிதத்தை வாங்கிப் பார்த்தார். நாயக்கரின் உள்ளமோ ஏதேதோ எண்ணித் தவித்தது. நன்றாகப் பார்த்து முடித்தார் கமிஷனர்.

''சுப்பையா! கோவிக்க வேணும். இது நம்ப 'கிளாக்கர்' செய்த குத்தம். 'ஒனக்குப் பிரஜா உரிமை இல்லை'ன்னு போடற கடுதாசியை மாத்திச் சுப்பையா கங்காணிக்கு அனுப்பிட்டான். அவங்க கடுதாசி ஒனக்கு வந்தது. கோவிச்சிக்க வேணும். நீங்க போகலாம்'' என்று அரைகுறைத் தமிழில் கூறிய கமிஷனர் கோபமாக மேசை மணியைத் தட்டிச் சேவகனை அழைத்தார்.

கமிஷனர் ஏதோ சாதாரணமாக மன்னிப்புக் கேட்டுவிட்டார் தமக்கே உரிய முறையில். ஆனால் நாயக்கருக்கோ அவரது ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு அம்பாக உள்ளத்தில் பாய்ந்தது. எண்ணிய எண்ணங்கள், கட்டிய கோட்டைகள்!! அத்தனையும் ஒரு நொடிப் பொழுதில் தான் தூளாயின. தலை சுற்றியது. கீழே விழுந்து விடாமல் மீனாட்சி உரிமையோடு அவரை அணைத்து வெளியே அழைத்து வந்தாள். உலகமே அவரை எள்ளி நகைப்பதாக அவர் எண்ணினார். திரும்பிய பக்கமெல்லாம், ''கள்ளத்தோணி! கள்ளத்தோணி!!'' என்ற சத்தம் கேட்பதாக அவரது பேதை உள்ளம் எண்ணித் தடுமாறியது. ஏதேதோ பிதற்றினார், சிரித்தார், அழுதார். வெளியில் நின்றவர்களில் சிலர் அவருக்காக அனுதாபப்பட்டனர். சிலர் சிரித்தனர்.

பணம் படைத்த பிரபு ஒருவர், ''இந்தத் தோட்டக்காட்டுச் சனியங்களே இப்படித்தான். எதையும் ஓர் ஆளுக்கு நாலு ஆளுகளை விசாரிக்காம வந்து நம்ம இந்தியக்காரன் மானத்தையே வாங்குதுக'' என்றார் இலங்கையன் என்ற உரிமையை நிலைநாட்ட வந்த இடத்தில் பாரத நாட்டு உரிமையையும் இழந்துவிட மனமில்லாமல்.

அலுவலகத்தினின்றும் தள்ளாடித் தள்ளாடி வெளியில் வந்த நாயக்கர் ஒரு மரத்தடியில் தம்மையும் மறந்து இருந்து விட்டார். தொடர்ந்து வந்த மீனாட்சியும் பிள்ளைகளும் அழுது கொண்டே அவரைச் சுற்றி அமர்ந்தனர். ஒன்றும் புரியாத நிலையிலேயே இருந்தார் அவர். நாட்டுரிமையைத் தான் மேலிடத்தாரால் பறிக்க முடிந்ததேயன்றி அவரது அன்பு நிறைந்த குடும்ப உரிமையை யாராலும் பறிக்க முடியவில்லை. மனைவி மக்களை அப்படியே கட்டித் தழுவிக் கொண்டு அழுதார் நாயக்கர். எங்கிருந்தோ அவரது அழுகையை அடக்கிக் கொண்டு மணியோசை யொன்று கேட்டது. அவ்வோசை வந்த திக்கை நோக்கி மெதுவாக நடந்தார் நாயக்கர்.

காடாகக் கிடந்த இந்த நாட்டை வற்றாத வளங் கொழிக்கும் நாடாக உயர்த்தி உலக அரங்கிலே இதனைக் காட்சிக்கு வைத்த அவ்வேழைத் தொழிலாளிக்கு இன்று இந்நாட்டிலே உரிமையில்லை. இந் நாட்டில் மட்டுமா? அவருக்கு எந்த நாட்டிலுமே இனி உரிமையில்லை! ஆனால், எங்கிருந்தோ வந்த புத்தரின் தந்தத்துக்கு இன்று இந்நாட்டில் கௌரவ உரிமை. அது மட்டுமா? மக்கள் அனைவரும் போற்றிப் புகழும் 'தலதா மாளிகை' எழுவதற்கும் 'பெரகரா' என்ற யானை விழா நடப்பதற்கும் அத்தந்தம் உரிமை பெற்றுத் திகழ்வதை, ஈழத்து உரிமையையும் பாரதநாட்டு உரிமையையும் இழந்த நாயக்கர் எப்படி அறிவார்? தலதா மாளிகையை நெருங்க நெருங்க, நடுப்பகல் பூசையின் மணியோசை ''டாங்......! டாங்......!!'' என்று பலமாக ஒலித்தது. ஒவ்வொரு ஒலியும், ''உரிமை எங்கே? உரிமை எங்கே?'' என்று நாயக்கரின் செவியில் மாத்திரமல்ல, மலைநாடு முழுதுமே கேட்பது போலிருந்தது.












ஒரு தேக்கரண்டி ஈனோ ஒரு டம்ளர் ஜலத்தில் போட்டால் உடனே பொங்கி கரைந்து நேர்த்தியான, புத்துணர்ச்சியளிக்கும் பானமாக மாறும். தளதளக்கும் ஈனோ 'ப்ரூட் ஸால்ட்' இதத்தையளித்து சமனமூட்டக்கூடியது. வயிற்றுக் கோளாறுகளிலிருந்து உடனடியாக நீடித்த நிவாரணமளிக்கிறது. ஜீரணசக்தியை சரியாக்குகிறது.









# அவனும் மனிதன்தான்!

சரவணன்

கலைச்செல்வி தாங்க முடியாத மனச்சுமையுடன், பள்ளியிலிருந்து வீடு திரும்பினாள். கை கால் முகம் கூடக் கழுவாமல், சாய்வு நாற்காலியிலே சோர்வுற்றுச் சாய்ந்துவிட்டாள்.

சந்தடி கேட்டு உள்ளே வந்த அவளுடைய தாயார் மகளின் நிலை கண்டு திடுக்கிட்டவளாய், "ஏன்? உன் உடம்புக்கு என்ன? இன்று உன் பள்ளியிலே நடந்த ஆண்டு விழாவிலே உனக்குத்தான் பெரிய பாராட்டு கிடைத்ததாமே! நீ தயாரித்த கலைநிகழ்ச்சி பிரமாதமாய் விளங்கியதாக உன் தோழி மலர்க்கொடி வந்து பாராட்டினாள். நீ என்னடா வென்றால்..." என்று ஏமாற்றத்துடன் கூறினாள்.

"அம்மா! என்னைத் தனிமையிலே விட்டு விடு. உன்னிடம் நான் எதையும் ஒளிக்கவில்லை; ஒளிக்கவும் மாட்டேன். இப்போதைக்கு எனக்குத் தனிமை தேவைப்படுகிறது" என்று உணர்ச்சியற்ற குரலில் பகர்ந்தாள் கலைச்செல்வி.

தனியே விடப்பட்ட கலைச்செல்வி சிந்தனைச் சுழலில் சிக்கியவளாய்ச் சில ஆண்டுகள் பின்னோக்கிச் சென்று விட்டாள்.

கார்த்திகேயன்! இந்தப் பெயர் அப்போது கனியாய் இனித்தது கலைச்செல்விக்கு. 'கா' என்ற எழுத்து, அகராதியிலே 'கார்த்திகேயன்' என்ற சொல்லைத்தான் குறிக்கும் என்ற எண்ணம் போலும் அவளுக்கு! அந்த எழுத்தின் மீது அத்தனை மோகம் அவளுக்கு ஏற்பட்டிருந்தது.

கலைச்செல்வி தன் தந்தையை இழந்து விட்டு, தாயுடன் சென்னை வந்த சமயம். எதிர்காலம் அவளுக்கு அத்தனை பயங்கரமாகவோ, கொடுமையாகவோ இருக்கவில்லை. காரணம், அணைத்து ஆதரிக்க, தாய் இருக்கிறாள். வாழ்க்கையை வசதியுடன் கழிக்கத் தந்தை தேவையான பொருள் வைத்து விட்டுச் சென்றிருந்தார்.

சென்னையிலே தன் படிப்பைத் தொடர்ந்த கலைச்செல்வி, தன் பதினாலாம் வயதிலே உயர்நிலைப் பள்ளியின் இறுதிப் பரீட்சையிலே தேர்வு பெற்றாள். மகளின் திருமணத்தைக் காலத்திலே முடிக்க ஆசைப்பட்ட தாயை அடக்கி விட்டாள் கலைச்செல்வி. செல்லப் பெண்ணின் விருப்பத்துக்கு அவள் தாயார் குறுக்கே நிற்கவில்லை.

ஆசிரியைப் பயிற்சிப் பள்ளியிலே சேர்ந்து, இரண்டுகள் பயிற்சியும் பெற்று அதில் தேர்ச்சியும் அடைந்தாள் கலைச்செல்வி. சென்னை மண்ணடியிலே ஒரு பள்ளியில் ஆசிரியை வேலையும் கிடைத்து விட்டது.

அந்தப் பள்ளியிலே அவளுக்கு வேலை கிடைக்கக் காரணமாய் இருந்தவன்தான் கார்த்திகேயன். அவன் கலைச்செல்வியுடன் ஆசிரியைப் பயிற்சி பெற்ற அவளுடைய தோழி நளினி என்பவளின் தமையன்.

நளினியின் வீட்டுக்குக் கலைச்செல்வி பல முறை சென்றிருக்கிறாள். அதன் காரணமாய்க் கார்த்திகேயனைக் காணவும், அவனுடன் உரையாடிப் பழகவும் பல சந்தர்ப்பங்கள் அவளுக்கு ஏற்பட்டன.

அவர்கள் வீட்டிலே, கார்த்திகேயன், நளினி இவர்களுடன் இவர்களுடைய தந்தையும் இருந்தார். தாயார் சில வருஷங்களுக்கு முன்பு காலமாகி விட்டிருந்தாளாம். உதவிக்குக் கார்த்திகேயனின் விதவை அத்தை தானிருந்தாள்.

கார்த்திகேயன் நல்ல அழகன். தவிர, பெண்களிடம் கண்ணியமாயும் பண்பு குறையாமலும் நடந்து கொள்வான். கலைச்செல்வி வந்து விட்டால், அவன் தன் அறைக்குச் சென்று தாழிட்டுக் கொண்டு விடுவான்.

கலைச்செல்விக்குத் தன் அண்ணன் மீது நாட்டம் இருப்பதைக் குறிப்பில் உணர்ந்த நளினி, உள்ளூற மகிழ்ச்சியடைந்தாள். தன் அண்ணனுக்கு மட்டும் விருப்பம் இருக்குமானால், கலைச்செல்வி அவனுக்கு எந்த வகையிலும் பொருத்தமான இல்லக்கிழத்தியாகவே அமைவாள் என்று கருதினாள்.

கலைச்செல்வியின் உள்ளக் கருத்தை நளினியும், தங்கையின் உணர்த்தலாலும் அறிந்த கார்த்திகேயன், நாளடைவிலே அவளுடன் சரளமாய்ப் பழகினான்.

அப்போது கார்த்திகேயன் பி.டி. பயிற்சி முடித்து ஒரு பள்ளியிலே ஆசிரியப் பணியாற்றும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தான்.

கார்த்திகேயனைத் தன் கணவனாய் அடைந்து விட்டால் அதைவிடப் பெரும் பேறு இவ்வுலகில் கலைச்செல்விக்கு ஒன்று இருப்பதாய்த் தோன்றவில்லை. நளினியின் உதவிகொண்டு, ஒரு சமயம் கார்த்திகேயனைத் தன் வீட்டுக்கு வரவழைத்து, தன் தாயாரும் அவனைக்காணும் வாய்ப்பை ஏற்படுத்திக்கொண்டாள் கலைச்செல்வி.

முன்பு ஒரு சமயம், என்ன அவசரம்தான் கலியாணத்துக்கு என்று கூறிய தன் மகளுடைய மனம் இப்போது மாறுவது கண்டு மனத்துக்குள் மகிழ்ச்சியடைந்தாள் தாயார். எல்லாம் பருவம் செய்யும் கூத்து என்பது அவளுக்குத் தெரியாது.

திடீரென்று சில எதிர்பாராத நிகழ்ச்சிகள் நடந்து விட்டன கார்த்திகேயனின் குடும்பத்திலே! அவனுடைய தந்தை காலமாகி விட்டார். அடுத்து நளினியும் ஒரு வாரக் காய்ச்சலில் விண்ணுலகு ஏகிவிட்டாள். எந்தத் தோழியை முன்னிட்டு, அவனுடைய வீட்டுக்குச் சென்று அடிக்கடி கார்த்திகேயனுடன் பழகினாளோ, அவள் காலமாகி விட்டாள். இனி கார்த்திகேயனைச் சந்திப்பது எவ்வனம்? தன் தோழியின் வீட்டிலே கார்த்திகேயனைத் தனிமையிலே சந்திப்பது அபவாதத்துக்கு இடம் அளித்து விடுமே! எனவே, கலைச்செல்வி வேதனைப் பட்டாள்.



இந்த நிலையில்தான் கலைச்செல்வியின் ஆசிரியைப் பயிற்சி முற்றுப் பெற்றது. சில இடங்களுக்கு மனுவும் அனுப்பியிருந்தாள். அவற்றுள், கார்த்திகேயன் பணியாற்றும் பள்ளியும் ஒன்று. அந்தப் பள்ளியின் மேற்பார்வையில் உள்ள ஓர் உயர்தர ஆரம்பப் பள்ளியிலே ஓர் ஆசிரியை தேவையாய் இருந்தது. எனவே அந்தப் பதவி கார்த்திகேயனின் சிபாரிசினால் கலைச்செல்விக்குக் கிடைத்துவிட்டது.

பொறுப்பேற்ற அன்று அவனைக் கண்டு நன்றி கூறியபோது, அவளால் தன் இருவித உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்த முடியவில்லை. அன்று தன் அருயிர்த் தோழி காலமாகி விட்டாளே என்ற துயரம். மற்றொன்று, தன்மீது கார்த்திகேயனுக்குள்ள அன்பினால் தேடித் தந்த இந்த வேலைக்காக அவனுக்குக் காட்டிய நன்றியுணர்ச்சி.

கலைச்செல்விக்குக் கலை நிகழ்ச்சிகள் தயாரிப்பதில் அதிக ஆர்வமும் அக்கறையும் இருந்தன. பள்ளியிலே எந்த விழாவானாலும் அதிலே கலைச்செல்வியின் கலை நிகழ்ச்சி இடம்பெறத் தவறாது. ஏன்? மற்றப் பள்ளிகளிலிருந்துகூட அவளுக்கு அழைப்புக்கள் வரும் என்றால் வேறென்ன கூறுவது? குழந்தைகளுக்குப் பாட்டு, நடனம், நடிப்பு, பாத்திர அலங்காரம் எல்லாம் அவள்தான் தயாரிப்பது வழக்கம்.

ஒருநாள் கார்த்திகேயன் கலைச்செல்வியிடம் ஒரு விஷயத்தை வெளியிட்டான்.

"கலைச்செல்வி! நளினி உன்னிடம் ஒரு விஷயத்தைச் சொல்லியிருக்க மாட்டாள். அதாவது எங்கள் தந்தைக்கு இருமனைவிகள் இருந்தார்கள். நானும் நளினியும் இளையாளின் மக்கள். மூத்தாளுக்குக் குழந்தை இல்லை என்றுதான் என் தாயாரை என் தந்தை மணந்து கொண்டாராம். நான் பிறந்த இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு மூத்தாளுக்கும் ஒரு பெண் பிறந்தது. குழந்தை



# காணவில்லை



பெயர் சுபாலி. வயது பத்து. மாநிறம் உயரம் 4½ அடி. சிகப்பு கால் சராய் நீலக்கோடு ஷர்ட்டும் அணிந்திருப்பான். 30.12.60 முதல் அவனைக் காணவில்லை. குழப்படி பையனைக் காண்பவர்கள் தகவல் தெரிவித்தால், புது வருட காலண்டர் ஒன்று இனாமாகத் தரப்படும்.

நெ. மா. அவுட்லெட்டுகம
பெயர் வியாபாரம்..., தண்டையார்

---

பிறந்த ஆறு மாதங்களுக்குப் பிறகு மூத்தாள் கண்மூடிவிட்டாள். குழந்தையைச் சேலத்தில் உள்ள மூத்தாளின் தமக்கை ஏற்றுக் கொண்டாள். பின்னர் சொத்து விஷயமாய் மூத்தாள் வீட்டுக்கும் என் தந்தைக்கும் சிறு பூசல் ஏற்பட்டது. என் தந்தை பிடிவாதக்காரர். அவர்களுக்கு மசிவதில்லை. குழந்தையை அவருடன் அனுப்ப மறுத்து விட்டார்கள். என் தந்தையும் பிடிவாதமாய் இருந்தார். என் தாயார்தான் அவருடைய மனத்தைக் கலைத்து விட்டதாய்க் குற்றம் சாட்டினார்கள். என் தாயாரும் போய் விட்டாள் என் பதினெட்டாம் வயதில்.

"என் தந்தை தெரிந்தோ தெரியாமலோ புரிந்துவிட்ட தவறுக்காக நான் வருந்துகிறேன். என் செல்லத் தங்கை போய் விட்டாள். மற்றொருத்தி சேலத்தில் உறவினருடன் இருக்கிறாள். அவளுக்குக் கல்யாணம் என்று செய்தி எட்டியிருக்கிறது. நான் செல்ல வேண்டியது கடமை. எனக்கு அங்கு வரவேற்பு எப்படி இருந்தாலும் கவலையில்லை. அவளும் நானும் ஒரே தந்தையின் ரத்தத்திலே உதித்தவர்கள். அழியாத உறவினள் அவளும். இன்று என் ஒரே தங்கையான அவளுடைய கலியாணத்துக்கு நான் செல்லத்தான் வேண்டும். நம் திருமணத்துக்கு அவள் தானே நாத்தனார் என்ற முறையிலே வந்து கலந்துகொள்ள வேண்டியிருக்கும்?" என்று கூறிவிட்டுச் சென்றான்.

தங்கையின் கலியாணத்துக்குச் சேலம் சென்ற கார்த்திகேயன் ஒரு வாரம் ஆகி, ஒரு மாதம் ஆகியும் வராமை கண்டு வியப்பும் கவலையும் அடைந்தாள் கலைச்செல்வி.

சில நாட்களுக்கெல்லாம் கார்த்திகேயன் தன் வேலையை ராஜினாமா செய்துவிட்டதாகவும் சேலத்திலேயே சர்க்கார் கல்வி இலாகாவிலே வேலை தேடிக்கொண்டு விட்டதாகவும் அறிந்தபோது, உண்மையிலேயே கலைச்செல்வி திகைத்து விட்டாள். நேர்முகமாய் அவனிடமிருந்து ஒரு தகவலும் வராதது அவளுக்குச் சொல்லொணா வேதனையை அளித்தது.

ஒருநாள் கலைச்செல்வியின் பள்ளித்தோழி ஒருத்தி கூறிய செய்தி அவளைத் திகைக்க வைத்து விட்டது. சேலத்திலே கார்த்திகேயன் உத்தியோகம் மட்டும் தேடிக் கொள்ளவில்லை என்றும், ஒரு காதலியையும் கூடத் தேடிக்கொண்டு விட்டான் என்றும் அறிந்தாள். அந்தப் பெண் பெரிய மனைக்காரர் ஒருவரின் மகள் என்றும், விரைவிலே இருவருக்கும் திருமணமும் நடைபெறப் போகிறது என்றும் தெரிவித்தாள் தோழி. முதலில் இதைக் கலைச்செல்வி நம்பத்தான் இல்லை. பின்னால் கார்த்திகேயனிடமிருந்து வந்த கடிதமே கூறியபோது? கடிதம் சுருக்கமாகவே இருந்தது.

"தவறு செய்து விட்டேன். முன்பின் யோசியாமல் உன்னை மணப்பதாய்க் கூறி விட்டேன். நானும் மனிதன்தானே? இங்கு வேறு பெண்ணை மணக்க முடிவு செய்தாகி விட்டது. சந்தர்ப்பமும் சூழ்நிலையும்தான் இந்த மாற்றத்துக்குக் காரணம். மன்னிக்கவும். கார்த்திகேயன்"

கலைச்செல்வியின் மனக்கோட்டைகள் தகர்ந்து விட்டன. எந்தக் கார்த்திகேயனை முழு மனத்துடன் நேசித்து, அவன் தன்னை மணப்பான் என்று மனப்பால் குடித்திருந்தாளோ, அவன் தன்னை மோசம் செய்து விட்டான். அவன் மூலம் தனக்குக் கிடைத்த இந்த வேலை மட்டும் எதற்கு?

வேலையை அந்தக் கணமே ராஜினாமா செய்து விட்டாள் கலைச்செல்வி. சென்னை வாழ்க்கை கசந்துவிட்ட காரணத்தினால், திருச்சி சென்று விட்டாள் தன் தாயாருடன். அங்கு அவள் தன் சொந்த முயற்சியினால் ஒரு பள்ளியிலே ஆசிரியை வேலையைத் தேடிக்கொண்டு கடந்த இரண்டு ஆண்டுகளாய் அலுவல் புரிந்து வருகிறாள். இந்த இடமாற்றம் அவளுக்கு இதமாயும் விருப்பத் தக்கதாயும் இருந்தது என்று கூற வேண்டும்.

இடையிலே இரண்டு கடிதங்கள் அவளுக்குக் கார்த்திகேயனிடமிருந்து வந்தன. ஒன்று சென்னை விலாசத்திலிருந்து இங்கு மாற்றி அனுப்பப்பட்டிருந்தது. மற்றொன்று நேரடியாய் இந்த விலாசத்துக்கே வந்திருந்தது. இரண்டையும் மறுத்தனுப்பி விட்டாள் கலைச்செல்வி, பெற்றுக் கொள்ளாமலேயே.

அன்று அவள் பள்ளியின் ஆண்டு விழா. திருச்சிக்குப் புதிதாய் மாற்றப்பட்டிருக்கும் மாவட்டக் கல்வி அதிகாரி விழாவுக்குத் தலைமை தாங்குகிறார் என்றும், அவர் மனைவி பரிசுகள் வழங்குகிறார் என்றும் அறிந்திருந்தாள் கலைச்செல்வி.

காரிலிருந்து இறங்கிய கல்வி அதிகாரியையும் அவருடைய மனைவியையும் கண்ணுற்ற கலைச்செல்வி அரவம் கண்ட நிலையை அடைந்தாள்! எனினும் நிலைமையை ஒருவாறு சிரமப்பட்டுச் சமாளித்து, விழாவின் ஒவ்வொரு

விருந்தையும் ஒரு யுகமாய்க் கழித்து விட்டு, விழா முடிந்ததும் வீட்டுக்குப் பறந்து வந்து, சாய்வு நாற்காலியிலே சாய்ந்தாள். தனிமையை விரும்பித் தாயாரையும் கடிந்து கொண்டு அங்கிருந்து அனுப்பிவிட்டாள்.

மறுநாட் காலை எட்டு மணி இருக்கும். பள்ளிக்கு விடுமுறை. தவிர மனம் வேறு குழம்பிக் கொண்டிருந்ததால் இன்னும் படுக்கையிலேயே படுத்திருந்தாள் கலைச்செல்வி. பள்ளியின் சேவகன் வந்து, உடனே தலைமையாசிரியை அவளைப் பள்ளிக்கு வரச் சொன்னதாகக் கூறிவிட்டுச் சென்றான்.

தலைமையாசிரியையின் கட்டளையைப் புறக்கணிக்க முடியுமா? பரபரப்புடன் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு பள்ளிக்குச் சென்றாள் கலைச்செல்வி.

தலைமையாசிரியையின் அறையிலே, தலைமையாசிரியையுடன் கார்த்திகேயனின் மனைவி தெய்வயானையும் உட்கார்ந்திருக்கக் கண்டு, திகைத்தாள் கலைச்செல்வி.

“வாம்மா, கலைச்செல்வி!” என்று வரவேற்ற தலைமையாசிரியை, தொடர்ந்தாள்:

“நேற்று இரவு நீ விழா முடிந்தவுடன் என்னிடம் சொல்லிக் கொள்ளாமலேயே சென்று விட்டாயே! உன் தயாரிப்பை ரொம்பவும் மெச்சினார் கல்வி அதிகாரி. உன்னை அவருக்கு அறிமுகம் செய்து வைக்க விரும்பித் தேடினேன். நீ வீட்டுக்குச் சென்று விட்டதாய்த் தெரிந்தது. ‘அவள் மன நிலை சரியாக இராது. அதனால்தான் போய் விட்டாள்’ என்றார் அதிகாரி. ‘அவளை உங்களுக்குத் தெரியுமா?’ என்றேன். ‘அது பெரிய கதையாயிற்றே!’ என்று கூறினார். காலையில் தெய்வயானையை இங்கு அனுப்புவதாயும், அச் சமயம் கலைச்செல்வியையும் இங்கு வரவழைத்து, இருவரும் சந்திக்கச் செய்தால், விஷயம் புரியும் என்றும் கூறிவிட்டு, அவசர அலுவலாய் மதுரைக்குச் சென்று விட்டார். அவர் விருப்பத்தின்படியே உன்னை இங்கு வரவழைத்தேன். இதோ உனக்கு முன்பு ஸ்ரீமதி தெய்வயானையும் வந்து விட்டார்.”

தெய்வயானையை வெறுப்புடன் நோக்கினாள் கலைச்செல்வி.

“சகோதரி! என்னைப் பார்த்தால் உங்களுக்கு வேம்பாய் இருக்கிறது. விழுங்கி விடலாம் போல் கூட இருக்கும்!” என்று தொடங்கினாள் தெய்வயானை கலைச்செல்வியை நோக்கியபடியே.

கலைச்செல்வி அவள் பக்கமே திரும்பவில்லை. மறுமொழியும் பகரவில்லை.

“சகோதரி! உலகில் எந்த மனிதன்தான் தவறு புரியவில்லை?” என்று கேட்டாள் தெய்வயானை தொடர்ந்து.

“பிறரை நான் ஏன் குற்றம் சாட்ட வேண்டும்? தவறு செய்தவள் நான்தான்!”

“நீங்களா?”

“ஆம்! அவர் மீது அன்பு வைத்து, என்னையே மணப்பார் என்ற நம்பிக்கையும் வைத்தது என் தவறுதானே? பார்க்கும் பெண்கள் மீதெல்லாம் மனத்தை ஓடவிட்டுப் பச்சோந்தி போல் மனம் மாறக்கூடிய தன்மையுள்ளவர் என்பதை உணராமல் போனது என் குற்றமல்லவா? அவரை ஏன் குற்றம் சாட்ட வேண்டும்? போகட்டும்! உங்கள் மீதாவது அவருக்கு அன்பு என்றென்றும் நிலைத்திருக்கட்டும்...” என்று படபடவென்று பொரிந்துவிட்டு எழுந்தாள் கலைச்செல்வி.

அவளைத் தடுத்து நிறுத்தும் வகையிலே, “சகோதரி, ஒரு நிமிஷம்!” என்றாள் தெய்வயானை.

“நீங்கள் கூற விரும்புவது தெரிகிறது. தன் தவறை அவர் உணர்ந்து, மன்னிக்குமாறு என்னைக் கோருகிறார். அவர் அன்பிலே நீங்கள்...!” கலைச்செல்வி படபடப்பு இல்லாமலேதான் இப்போது பேசினாள்.

“நீங்கள் கற்பனை செய்வது தவறு. அவர் தவறு செய்ய விருந்தார். ஆனால் தக்க சமயத்திலே விழிப்படைந்தார். அம் மாதிரி அவரை விழிப்படையச் செய்தவள் அந்தப் பெண்தான்!”

“ஆ! என்ன சொல்கிறீர்கள்?” கலைச்செல்வி பரபரப்படைந்தாள்.

“அவர் மனத்தைப் பேதலிக்கச் செய்த அந்தப் பெண், ‘உங்கள் உள்ளத்திலே என்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணுக்காவது இடம் தந்திருக்கிறீர்களா? மனம் விட்டுச் சொல்ல வேண்டும்’ என்று நேரடியாகக் கேட்டாள்....!”

“உம்! என்ன சொன்னார் அவர்?”

“என்ன சொல்வார்? மௌனமாய்த் திரும்பி விட்டார். உடனே உங்களுக்குக் கடிதம் எழுதினார், தம் தவறைக் கூறி உங்கள் மன்னிப்பையும் நாடி. ஆனால் நீங்கள்தான் அதை மறுத்து விட்டீர்களே! அவர் எழுதிய மற்றொரு கடிதத்தையும் கூட நீங்கள் எடுத்துப் பார்க்கவில்லை...”

“அப்படியானால் கார்த்திகேயன் இன்னும் மணம் ஆகாமல்தான் இருக்கிறாரா?” என்று கேட்டாள் தலைமையாசிரியை.

“ஆம்! அடுத்து நீங்கள் கேட்க விரும்பும் கேள்விக்கும் நானே மறுமொழி கூறிவிடுகிறேன். என் பெயரைக் கொண்டு, நான் அவருடைய மனைவி என்றுதான் எண்ணியிருப்பீர்கள். அது தவறு. என் கணவரின் பெயரும் கார்த்திகேயன்தான். ஏன்? இன்னும் சிக்கலாய் இருக்கிறதா? நான்தான் கார்த்திகேயனுடைய தங்கை! அதாவது அவருடைய மாற்றாந்தாயின் மகள். பழைய பகை என் திருமணத்துடன் தீர்ந்துபோயிற்று. சில தினங்கள் திருச்சியில் வந்து தங்கும்படி அண்ணா கேட்டுக் கொண்டதின்பேரில், இங்கு வந்தேன் என் கணவருடன். என் அண்ணாவை விழாவுக்குத் தலைமை வகிக்க அழைப்பதற்காக உங்கள் உதவி ஆசிரியை வந்த சமயம் நானும் வீட்டில் இருந்ததைக் கண்டு, தவறாய் என்னை எடுத்துக் கொண்டதன் பயனாக, என் பெயரையும் விழாவிலே சம்பந்தப்படுத்தி விட்டீர்கள். அண்ணாவும் என் கணவரும் நகைத்தார்கள். எனக்கும் சிரிப்புத்தான் வந்தது. ஆயினும் வலிய வரும் கௌரவத்தையும் பெருமையையும் ஏன் விட்டுவிட வேண்டும் என்று தோன்றியது” என்று கூறினாள் தெய்வயானை நகைத்தவாறே.





வேலையிலுள்ள பெண்மணியோ
அல்லது குடும்பஸ்திரீயோ
எல்லாருக்குமே ...

# சதாவ்ரேக்ஷ

நன்மையளிக்கிறது





மாதருக்கான சிறந்த டானிக்
தாய்ப்பால் விருத்திக்கும்
உடம்பு தேறுவதற்கும் மிகவும்
உதவியளிக்கும்



ஜண்டு பார்மஸ்யூடிகல்
வொர்க்ஸ் லிட்.,
தெற்கு கோகலே ரோடு,
பம்பாய் 28.

Graphic-60-Z-1

ஸ்டாக்கிஸ்டுகள்

மெஸர்ஸ் தாமோதர் & கோ., 113, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை-1
மெஸர்ஸ் கௌசல்யபுரா மெடிகல் ஸ்டோர்ஸ், 14/342, மில் ரோடு, கோயமுத்தூர்

# சொர்க்கத்தின் நிழல்

## அத்தியாயம் பதினொன்று

மனித வாழ்க்கை ஒரு தீப்பெட்டியைப் போன்றது. அதில் உராய்ந்து செல்லும் ஒவ்வொரு விநாடியும் ஒரு தீக்குச்சிக்கு ஒப்பானது. விதியின் கரங்களால் சொண்டும் அந்தத் தீக்குச்சிகளில் சில நமத்துப் போகலாம்; அப்போது வாழ்க்கை சாரமற்றும், சலனமற்றும் காணப்படுகிறது. சில குச்சிகள் மத்தாப்பூத் தன்மையுடன் வர்ண விசித்திரம் காட்டலாம்; அப்போது வாழ்க்கை இனிமையாகவும் எழிலாகவும் சுவையாகவும் தென்படுகிறது. சில குச்சிகள் திடீரென்று தீப்பற்றி எரியலாம்; அப்போது வாழ்க்கை துன்பமும் துயரமுமாக, கசப்பும் புளிப்புமாக, வெறுப்பும் வேதனையுமாக, சுமையும் சோதனையுமாக ஆகிறது. இப்படிச் சுட்டுப் புண்படுத்தும் இந்த மூன்றாம்வகைத் தீக்குச்சிகளை மத்தாப்புக் குச்சிகளாக மாற்றும் முயற்சியிலேயே மனித சக்தி முழுதும் செலவாகிறது. அது ஒரு தொடர்ப் போராட்டமாகவே நீடிக்கிறது. ஆயினும் என்ன? அந்தக் கந்தகத் தீக்குச்சிகளில் ஏதேனும் ஒன்று திடீரென்று சர்வ வல்லமையுடன் உராய்ந்து அகண்டாகாரமாகத் தீப்பற்றிக் கொழுந்து வீசி, மலை போன்ற பொய்யுருவில் வளர்ந்து நின்ற மனித வாழ்க்கை எனும் அற்பமான பெட்டியை அலட்சியமாகத் தீய்த்துப் பொசுக்கிச் சாம்பலாக்கி, அச் சாம்பலில் அதுவும் ஒரு சாம்பல் துகளாக இணைந்து அணைந்து காற்றோடு காற்றாய்ப் பறந்து மறைந்து விடுகிறது.

இப்படித்தான் விவேகானந்தனும், அந்தக் கந்தகத் தன்மை வாய்ந்த கடந்த சில விநாடிகளின் வெங்கனலால் சுட்டுப் பொசுக்கப்பட்ட தன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு அங்கிருந்து எழுந்து போவதை, செயலற்ற மரக்கட்டைபோல் அமர்ந்து வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் சாரங்கன்.

ஜெகசிற்பியன்

தான் கொண்டு வந்து கொடுத்த ஒரு சிறிய கடிதக் கட்டினுள் இவ்வளவு பெரிய இடியும் மின்னலும் அடக்கமாகியிருக்குமென்றோ, அல்லது அது இத்தனை கோரமான எதிர்மறை வடிவில் திரும்பிச் செயல்படும் என்றோ அவன் எள்ளளவும் எதிர்பார்க்கவில்லை. தன் ஆருயிர் நண்பனுக்கு ஏதோ ஒரு விலைமதிப்பற்ற பரிசுப் பொருளைக் கொண்டு வந்திருப்பது போலவும், அது அவன் செல்ல விரும்பும் காதல் சாம்ராஜ்யத்தின் நுழைவுச் சீட்டாக இருக்கப் போகிறதென்றும் எண்ணியே இறும்பூதெய்தியிருந்தான். ஆனால், 'விதியின் கரங்களால் சுழற்றி வீசப்படும் நிகழ்ச்சிகள் விரைந்த வேகத்துடன் பாய்ந்து வந்து கொஞ்சங்கூடக் குறி பிசகாமல் மனித வாழ்வைத் தாக்குகின்றன' என்ற ஓர் உண்மையைத் தவிர அவனுக்கு இப்போது வேறொன்றுமே புலப்படவில்லை.

பாவம், விவேகானந்தன்! அவனுடைய மனநிலையை நினைத்துப் பார்க்கவே சாரங்கனுக்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. அதிலும் அந்தப் பரிதாப நிலையைத் தான் காரணமாகி விட்டோமே என்ற எண்ணம் அவனை வெகுவாக வாட்டிப் பிழிந்தது. இந்த இரக்க உணர்ச்சி, சினமாக மாறவே, அவன் தேவகியைத் தன் மனமாரச் சபித்துத் தீர்த்தான்.

'என்னதான் இருந்தாலும், ஒரு பெண் ஓர் ஆடவனை அவமானப்படுத்த இத்தனை ஈவிரக்கமற்ற செயலையா கடைப்பிடிப்பது? ஆண் இனத்தின்மேல் எத்தனை அலட்சிய மனோபாவம் கொண்டிருந்தால் அவள் இந்த நெஞ்சழுத்தமான காரியத்தைச் செய்யத் துணிந்திருப்பாள்?'

ஆத்திரப்பட்ட சாரங்கனின் மனம் இப்படிச் சீறிக் குமுறியது. ஆனால், சற்றைக்கெல்லாம் அமைதியடைந்த அவன் நிதானமாகச் சிந்திக்கலானான்:

"ஒரு பெண்ணின் மனத்தை அறியாமல் அவளுக்குக் காதல் கடிதம் எழுதுவது எவ்வளவு பெரிய முட்டாள்தனம்! அம்மாதிரிக் கடிதம் பெண்களின் மனத்தைக் கவர்வதற்குப் பதிலாக வெறுப்பையும் துவேஷத்தையுமே வளர்க்கின்றன என்பதுடன், அவற்றால் அவர்களுக்கு வீணான அபவாதங்களும் மாசும் ஏற்பட வழியாகிறது என்பதை ஆண்கள் ஏன் எண்ணிப் பார்ப்பதில்லை? அதிலும், அறிவை வழிபடும் விவேகானந்தனே இப்படி ஒரு மதியீனத்தைச் செய்திருக்கிறானென்றால் அதை என்னென்பது? கேவலம், காதல் என்ற ஓர்

அற்ப உணர்ச்சி. மகத்தான சக்தி வாய்ந்த மனித அறிவை எத்தனை சீக்கிரம் இடறிக் கவிழ்த்து விடுகிறது! இரண்டு நாட்களுக்கு முன் தேவகியைப் பற்றி அவன் சொல்லும்போது, அவளை அவன் விழுந்து விழுந்து காதலிப்பது போலல்லவா எனக்குத் தோன்றியது? அப்படிச் சொன்னது அனைத்தும் அவனுடைய குருட்டு மனத்தின் வெறும் கற்பனைகள்தாமா? இல்லையென்றால் அவன் ஏன் இப்படியொரு வெடிகுண்டைத் தூக்கியெறிகிறான்? காதல் என்ற கறுப்புக் கண்ணாடியை மாட்டிக் கொண்டவனுக்கு அறிவுதான் சூன்யமாகிறதென்றால் கண்கள்கூடவா கழன்று விழுந்து விடும்?'

பித்தனைப்போல் வாய்விட்டுச் சிரித்த சாரங்கனின் மனத்தில் வேறொரு விசித்திரக் கேள்வி பிறந்தது:

'விவேகானந்தன்தான் தேவகியைக் காதலிக்கிறானே தவிர, தேவகி அவனைச் சட்டை செய்யவில்லை என்ற விஷயம் அந்த நாடகக்காரி கோமதிக்கு முன் கூட்டியே தெரிந்திருக்குமோ? அதனால் தான் அவள் தன் முயற்சியில் இன்னமும் நம்பிக்கை இழக்காமல் உறுதியுடன் இருந்து வருகிறாளோ?'-

உரக்கச் சிரித்த சாரங்கன் எதையோ நினைத்துக் கொண்டவனாய்ச் சட்டென்று துள்ளி எழுந்தான்.

''அடாடா! வெளியே ஆட்டோ ரிக்ஷாவை நிற்கச் சொல்லி வந்ததை அடியோடு மறந்து விட்டோமே!'' என்று கையை உதறியவாறு, காரியாலயக் கதவுகளை அவசரமாகச் சாத்திப் பூட்டிக் கொண்டு மளமள வென்று கீழே இறங்கி ஓடிய சாரங்கன் அங்கே அந்த ஆட்டோ ரிக்ஷா இல்லாததைக் கண்டு திடுக்கிட்டு விட்டான்.

ஆட்டோ ரிக்ஷா எங்கு போயிற்று? அதில் உட்கார்ந்திருந்த கமலி எங்கே சென்றாள்? சற்றுமுன் கீழே இறங்கி வந்த விவேகானந்தன் அவளைப் பார்த்துத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போய் விட்டானா? அல்லது அதற்கு முன்பே அவள் இறங்கிச் சென்று விட்டிருப்பாளா? அப்படியானால் அவளல்லவா மீட்டர் தொகையைக் கொடுத்திருக்க வேண்டும்? பணம் கொடுக்கப் பயந்து கொண்டுதான் சாரங்கன் இப்படிப் போக்குக் காட்டிவிட்டுப் போய் விட்டான் என்று எண்ணி யிருப்பாளா? அல்லது இந்த ஊருக்குப் புதியவளான அவளை ஆட்டோ ரிக்ஷாக்காரன் ஏதாவது சொல்லி ஏமாற்றி எங்கேயாவது கிளப்பிக் கொண்டு போய் விட்டிருப்பானோ?

சாரங்கன் பீதியடைந்து விட்டான். சற்று நேரம் வரை அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. அங்குமிங்குமாக ஓடி அக்கம்பக்கத்திலுள்ளவர்களை விசாரித்தான். எல்லாரும் உதட்டைப் பிதுக்கி விட்டார்கள். சாரங்கனின் பயம் மிகுதியாயிற்று. ஏதேதோ பயங்கர எண்ணங்கள் தோன்றி அவன் மனத்தை ஒரே யடியாகக் கலக்கிக் குழப்பின. போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ப் புகார் செய்யலாம் என்ற நினைப்புடன் தலைதெறிக்க ஓடினான். ஆனால் நடு வழியிலேயே மற்றோர் எண்ணம் வரவே திகைத்து நின்றான். 'கமலி தன் வீட்டுக்குப் போய் விட்டாளா இல்லையா என்பதைத்



தெரிந்து கொள்ளாமல் போலீஸில் புகார் செய்தால் அப்புறம் வீணான தொல்லைகள் வந்து சேருமே?' எனவே, சாரங்கன் அங்கிருந்து திரும்பி டாக்டர் ராமநாதனின் வீட்டை நோக்கி விரைந்தான்.

எண்ண அலைகளுக்கும் இடும்பைக் கூறுன வயிற்றுக்கும் என்ன சம்பந்தமோ



பசி என்ற உணர்ச்சியே இன்றிப் பதுமை போல் உட்கார்ந்திருந்தாள் தேவகி. மனோகரமான கற்பனைகளில் மனத்தைச் சஞ்சரிக்க விட்டு நேரத்தைக் கொள்ளை போகச் செய்வதென்பதும், அதனால் ஊணும் உறக்கமும் மறந்து போவதும் அவளுக்குப் புதிய அனுபவங்கள் அல்ல. அந்த இன்பானுபவங்களைப் பெறுவதிலேதான் தன் வாழ்க்கையின் லட்சியமே அடங்கியிருக்கிறது என்று எண்ணிக் கொண்டிருப்பவள். ஆனால் இன்றைய மனத்தின் லயிப்போ அதற்கு முற்றிலும் மாறான ஓர் அனுபவத்தை அவளுக்கு உணர்த்திக் கொண்டிருந்தது.

கற்பனையில் நீந்தும் மனத்தின் அனுபவம் வேறு; சிந்தனையில் புரளும் மனத்தின் அனுபவம் வேறு. அதிலும் அன்றாடச் சிந்தனைகளில் மனத்தைச் செலுத்தி உழல ஆரம்பித்து விட்டால் அதைப் போன்ற கொடிய வேதனை வேறொன்றும் இருக்க முடியாது. அத்தகைய ஒரு வேதனையைத்தான் இப்பொழுது தேவகியும் அனுபவித்துக் கொண்டிருந்தாள். அன்றாட யதார்த்த நிகழ்ச்சிகளில் தன்னைச் சம்பந்தப்படுத்திக் கொள்ளாமல் - சம்பந்தப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியத்தையும் உண்டு பண்ணிக் கொள்ளாமல்-ஏதோ ஒரு தனித்த விதி வழியில் வந்தவள் போல் எந்நேரமும் ஏகாந்தத்தையே நாடி ரம்மியமான கற்பனை வெளியில் சஞ்சரித்துப் பழகிப் போன அவளுக்கு இன்றைய இந்த அனு



"நீங்க 'பெரு வெள்ளம்'னு ஒரு நாவல் எழுதிகிட்டு இருந்தீங்களே அதன் முடிவு என்ன ஆச்சு?"

"என்ன ஆச்சு முடிவு? எழுதி வச்சிருந்தேன். வெள்ளத்திலே அடிச்சுண்டு போயிட்டுது!!"

பவம் சகிக்கக் கூடியதாக இல்லை. என்ன செய்வது? வானத்தில் பறக்கக் கற்றுக் கொண்டு விட்ட பறவை வான வெளியிலேயே வாழ்ந்துவிட முடியுமா? எப்போதிருந்தாலும் அது பூமிக்கு வந்து தானே ஆக வேண்டும்! அப்படி இறங்க மனமின்றியே இறங்கிவந்த வானம்பாடியைப் போலத்தான் இப்போது அவள் அமர்ந்திருந்தாள்.

அவளின் இந்த இரங்கத்தக்க நிலைக்கு யார் காரணம்? மோகன சுந்தரமா? விவேகானந்தனா? பாவம், சாரங்கனைத் தான் சொல்ல வேண்டும்.

'விவேகானந்தன் எழுதிய கடிதத்தைச் சுக்கல்நூறாகக் கிழித்து உறையிலிட்டு ஒட்டி அதை அவனிடமே சேர்த்து விடும்படி சாரங்கனிடம் கொடுத்தது சரிதானா?' என்ற கேள்வியுடன் ஆரம்பித்த அவளுடைய சிந்தனை தான் இன்னமும் முடிவில்லாமல் நீண்டு கொண்டேயிருக்கிறது.

ஆகா, அது என்ன அழகான கடிதம். அவனது உள்ளத்து உணர்ச்சிகளையெல்லாம் பிழிந்தெடுத்து உருவாக்கிய ஓர் உன்னத இலக்கியச் சொல்லோவியம் போலல்லவா அது வரையப் பெற்றிருந்தது. அதிலுள்ள ஒவ்வொரு வார்த்தையும் அவனது நெஞ்சின் நாளங்களை ஜீவத் துடிப்புடன் விளக்கும் வண்ணச் சித்திரம் போலல்லவா அமைந்திருந்தது. வெறும் வார்த்தைகளைக் கொண்டே மனத்தின் வேட்கையைப் பொலிவுடன் உருப்படுத்திக் காட்ட முடியும் என்பதை அவன் அந்தக் கடிதத்தில் நிரூபித்திருந்தான். வரம்பு மீறிய ஓர் எழுத்தையோ, வக்கணையற்ற ஒரு சொல்லையோகூட அவன் அதிலே பிரயோகப்படுத்தவில்லை. எல்லாம் வல்ல ஆதிசக்தியின் சமூகத்துக்கு, அவளையே இரவும் பகலும் தியானித்துப் பூஜித்துக் கொண்டிருக்கும் ஓர் எளிய பக்தன், நிஜமான பணிவுடனும் பேரன்புடனும் தன் அந்தராத்மாவிலிருந்து உதிர்த்தெடுத்த குருதிப் பூக்களைக் கொண்டு பக்தி பூர்வமாகத் தொடுத்து விண்ணப்பித்துக்கொண்ட ஒரு பாமாலையாகவே அது விளங்கியது. விலைமதிப்பற்ற அரும் பெரும் நூல்களில் ஒன்றாகச் சேர்த்து வைத்துக் காப்பாற்றக்கூடிய அத்தனை சிறப்பும் அந்தக் கடிதத்தில் அடங்கியிருந்தது. அப்படி ஒரு கடிதம் எழுதியதற்காகவே அவனை எந்தப் பெண்ணும் கண்ணை மூடிக் கொண்டு காதலித்து விடலாம்.

ஆனால் அக் கடிதத்தைத் தேவகியோ துச்சமாக எண்ணிக் கிழித்து அவன் முகத்தில் வீசி எறிவது போல் அவனிடமே கொடுக்கும்படி சொல்லி விட்டாள். பாவம், அவன் எத்தகைய அதிர்ச்சி அடைந்திருப்பான். எவ்வளவு பெரிய ஏமாற்றத்தால் வெந்து வெடித்திருப்பான்.

பூவினும் மென்மை வாய்ந்த தேவகியின் மனம் இதை எண்ணி யெண்ணி ஆறாத் துயரடைந்தது. அவள் எப்போதுமே எந்த உண்மைகளையும் எத்தகைய திரைகளைக் கொண்டும் மூடி மறைக்க விரும்பாதவள். இந்த உலகமே ஒரு திறந்த புத்தகமாக இருக்க வேண்டுமென்று விரும்புபவள். அப்படிப்பட்டவள் தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ள நினைப்பாளா?

அது அவளுக்கே நன்றாகத் தெரிகிறது. விவேகானந்தனை என்றைக்கு முதன் முதலில் சந்தித்தாளோ அன்றே, அந்த விநாடியே அவளுடைய மனத்தின் விளிம்பில் ஓர் இன்பச் சிலிர்ப்பு ஏற்பட்டதை அவள் உணர்ந்தேயிருந்தாள். 'உன்னமெழும் பொற்பாயில்' என்ற அவனின் அப்'பொற்கனவு'க் கவிதையை இசையுடன் பாடக் கேட்டு உணர்ச்சி வசப்பட்டாளே, அப்போது அவனுடைய எழிலார்ந்த வதனம் அவள் மனத்தில் ஏதோ ஒரு பனிச் சித்திரம்போல் பதிந்து போனதை அவளால் மறந்து விட முடியுமா? அதன்பின் அவனுடைய பண்புமிக்க பேச்சையும், கபடமற்ற சிரிப்

# இந்தியாவின் தொழில்வளத்திற்கு உதவும்போதே உங்களுக்கும் உத்திரவாதமான லாபம் கிடைக்கின்றது...

## தி மதறாஸ் இண்டஸ்டிரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிமிடெட்

38, ஒயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14

பிக்சட் டிபாசிட்டுகள் இப்பொழுது கார்ப்பரேஷனில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. பலவகை கால கெடுவிற்கு வட்டி விகிதம் பின் வருமாறு: 1 வருஷம்: ௹ 1-க்கு 4%; 2 வருஷங்கள்: ௹ 1-க்கு 4¼%; 3 வருஷங்கள்: ௹ 1-க்கு 4½%; 4 வருஷங்கள்: ௹ 1-க்கு 4¾%; 5 முதல் 20 வருஷங்கள் வரை ௹ 1-க்கு 5%.

சென்னை அரசாங்கத்தின் தொழில், லேபர் & கூட்டுறவு இலாகாவில் வெளியிட்ட 1957 ஜூலை மாதம் 11ம் தேதியிட்ட G. O. Ms. நிர். 2316 அறிக்கையில் இந்த டிபாசிட்டுகளின் அசல் மற்றும் வட்டிக்கு சர்க்கார் எவ்வித நிபந்தனையின்றி உத்திரவாதம் அளித்துள்ளனர்.

MIIC-1-58

---

# 'அனஸின்'

## இப்பொழுது சுகாதார முறையில் ஸீலிட்ட புதுமாதிரியான ஸெல்லோபேன் பாக்கட்டுகளில் கிடைக்கிறது

**4 மருந்துகள்**

அடங்கியுள்ள

**அனஸின் மிகச் சிறந்தது**








புதுமாதிரியாக சுகாதார முறையில் ஸெல்லோபேன் பாக்கெட்டுகளில் கிடைக்கும் 'அனஸின்' ஒரு டாக்டர் குறித்துக் கொடுக்கும் பாதுகாப்பான மருந்துக்கு ஒப்பாக, இதில் விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகள் ஒன்றுகலந்துள்ளதால், வலிகளினின்று அதிவிரைவில் பூரண நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' (1) தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, நரம்புவலி ஆகியவற்றிற்கு அதிவிரைவில் நிவாரணம் அளிக்கிறது. (2) படபடப்பைப் போக்கி, சாந்தமளிக்கிறது—இதனுடன் இளைப்பாறிய பலனைப் பெறுவீர்கள். (3) சோர்வை விரட்டுகிறது. (4) ஜுரத்தைத் தணிக்கிறது. நான்கு மருந்துகள் அடங்கியுள்ள 'அனஸின்' வலிகளினின்று நிவாரணம் பெற மிகவும் சிறந்தது. வீட்டில் எப்பொழுதும் 'அனஸின்' வைத்திருங்கள்.

32 வில்லைகள் அடங்கிய, ஈரம் இடங்கொடாதவாறு அடைக்கப்பட்ட சீசாக்களிலும் கிடைக்கிறது.

Registered User: GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD.

# ரோஜாவின்
# நறுமணம்..

ஒரு பவுண்டு ரோஜா
எண்ணெய் தயாரிப்பதற்கு
ஏறக்குறைய 4000 பவுண்டு
ரோஜாக்கள் வேண்டியிருக்கிறது.
ஆனால் கோத்ரெஜ் நெ. 1 லிருந்து
ரோஜாக்களின் ஆனந்தமயமான
நறுமணத்தை நீங்கள்
பெறலாம். ரோஜாவின் இனிய
நறுமணம் பெரிய-சைஸ்
நெ.1 ல் மிகச்சிறந்தபாணி
யில் சேர்க்கப்பட்டு
இயந்திரத்தினால்
உரையிடப்பட்டுள்ளது.






**கோத்ரெஜ்**
**நெ.1** ஸ்நான சோப்
பெரிய-சைஸ்
சிறந்தது. சுதேசியும் கூட

**கோத்ரெஜ்** சோப்புகளில் புகழ்பெற்ற பெயர்

மையும், அடக்கமான நன்னடத்தையையும், ஆழ்ந்த அறிவுக் கூர்மையையும், இனிய சுபாவத்தையும் கேட்டபோதும் பார்த்தபோதும் கேள்விப்பட்டபோதும் அவள் மனத்தில் படிந்திருந்த அந்தப் பளிச் சித்திரம் சிறுகச் சிறுகத் தெளிவடைந்து வந்ததை மறுத்துவிட முடியுமா? இறுதியில், ராமநாதனும் சுந்தரியம்மாளும் சேர்ந்து, அவளை அவனுக்கு மணம் முடித்து வைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் விஷயத்தை அவள் சிறிது நாள் கடந்து தெரிந்து கொண்டாள். என்றாலும், அதை முதலில் தெரிந்து கொண்ட அந்தக் கணத்தில் அவளுடைய மனம் அடைந்த உவகைச் சிலிர்ப்பை அவளால் இல்லையென்று சொல்லிவிட முடியுமா?

இத்தனைக்கும் பின் திடீரென்று அவள் ஏன் இப்படி வக்கிரமடைந்து அவனை வெறுத்துச் சிறுமைப்படுத்தத் துணிந்தாள்? அவனிடம் என்ன குறையைக் கண்டு அவள் காதலை ஏற்க மறுத்தாள்?

இங்குதான் அந்த விசித்திரப் பெண்ணின் ஒரு விநோத மனப்பாங்கு அடங்கியிருந்தது.

விவேகானந்தனின் அழகும், அறிவும், பண்பும் பெரும் போக்கும் அவள் உள்ளத்துக்கு நிறைவைத் தந்து அதில் ஓர் இன்பத் துடிப்பைச் சிருஷ்டித்தன என்பதென்னவோ உண்மைதான். அவ்வாறில்லையாயின் அவள் அவனிடம் முகம் கொடுத்துப் பேசியிருக்கவே மாட்டாள். ஆனால், அந்த நிறைவுகளுக்கெல்லாம் மேலாக வேறு ஏதோ ஒன்றை அவனிடம் தேடிக் காண இத்தனை நாட்களாக முயன்று கொண்டிருந்தாள் என்ற உண்மை அவள் ஒருத்திக்குத்தான் தெரியும். அதை - அவளுக்கு மட்டுமே தெரிந்த அந்த ஒன்றை - அவனிடம் அவள் எத்தனை ஆவேசமாகத் தேடினாள் என்ற உண்மையும் அவளுக்கு மட்டுமே தெரியும். ஆடாமல் அசையாமல் எரியும் அகல் விளக்கின் தீக்கொழுந்து போல் நின்று அவள் அதை அவனிடம் தேடினாள். நம்பிக்கையுடனும் பொறுமையுடனும் தேடிக்கொண்டேயிருந்தாள்.

பாவம், தேவகி - அவள் நம்பிக்கை பொய்த்து விட்டது. ஏற்கனவே சிறுகச் சிறுக நைந்து வந்த அந்த நம்பிக்கை அன்றொரு நாள் கடற்கரையில் விவேகானந்தன் ஒரு பிச்சைக்காரச் சிறுவனின் தகரக் குவளையில் பிடி மண்ணை அள்ளிப் போட்டதைப் பார்த்த அந்தக் கணமே படீரென்று அறுந்து விட்டது.

தேவகி என்ன, ஒரு மனிதப் பெண் தானா?...

“என்னம்மா, தேவகி! இன்னும் நீ சாப்பிடவில்லையாமே?” என்று பரிவுடன் கேட்டுக் கொண்டே மாடிக்கு வந்தார் சிவப்பிரகாசம்.

மனம் சிவக்கச் சிந்தனையில் ஆழ்ந்திருந்த தேவகி தன் மெல்லுடலைச் சிலிர்த்துக் கொண்டு எழுந்து, “என்ன அப்பா, இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டீர்கள்? இன்றைக்கு நீங்கள் கம்பெனிக்குப் போகவில்லையா?” என்று சற்றே வியப்புடன் கேட்டாள்.

மகளின் முகத்தையே பார்த்துக் கொண்டு வந்த தந்தை மெல்லச் சிரித்தவாறு அமர்ந்து, “கம்பெனியிலிருந்து தான் வருகிறேன், மகளே!” என்றார்.

“டிரைவர் வந்து உங்களுக்குச் சாப்பாடு எடுத்துக்கொண்டு போனானே; நீங்கள் இன்னும் சாப்பிடவில்லையா?”

“இல்லை, மகளே! இன்றையப் பகல் சாப்பாட்டை உன்னுடன் சேர்ந்து சாப்பிடவேண்டும்போல் தோன்றியது. வந்து



விட்டேன்” என்று மீசைப் புதர் விரியச் சிரித்தார் சிவப்பிரகாசம்.

இவ்வளவு நேரச் சிந்தனைச் சூட்டினால் வாடிக் கருகியிருந்த தேவகியின் முகம் கொஞ்சமாக மலர்ந்தது. “இன்றைக்கு என்ன, நம் வீட்டில் விருந்தா, அப்பா?” என்று குறும்பாகக் கண்களைச் சிமிட்டிக் கேட்டுக் கொண்டே அவர் அருகில் நெருங்கிச் சென்றாள்.

“ஆமாம், மகளே! ஆனால் இப்போதல்ல; இன்று மாலை!”

“எனக்குத் தெரியாதே! என்ன விசேஷம்?” என்று கேட்டாள்.

“உன் அன்புக்குரிய சுந்தரி மாமியும், டாக்டர் ராமநாதனும் இன்று மாலை நம் வீட்டுக்கு வரப் போகிறார்கள்.”

தேவகியின் முகம் சட்டென்று சுருங்கியது. அவள் ஏதோ ஒன்றை உடனே புரிந்து கொண்டவளைப் போல் மெல்லத் தலையசைத்துக் கொண்டாள்.

“என்ன தேவகி? ஏன் மௌனமாகி விட்டாய்? உனக்கு மகிழ்ச்சிதானே?”

தேவகி மௌனமா யிருந்தாள்.

சிவப்பிரகாசம் தம் மகளை உற்றுப் பார்த்தார். அவர் முகத்தில் மகிழ்ச்சியும் கலவரமும் மாறி மாறித் திரை விரித்தன. சற்று நேர மௌனத்துக்குப் பின் தம் மீசையை இதமாக வருடியவாறு, "தேவகி! உன்னிடம் நீண்ட நாட்களாக ஒரு நல்ல விஷயத்தைச் சொல்ல வேண்டுமென்றிருந்தேன்..." என்று இழுத்தார் கரகரத்த குரலில்.

தேவகி சட்டென்று நிமிர்ந்து தன் தந்தையை ஏறிட்டு நோக்கினாள். பிறகு ஒரு துள்ளுத் துள்ளி எழுந்து சற்றுத் தொலைவில் போய் நின்று, பசுமை பூத்த வானவெளியை ஜன்னல் வழியே வெறித்து நோக்கினாள். மறுகணம், அவளது நீலக்குவளை மலர் போன்ற கண்களிலிருந்து மாலை மாலையாகக் கண்ணீர் பெருக்கெடுத்து வழிந்தோட ஆரம்பித்தது.

## அத்தியாயம் பன்னிரண்டு

செவியில் கனல் புகுந்தாற்போல் ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்து விட்டார் டாக்டர் ராமநாதன். சற்று நேரம்வரை அவரால் ஒன்றுமே பேசமுடியவில்லை. சட்டென்று விரைந்து போய் விவேகானந்தனின் அறைக் கதவைத் திறந்து உள்ளே எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பி வந்து, "ஏனம்மா, நீங்கள் சொல்வது உண்மை தானே?" என்று பரபரப்புடன் கேட்டார்.

வராந்தாச் சுவரோரம் ஒதுங்கித் தலை குனிந்த வண்ணம் நின்றிருந்த அபரஞ்சியம்மாள் கண்ணீர் மல்கிய கண்களுடன் டாக்டரைப் பார்த்து, "ஆமாம், ஐயா! நம்ப தம்பிதான் அந்த வக்கீல் நோட்டீஸை அனுப்பியிருக்கிறார். என் மகன்பேரில் அவருக்கு ரொம்பக் கோபம். அது நியாயம்தான். என் பிள்ளை அந்தக் கச்சேரியிலே அப்படி நடந்து கொண்டது தவறுதான். ஆனால், வேண்டுமென்று அவன் அந்தமாதிரி நடந்திருக்க மாட்டான். அது அவனுடைய குணக்கோளாறு. சிறு பிள்ளைத் தனம். தம்பிக்கே இதெல்லாம் நன்றாகத் தெரியும். தெரிந்திருந்தும், பத்தாயிரம் ரூபாய் நஷ்ட ஈடு கேட்டிருக்கிறார். நாங்கள் எங்கே ஐயா போவோம், இவ்வளவு பெரிய தொகைக்கு?" என்று கேட்டாள் கம்மிய குரலில்.

கோபம் என்றால் என்ன என்றே தெரியாத ராமநாதனின் கண்கள் இப்பொழுது கோபத்தால் சிவந்து பழுத்தன. சடாரென்று திரும்பி, "அடே, கண்ணாயிரம்! எங்கேடா அவன்?" என்று இரைந்து கேட்டார்.

கதவின் பித்தளைப் பிடிகளுக்கு 'பாலிஷ்' போட்டுத் துடைத்துக் கொண்டிருந்த வேலைக்காரன் கண்ணாயிரம் பயத்துடன் ஓரடி முன்னால் வந்து, "சின்ன ஐயா தானுங்களே? அவரு காலம்பற வெளியே போனாருங்க; இன்னும் வரலீங்க" என்று குழறினான்.

"ஓகோ!" என்று வெறுப்புடன் உறுமிய டாக்டர், அபரஞ்சியம்மாளைப் பார்த்து, "சரியம்மா! உங்களுக்கு அந்தக் கவலையெல்லாம் வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் போகலாம்" என்று சொல்லிக் கொண்டே வேகமாக உள்ளே செல்லத் திரும்பினார்.

தயங்கி நின்ற அபரஞ்சியம்மாள், "டாக்டர்......!" என மெல்லிய குரலில் அழைத்தாள்.

ராமநாதன் அவளை ஏறிட்டு நோக்கினார்.

"இந்த விஷயமாகத் தம்பியை ஒன்றும் கோபித்துக் கொள்ளாதீர்கள் டாக்டர். அவர் ரொம்பவும் நல்ல பிள்ளை! அவருக்கு யாரோ சொல்லிக் கொடுத்துத்தான் அப்படிச் செய்திருப்பார். அதனாலே ..." என்று இழுத்தாள் அபரஞ்சி.

ராமநாதன் இதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் சரியென்று உள்ளே சென்றார். அபரஞ்சியம்மாள் நிம்மதியாக மூச்சுவிட்ட வண்ணம் அங்கிருந்து அகன்றாள்.

வேகமாக உள்ளே வந்த டாக்டரிடம், "இங்கே பாருங்கள்! சிவப்பிரகாசம் என்னமோ சொல்கிறார், என்னவென்று கேளுங்கள்!" என்று பரபரப்புடன் கூறிக்கொண்டே கையிலிருந்த டெலிபோன் ரிஸீவரை அவரிடம் நீட்டினாள் சுந்தரியம்மாள்.

ராமநாதன் ரிஸீவரை வாங்கிச் செவியில் பொருத்திய மறுகணம் அப்படியே ஸ்தம்பித்து நின்றார். பிறகு உயிரற்ற சிரிப்புடன், "ஓகோ!... அப்படியா?" என்று கேட்டவர் மீண்டும் தொடர்ந்து, "எனக்கு முன்பே தெரியும்!....ஆமாம்... அவனுடைய போக்கே அதுதான்!..... நாம் என்ன செய்ய முடியும்?....பரவாயில்லை.... நாங்கள் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். சரி; மற்றதை நேரில் பேசிக் கொள்வோம்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே டாக்டரின் தொண்டை அடைத்துக் கொண்டது. டெலிபோன் ரிஸீவரை வைத்துவிட்டு நிமிர்ந்தார் அவர்.

சற்றுத் தொலைவில் சுவரோடு சுவராகச் சாய்ந்து நின்று கொண்டிருந்த சுந்தரியம்மாளுக்கு விஷயம் புரிந்து விட்டது. தேவகியின் வீட்டுக்குப் போவதற்காக உடுத்துக் கொண்டிருந்த காசிப் பட்டுப் புடவையின் முன்றானையால் முகத்தைப் பொத்திக் கொண்டு செருமியபடித் தொடங்கினாள் அவள்.

இதைக் கண்ட ராமநாதனுக்குச் சினம் பொங்கிக் குமுறியது. "ஏ, சுந்தரி! நீ ஏன் இப்போது கண்ணைக் கசக்குகிறாய்?" என்று அதட்டிக் கேட்டார்.

"இந்த வீட்டில் ஒரு தெய்வம் நடமாடும் என்று எவ்வளவு ஆசையாக இருந்தேன். அந்த ஆசையெல்லாம் நிராசையாகிவிட்டதே" என்று விம்மிப் பொருமினாள் சுந்தரியம்மாள்.

தன் தம்பிக்குத் திருமணம் செய்து வைத்து அவனுக்குப் பிறக்கும் குழந்தையை ஆசை தீரத் தூக்கிக் கொஞ்சி மகிழலாம் என்றிருந்ததாலேயே அவள் இப்படி மனம் புழுங்கிச் சொல்கிறாள் என்பதை உடனே புரிந்துகொண்ட ராமநாதன் உள்ளூரச் சொல்லொணா வேதனை யடைந்தார். அந்த வேதனை திடீரென்று சினமாக வெடித்தது: "இந்த வீட்டிலா தெய்வத்தின் நடமாட்டத்தை எதிர்பார்த்தாய்? இங்கே ஒரு பேய்தான் நடமாடிக்கொண்டிருக்கிறது! அதை முதலில் இங்கிருந்து விரட்டியடித்தால்தான் இந்த வீடு உருப்படும்" என்று உரத்த குரலில் கர்ஜித்துக் கொண்டே மாடிப்படிகளிலேறி விரைந்தார் ராமநாதன்.

அதேசமயம், வேகமாக உள்ளே வந்த விவேகானந்தன், தனது அத்தானின் ஆக்ரோஷமான பேச்சைக் கேட்டு அப்படியே ஸ்தம்பித்து நின்றான். அந்த ஒரு விநாடி நேரத்தில் அவன் என்ன முடிவுக்கு வந்தானோ? வாசற்படிகளை விட்டு மளமள வெனக் கீழே இறங்கி, வந்த வழியே திரும்பி நடந்தான்.

மீயூஸிக் டைரக்டர் ஜமதக்கினியின் வீட்டிலிருந்து ஒரு விசித்திர ஒலி எழும்பியது. தொலைவிலிருந்து கேட்கும் போது ஏதோ ஒரு நாய்க்குட்டி அலறி ஓலமிடுவது போலத்தான் இருந்தது. ஆனால் அவ்வளவு சீக்கிரம் அப்படி ஒரு முடிவுக்கு வந்துவிட முடியாது. ஏனென்றால், ஸ்ரீமான் ஜமதக்கினி அவர்கள் ஒரு பிரபலமான சினிமா இசையமைப்பாளர்; புதிய இராக 'கல்பனை'யில் அவர் ஈடுபட்டிருக்கலாம்.

உள்ளமும் உடலும் சோர்ந்த நிலையில் வராந்தாப் படிகளின்மேல் ஏறி நின்ற விவேகானந்தன் மெல்ல எட்டிப் பார்த்தான். அங்கே ஓர் ஆச்சரியம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

ஆமாம்; கூடத்து அறையில் கட்டிப் போடப்பட்டிருந்த 'நீலாம்பரி' பதுங்கிப் பரிதாபமாக ஓலமிட்டுக் கொண்டிருந்தது. ஆவேசம் வந்தவர்போல் காணப்பட்ட ஜமதக்கினி அந்த அழகிய நாய்க்குட்டியைத் தம் கையிலிருந்த 'வயோலா' என்னும் வாத்தியக்கருவியினால் செம்மையாக மொத்திக் கொண்டிருந்தார்!

தயங்கி நின்றான் விவேகானந்தன். ஜமதக்கினி யாரிடமோ சண்டையிட்டுக் கொண்டு வந்திருக்கிறார் என்று அவனுக்குத் தோன்றியது. பெரிய மனிதர்களுக்குக் கோபம் வந்தால் அதை உடனே தமக்கு மிகவும் பிரியமானவர்கள் மீதுதானே திருப்பிவிடுவார்கள்?

"கேடுகெட்ட பீஸ்ட்! எல்லாம் உன்னால் வந்த வினைதான்" என்று உறுமிக் கொண்டே கையிலிருந்த வயோலாவை ஒரு பக்கம் வீசியெறிந்து விட்டுச் சோபாவில் வந்து தொப்பென்று சாய்ந்தார் ஜமதக்கினி.

"வணக்கம், சார்! வரக்கூடாத நேரத்தில் வந்துவிட்டேன் போலிருக்கிறது!" என்று புன்னகையுடன் கூறிக் கொண்டே உள்ளே வந்த விவேகானந்தன் ஒரு நாற்காலியில் அமர்ந்தான்.

"பேய் மணி! யாரோ 'எச்'சாம். உனக்காகக் காத்திண்டு இருக்கான்!"

சட்டென்று நிமிர்ந்த ஜமதக்கினி அவனை ஏற இறங்க விழித்துப் பார்த்தார். பிறகு கடகடவென்ச் சிரித்தவாறு, "அடடே! மிஸ்டர் விவேகானந்தனா? வாருங்கள், வாருங்கள்! வரவேண்டிய சரியான வேளையில்தான் வந்திருக்கிறீர்கள்!" என்றார்.

"என்ன சார், இன்று என்னவோ போல் இருக்கிறீர்கள்? ஏதாவது மனக் கஷ்டமா?" என்று பரிவுடன் விசாரித்தான் விவேகானந்தன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. எப்போதும் போலத்தான் இருக்கிறேன்" என்று விஷமக் குரலில் சொன்னார் ஜமதக்கினி.

"நான் ஒரு முக்கியமான விஷயம் பேசுவதற்காக வந்திருக்கிறேன்."

கண்களை இடுக்கிக் கொண்டு அவனை ஏறிட்டு நோக்கினார் மியூஸிக் டைரக்டர்.

"அதாவது, நீங்கள் எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும்..."

ஜமதக்கினி சோபாவின் விளிம்புக்கு நகர்ந்து வந்தார். ஏதோ சொல்லத் தயங்குவது போல் வாயைத் திறந்து மூடிய விவேகானந்தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, "டைரக்டர் சார்! எங்கள் வீட்டில் ஒரு தகராறு. நான் வெளியே வந்து விட்டேன். அந்த விவரங்களைப் பிறகு சொல்கிறேன். இப்போது நான் கேட்கும் உதவி இது தான்: இந்த உங்களின் வீட்டு மாடி காலியாகத்தானே இருக்கிறது? எனக்கு அதைக் கொஞ்ச நாட்களுக்கு வாடகைக்கு விடுங்கள்! மறுக்காமல் இந்த உதவியைச் செய்யுங்கள்!" என்றான் கவலை தோய்ந்த குரலில்.

ஜமதக்கினி இதைக் கேட்டு வெடிச் சிரிப்புச் சிரித்தார். சிரிப்பதைச் சட்டென்று நிறுத்திச் சர்வ அலட்சியத்துடன் பார்த்து, "என்ன மிஸ்டர் விவேகானந்தன்!. ஆட்டைக் கடித்து மாட்டைக் கடித்துக் கடைசியில் மனிதனைக் கடிக்கவே ஆரம்பித்து விட்டீரோ?" என்று கேட்டார்.

விவேகானந்தன் திடுக்கிட்டான்.

"என்ன மிஸ்டர், விழிக்கிறீர்? அந்தக் கோமாளிப் பயல் மோகன சுந்தரத்தை உருட்டி மிரட்டித்தான் பத்தாயிரம் ரூபாய் பறிக்கத் திட்டம் போட்டு விட்டீர்! அடுத்தபடியாக என் வீட்டிலே வந்து உட்கார்ந்து கொண்டு ஏதாவது நொண்டிச் சாக்கு கிடைத்ததும் எனக்கு வக்கீல் நோட்டீஸ் விட்டு இலட்சக்கணக்கில் நஷ்டஈடு கோரிப் பணம் பறிக்கலாம் என்று திட்டமா? தேர்தல் செலவுக்கு நிதி திரட்ட இது நல்ல வழிதான்! ஆனால் பகுத்தறிவு வாதியான உம்மைத் தவிர வேறு யாருக்கும் இம்மாதிரி அபூர்வ யோசனைகள் தோன்றாது!"

அடிபட்ட வேங்கை போல் துடித்தெழுந்தான் விவேகானந்தன்.

"அவசரப்படாதீர், நண்பரே! இம்மாதிரி நடிப்பெல்லாம் அடியேனிடம் இனிமேல் பலிக்காது. எனக்கு எல்லாம் தெரியும். எங்கள் பட முதலாளி மயில்வாகனனை ரகசியமாகச் சந்தித்து என் மியூஸிக் டைரக்ஷன் ஒப்பந்தத்தை ரத்து செய்து விட்டு வேறோர் ஆளைப் போட்டு அந்தக் கிராக்குப் பயலைப் புல்லாங்குழல் வாசித்துக் கொடுக்க ஏற்பாடு செய்ததும் நீர்தாமே? இந்த ஏற்பாட்டுக்காக அந்த மூன்று பேரிடமும் எவ்வளவு லஞ்சம் வாங்கினீர்? அதுவும் உமது தேர்தல் நிதிக்குத்தானா? 'பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன்' என்ற பழமொழி உமக்குத்தான் பொருந்தும்! படித்த பிள்ளையாண்டான் இல்லையா? அதனால்தான் ஆளை, அடுத்துக் கெடுக்கத் துணிந்திருக்கிறீர்! உம்மைப் போன்ற துரோகிகள் தப்பித் தவறித் தேர்தலில் ஜெயித்து விட்டால் ஊர் என்னவாகும்? குட்டிச்சுவர்! குட்டிச்சுவர்!"

அளவு கடந்த சினத்தால் கிடுகிடு வென்று நடுங்கினான் விவேகானந்தன். அவன் கண்கள் அனல் துண்டங்களெனச் சிவந்தன. முஷ்டிகளை முறுக்கி இறுக்கிப் பற்களை நறநறவெனக் கடித்தான். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய் அங்கிருந்து சரேலென்று வெளியேறினான். (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# சிறிதளவு ஸன்லைட்
## ஏராளமான துணிகளை வெளுக்கிறது
### —காரணம், அதற்கு நுரை அதிகம்

கண்ணாரக் காண்பதே மெய்: சிவகாமி வெளுத்த சட்டையின் வெண்மை நடராஜனின் முகத்தில் மகிழ்ச்சியாகப் பிரதிபலிக்கிறது. ஆடைகள், விரிப்புகள், துண்டுகள் அடங்கிய அடுக்கைப் பாருங்கள்—வெண்மையாகப் பளிச்சிடும் இவ்வளவுக்கும் அவள் உபயோகித்த ஸன்லைட் கொஞ்சம்தான்!

ஸன்லைட் சோப்பின் செழிப்பான நுரை அடித்துத் துவைக்காமலேயே அழுக்கை அறவே அகற்றி, துப்புரவாக வெளுத்து விடுகிறது. இன்றே உபயோகித்துப் பார்த்துத் திருப்தி பெறுங்கள்!




**பளிச்சென்றும், வெண்மையாகவும் சலவை செய்வது ஸன்லைட் சோப்**

S.267-X52 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு